# திருக்குறள் மெய்ப்பொருளுரை





பாவலரேறு
பெருஞ்சித்திரனார்

4

# பெருஞ்சித்திரனார்
# திருக்குறள் மெய்ப்பொருளுரை

(உரைச் சுருக்கம்)

**PERUNCHITHIRANAR'S**
**THIRUKKURAL**
**A PHILOSOPHICAL BRIEF COMMENTARY.**
(FOURTH PART)

**நான்காம் பகுதி**
குறட்பாக்கள் 181 முதல் 240 வரை

வெளியீடு
**தென்மொழி பதிப்பகம்,**
**பாவலரேறு தமிழ்க்களம்,**
1, வடக்குப்பட்டுச் சாலை,
மேடவாக்கம், சென்னை - 601 302.
தொலைபேசி : 044 - 22771231

| | | |
|---|---|---|
| பதிப்பு | : | முதல் பதிப்பு : தி.பி. 2037 மீனம் 19 (02.04.2006) |
| நூல் தலைப்பு | : | **பெருஞ்சித்திரனார் திருக்குறள் மெய்ப்பொருளுரை உரைச் சுருக்கம் – நான்காம் பகுதி** |
| ஆசிரியர் | : | பாவலரேறு பெருஞ்சித்திரனார் |
| வெளியீடு | : | **தென்மொழி பதிப்பகம், பாவலரேறு தமிழ்க்களம்,** 1, வடக்குப்பட்டுச் சாலை, மேடவாக்கம், சென்னை – 601 302. தொலைபேசி : 044 – 22771231 |
| அச்சாக்கம் | : | தென்மொழி அச்சகம், சென்னை – 601 302. |
| தாள் | : | வெள்ளைத்தாள் |
| பக்கங்கள் | : | 264 |
| அளவு | : | மடி(தெம்மி) 1/8 |
| படிகள் | : | 1000 |
| விலை | : | உரு. 100/- |

# பெருஞ்சித்திரனார்
# திருக்குறள் மெய்ப்பொருளுரை
# உரைச் சுருக்கம்

அதிகார அடைவுகள்

அறம்முப்பத் தெட்டு பொருளெழுப தின்ப
உறவிருபத் தைந்தென் றுரை.

பாயிரம் நான்காம் பயனறம்முப் பன்னான்காம்
ஆயும் பொருளெழுப தாகுமே -- தோயுமுண்மைக்
காதல் மனைவியொடு நுண்காமம் ஐயைந்தாம்
ஓதும் திருக்குறள்என் றோது.

# வெளியீட்டுரை

**துரைமா. பூங்குன்றன்** அறி.இ., க.மு., மெய்.மு.,

நம் பாவலரேறு ஐயா அவர்கள், இயற்கையின் இயக்கங்கள், அமைப்புகள், போக்குகள் அனைத்தையும் மெய்ப்பொருளறிவோடு பொருத்தி இவை ஒரு நெறியோடுதான் இயங்கவல்லன எனக் கூர்ந்தாயும் பழக்கம் உள்ளவர்கள். அனைத்து வாழ்வியல், அறிவியல் அறிவும் உள்ளடக்கியதுதான் மெய்ப்பொருளறிவு என முறைப்படுத்திக் கொண்டவர்கள்.

எனவே, திருக்குறளின் கருத்துகள் மெய்யறிவுப் பார்வையில் பார்க்கத் தக்கன எனப் பார்வையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். அப்பார்வையில் மிகவும் புதுமையான பொருள்களை, ஆங்காங்குத் திருக்குறளைப் பற்றிய சொற்பொழிவுகளில் வெளிப்படுத்துவார்கள். அரசியல் நெருக்கடிக் காலமான 1975-76ஆம் ஆண்டுகளில் அற்றை அரசு இவ்வுலக நடைமுறை வாழ்வினின்று பிரித்து ஓராண்டுக் காலம் ஐயா அவர்களைக் கொடுஞ்சிறையில் வைத்திருந்த காலத்தில்தான் திருக்குறளை மெய்ப்பொருள் நோக்கில் நோக்கி, அதைச் சார்ந்தே உரையெழுத அவர்களுக்கு எண்ணம் எழுந்தது. எனினும் திருக்குறளுக்குத் தாம் உரை எழுத விழைந்த நோக்கத்தை ஐயா அவர்களே தம் பொது முன்னுரையில் விளக்கியெழுதியுள்ளார்கள். அப் பொது முன்னுரை ஒவ்வொரு பகுதியிலும் இடம் பெறவில்லையென்ற கரணியத்தால் அப்பகுதியை மட்டும் உடனடிப்பார்வைக்கு இங்கு அளிக்கிறோம். இதை முழுமையாகப் பொதுமுன்னுரை தொகுதியில் காணலாம்.

## "உரை எழுத விழைந்த நோக்கமும் சூழலும் உருவாக்கத் திட்டமும்!

அழிவற்ற நம் அரும்பெரும் திருக்குறள் நூலுக்கு இன்றுகாறும் நூற்றைம்பதுக்கு மேற்பட்ட உரைகள், அது தோன்றிய நம் அறத்தமிழ் மொழியிலும், அண்டை அயல் மொழிகளிலும் தோன்றித் துலங்கி, மூல நூலுக்கு உயிர்ப்பும் செழிப்பும் சிறப்பும் பரப்பும் உயல்வும் பயில்வும் ஊட்டி வருகின்றன. திருக்குறள் போல் உலகில் தோன்றிய வேறு எம்மொழி நூலுக்கும், எவ்வற நூலுக்கும் இப் பலர்பால் உரைப்பேறு வாய்த்ததில்லை என்று வலிந்தும் துணிந்தும் கூறலாம்.

மக்கள் குலம் முழுமையும் கருத்தினும் செயலினும் மேம்பாட்டினும் அளாவியும், அனைத்துக் காலத்தையும் இடத்தையும் தழுவியும் நிற்கும் ஒரு தனிப்பேறாய் நின்றிலங்கும் ஓர் அரும்பெரும் அரிய அறநூலுக்கு, இத்துணை மாந்தப் பார்வை செல்வதும், அதன் மேல் இத்துணை ஆய்வு நோக்குகள் கொள்ளுவதும் வியப்பன்று; உரைப் பெருக்கம் சார்வது செயற்கையுமன்று; இயற்கையே! இந்நிலை இந்நூலுக்குப் பெருமையே தவிர, எனைத்தானும் சிறுமையே அன்று.

ஆயினும், இந்நூலுக்கு இன்றுவரை வெளிவந்த எம் கண்களிற்பட்ட நூலுரைகள் யாவும், அந்நூலின் கருப் பொருளுக்கும் திருப்பொலிவிற்கும், அஃகியகன்ற அறிவுச் செறிவிற்கும், உணர்வுத்திணர்வுக்கும், மெய்ப் பொருளுக்கும், உய்ப்பு அருளுக்கும் ஏற்றவாறு செய்யப் பெற்றுள்ளனவோ எனில், எம்மைப் பொறுத்த அளவினும் எம் சிற்றறிவிற்கு எட்டிய உணர்வினும் இல்லை என்றே சொல்ல வேண்டியுள்ளது.

இது பற்றியெல்லாம், கடந்த அரசியல் இருட்காலமாகிய **1975-76**-ஆம் ஆண்டுகளில், யாம் சிறைப்படுத்தப் பெற்று, ஓராண்டுக் காலம், சென்னை, நடுவண் சிறையுள் வைக்கப் பெற்றிருந்த பொழுது, தீவிரமாகச் சிந்திக்கவும், அதன் வழித் தக்கவொரு தீர்வுக்கு எம்மைக் கொளுவிக்கவும் வேண்டியிருந்தது.

இவ் வகையில், எம் விழித்திறவுக்கு மொழிப்புலங் காட்டிய, விழுப்பெருந் தோன்றல், தமிழ்ப்பேராசான், மொழிஞாயிறு **ஞா.தேவநேயப் பாவாணர்** புலப்படுத்திய, **'திருக்குறள்**

**தமிழ்மரபுரை**'யும், எமக்கு ஒரு சிறிதும் நிறைவளிக்கவில்லையெனின், பிறர் பிற உரைகளெல்லாம் பற்றிக் கூறுதல், வறட் பாறைக்கண் வளந்தேடுதல் போன்றதே! சுருங்கக் கூறுமிடத்து, திருக்குறள் - பரிமேலழகர் உரையே ஒரு பொறுக்கு மணியாக உள்ளது எனலாம். ஆனால், அவரின் இன, மதக் காப்புணர்வாலும், தமிழறக் காழ்ப்பெரிவாலும், மூல விடங்களிலெல்லாம் பெய்து போகிய ஆரியப் பார்ப்பனீயச் சார்புரைகளாலும், அவர் பழிக்கப்பட வேண்டிய அல்லது கண்டிக்கப்பட வேண்டிய - ஒருவராகவே உள்ளாரேயன்றி, அவர் கண்டு காட்டிய உரையூற்றம் இல்லாமற் போமாயின், திருக்குறள் மணியின் முழு ஒளிச் சிதறலையும் உலகம் உணர்ந்திராது என்னும் உண்மையை யாரும் மறைத்தோ மறுத்தோவிடற்கியலாது. எனினும் பரிமேலழகர் உரையின் புரைகளைப் பாவாணர் காட்டிய ஒருவகைப் பாங்கு ஓரளவு போற்றுதற்குரியதே என்க. அது, திருக்குறள் நோக்கிற்கே ஒரு திருப்பத்தைத் தந்தது எனலாம். ஆயினும், அவரும் பெரும்பாலான விடங்களில் பரிமேலழகர் பதித்துச் சென்ற காலடிகளின் மேலேயே தம் காலடிகளையும் வைத்துச் சென்றுள்ளது யாவர்க்கும் எளிதே புலப்பட்டு விடும் தன்மையதே.

இனி, பாவாணர்க்கு யாம் தந்த உரைச் சிறப்புப் பாயிரத்துள்,

*'பத்துரைக்கு மேலும் பரிமே லழகரோ(டு)*
*ஒத்தவுரை நூறுசெய்தும் ஒன்றாமே – மெத்ததிரு*
*வள்ளுவனார் நூலுக்கு வாய்மை உரைசெய்தார்*
*தெள்ளுதமிழ்ப் பாவாணர் தேர்ந்து'*

- பாடல்: 1.

**'திருக்குறள் தமிழ்மரபுரைச் சிறப்புப் பாயிரம்'.**

*'தேவநே யன்என்னும் தேர்ந்தமதிப் பாவாணர்*
*தேவத் திருக்குறட்குத் தீர்ந்தவுரை – மேவியபின்*
*மற்றோர் உரைசெயவும் மானுவரோ? மானுவரேல்*
*கற்றோர் நகைப்பர் கலித்து'*

- மேற்படிநூல், பாடல்: 10.

- என்றோர் உறுதி கூறியிருந்ததும், பின்னர் யாம் மேலும் ஓர் உரையெழுதத் துணிந்ததும், காலத்தால் நேர்ந்த கட்டாயக் கருத்து வெளிப்பாடுகளே! அவ்வெளிப்பாட்டிற்கும்

அம்மெய்ப்பொருள் உணர்வே கரணியமாக அமைந்ததெனில், அது புனைவோ பொய்யோ ஆகா தென்க.

இனி, திருக்குறள் பற்றிய பெருமை கூறுகையில், யாவரினும் மேலாகவும் சுருக்கமாகவும், இடைக்காடர்,

*'கடுகைத் துளைத்(து) ஏழ் கடலைப் புகட்டிக்*
*குறுகத் தறித்த குறள்'*

- *தி.வ.மா:* **54.**

என்றும், ஔவையார் அதனினும் நுட்பமாக,

*'அணுவைத் துளைத்(து) ஏழ் கடலைப் புகட்டிக்*
*குறுகத் தறித்த குறள்'*

- *தி.வ.மா:* **55.**

- என்றும் கூறுவர். இங்கு இருவரும் அஃது ஒரு கடல் போன்றது என்று கூறியது எண்ணி வியக்கத்தக்கது. உண்மையிலேயே திருக்குறள் சிந்தனையளவிலும், சொல்லளவிலும் கருத்தளவிலும், காலத்தையும் இடத்தையும் அளாவிப் படர்ந்து விரிந்து கிடக்கும், அறிஞர்கள் கடப்பதற்கு அரிதான ஒரு கடலைப் போன்றதே! அக்கூற்று மிகையன்று; அருமையும் பெருமையும் ஒருமையும் மிக்கதே!

அஃது அவ்வாறாயின், அதற்கு உரையெழுதுவது என்பதும், அக் கடலைக் கடைந்து, கருத்து வெண்ணெய் எடுத்து, உண்மை நெய் உருக்குகின்ற அளப்பரும் அருஞ்செயலாகும் என்பதும் உணரத்தக்கதாகும். ஆனாலும் திருக்குறள் கடலில் ஒருவாறு நீந்தியும் மூழ்கியும் ஆழங்கண்டும் அகலம் பார்த்தும், ஆங்குற்ற அணிமணிகளையும், நனி செல்வங்களையும் வாரிக் கொணர்ந்து கரை சேர்ப்பதும், பிறர் அறியக் காட்டுவிப்பதும் மகிழ்விப்பதுமே அத்துறையின்கண் போந்துநிற்கும் அனைத்துப் பேரறிஞரினதும் செய்கையாகும் என்க.

என்னை? அதற்குக் காரணம் அத்தனைச் சுரங்கப் பொருள்கள் அதில் உள. அத்தனை அறிஞர் பெருமக்களும் காலந்தோறும் அச்சுரங்கத்துள் இறங்கி அவரால் இயலும் அணிமணிகளைச் சேர்க்கும் அறிவுப் பணியே இவ்வுலகிற்கு அவர்கள் தரும் செல்வச் சேர்ப்பாகும்; அவர்கள் விட்டுச் செல்லும் திருவறிவு வைப்பாகும்.

எனவே, திருக்குறளுக்கு உரைகள் மிகுதி, அதன் அறிவுப் பெருக்கத்தையே உணர்த்தும், என்க.

'முன்னம்பலர் உரைகாணினும்
முதற்பாவலர் நூலோ
இன்னம்பலர் உரைகாணினும்
இயல்பிற்றது மெய்யே!
சொன்னம்பல வென்னில்சில
சொல்வல்லிது மாண்பார்
பொன்னம்பல நாமன்முதற்
புலவீர் நனிகேண்மின்!'

- தனிப்பாடல்.

- என்னும் ஒரு பழம் பாடலின் உண்மையை ஓர்க.

மெய்ம்மங்கள் என்றும் உண்மையின் வடிவங்களே. இருப்பு நிலைகளே. வானும், புடவிகளும், கதிரும், விண்மீன்களும், காற்றும், நெருப்பும், நீரும், உலகமும், உயிர்களும், உயிருடல்களும், இவையுள்ளடக்கிய இயற்கையும் மெய்ம்மங்கள்தாம். மாந்தனும் ஒரு மெய்ம்மமே! அவன் சிந்தனைகளும் ஒளியையும் காற்றையும் போலும் மெய்ம்மங்களே! இயற்கையும் மெய்ம்மக்கூறே. அவற்றின் வடிவமே! இனி, இன்னும் தெளிவாகச் சொன்னால், அணுக்களும், அண்டங்களும் அவற்றின் இயக்கங்களும் மெய்ம்மமே! அவற்றின் தவறும் சரியும்கூட மெய்ம்மமே! அவற்றின் விரிவும் விளக்கங்களும் கூட மெய்ம்மமே!

- இவற்றின் மெய்ம்ம இருப்பையே திருக்குறள் கூறுகிறது. மெய்ம்மங்களின் - இயற்கையின் சுழற்சியிலே மாந்த மெய்ம்மத்தை மட்டும் தனியே பிரித்தெடுத்துக் கூர்மைப் படுத்தி, அதன் இயக்க நிலைகளைக் காட்டும் முயற்சியே திருக்குறள். அதன் முடிவு காண்கின்ற முயற்சிகளே உரைகள். அவற்றின் வெற்றியும் தோல்வியும் காலத்தையும் கருத்தையும் பொறுத்தன.

மாந்தருள் ஆண், பெண் பெயர்களும், ஆணுக்குத் தந்தை, மகன், அண்ணன், தம்பி, நண்பன், உறவன், கணவன் - முதலிய பெயர்களும், பெண்ணுக்குத் தாய், மகள், அக்கை, தங்கை, நண்பி, உறவி, மனைவி - முதலிய பெயர்களும், மாந்த மெய்ம்மத்தின் இருப்பு மாற்றங்களே! இவர்தம் உறவையும்

உறழ்வையும், அவற்றால் விளையும் பயன்களையும் விளக்குவதே திருக்குறள். அவற்றை மேலும் நன்கு புலப்படுமாறு விளங்கச் செய்வனவே உரைகள்! அவற்றின் துல்லியத்தைக் காண்பதே இம் மெய்ப்பொருள் உரை!

இனி, திருக்குறளில் இவ்வளவுதாம் சொல்லலாம் என்பதில்லை; இன்னமும் சொல்லலாம்; எவ்வளவும் சொல்லலாம். உலக உயிர்களில் சிறந்து நிற்கும் மாந்தனின் உறவுகளையும், துய்ப்புகளையும், இன்ப துன்பங்களையும், எழுச்சி ஒடுக்கங்களையும் ஒருவாறு அடையாளம் காட்டி விளக்கிக் கூறுகிறது, திருக்குறள். அவற்றை இஃது இன்னின்னது என்று சுட்டிக் காட்டுகிறது இவ்வுரை.

இதில் சாதியில்லை; இனமில்லை. மாந்த இனத்தை வேறு பிரிக்கும் எந்த வேற்றுமைக் கூறும் இதில் இல்லை, என்க.

காற்று, உலகெங்கும் வீசிக்கொண்டிருந்தாலும் ஓர் இடத்திலும் உறைந்து நின்று விடாதது போல், மாந்த இனம் பல்வேறு இயக்கங்கட்கு ஆட்பட்டிருந்தாலும், ஒன்றினும் உறைந்துவிடக்கூடாது என்பதே திருக்குறள் கூறும் மாந்த மெய்ம்மம்.

மாந்தன் இயங்குவதுதான் இல்லறம், அரசியல், பொருளியல், வாழ்வியல்!

அவன் நின்று நிலைத்துவிடுவது தான் துறவறம், பேரா இயற்கை!

இந்நிலைகளையெல்லாம் முற்ற முடிந்த நிலையில் அடையாளம் காட்டிப் பேசுவதுதான் இம் மெய்ப்பொருள் உரை!"

இயல்பாகவே ஐயா அவர்களின் மெய்ப்பொருள் நோக்குக்குத் திருக்குறள் மிகவும் பொருந்தி வந்ததை உணர்ந்தார்கள். தாம் உணர்ந்த மெய்ப்பொருள் உணர்வை வெளிப்படுத்தத் திருக்குறளை ஒரு களமாக எடுத்துக்கொண்டாதாகவும் கூறினார்கள்.

நெருக்கடிக்காலச் சிறையினின்று வெளிப்பட்டபின், தாம் எழுதிய உரைக்குறிப்புகளைப் படியெடுக்கவும் பிரிக்கவும் துணையாளர்கள் தேவைப்பட்டனர். அப்போது அப்பணிச்சுமை பற்றி அனைவரிடமும்

விளக்கினார்கள். அக்கால் தலைமைச் செயலகத்தில் பணியாற்றிவந்த திரு. வடிவேல் இராவணன், மந்தைவெளிப் பள்ளித் தமிழாசிரியர் திரு. தமிழ்நாவன் போன்றோர் ஓரிரு திங்கள் தொடர்ந்து மாலை நேரங்களில் படியெடுத்தும் வகைப்படுத்தியும் உதவி செய்தனர்.

நாள் எந்நேரமும் உரையைப் பற்றிய எண்ணமும் பேச்சுமாகவே ஐயா இயங்கி வந்தார்கள். இதற்கிடையில் 1982 இறுதியில் திரு. இளமாறன் அவர்கள் பவானியில் திருக்குறள் தொடர் சொற்பொழிவு நிகழ்ச்சி ஒன்று அமைத்தார். இச்சொற்பொழிவின் பின் இந்நூல் விரைவில் அமைவதற்கான சூழல் அமைந்ததெனினும் நடைமுறைப் போக்கில் அச்சூழல் நில்லாமற் போனது.

இதற்கிடையில் ஐயாவின் மகளான தங்கை செந்தாழை பட்டம் முடித்து வீட்டில் இருந்த காலத்தில் இப்பணிக்குத் துணையாக இருந்தது குறிப்பிடத்தக்கது. எனினும் அவர்க்கும் மணவாழ்க்கை அமைக்கப்பட்டது.

அதன்பின் சரியான துணைச் சூழல்கள் வாய்க்காமலும் இல்லத்தில் ஏற்பட்ட சிற்சில சிக்கல்களாலும் உரை எழுதும் பணி தடைப்பட்டது. அதன்பிறகு அரசியலிலும் பல மாற்றங்கள் ஏற்பட்டு வந்தன. ஐயாவின் பணி இதழ் வெளியீடுகளிலேயே தொடர்ந்து இருந்தது. இதற்கிடையில் 1991 சூன் மாதம் செயலலிதா ஆட்சியின் கொடுமையான சூழல் தமிழகத்தில் தொடங்கியது. ஐயா அவர்கள் மிகவும் இச்சூழலால் தமிழினத்தை எண்ணி வருந்தியிருந்தார்கள். அத்துடன் ஐயாவின் கண்களில் கதிர்முறையில் அறுவை செய்ய நேர்ந்தது.

இவ்விரண்டு அழுத்தமான நிகழ்வு எண்ணங்களோடு தென்மொழி அச்சகம் சென்றிருந்தபோது, தென்மொழி அச்சகப் பெயர்ப்பலகை வேறு காற்றினால் வீழ்ந்திருந்தது கண்டு திடுக்குற்றார். இவைபோன்ற மனச்சுமையான எண்ணங்களோடு ஒருநாள் இரவு உறக்கத்தினிடையில் திடீரென்று விழிப்பு வந்தபோது திருக்குறள் உரையை முடித்துவிட வேண்டும் என்ற முனைப்புப் பீறிட்டு எழுந்தது.

இதன்படி முதலில் உரைச் சுருக்கத்தை வெளியிட்டுவிட வேண்டும் என்ற உந்துதலில் அதற்கான பணிகளை மும்முரமாகத் தொடங்கினார். தென்மொழியில் முன்வெளியீட்டுத் திட்ட அறிக்கைகள் வெளிவந்தன.

அச்சிடுவதற்காகப் பெருந்தொகை வேண்டியிருந்ததாகையால் அத்தொகையில் தென்மொழி நெஞ்சங்களான திருவாளர்கள் ஈரோடை அரசமாணிக்கனார், மா.செ. தமிழ்மணியார், நிலா. வேங்கடவனார் முதலியோர் ஐயா அவர்களிடம் நூல் வெளியீட்டிற்குத் துணையாகத் தொகை விடுத்திருந்தனர். மேலும் முன்வெளியீட்டுத் திட்டத்தின்படி தென்மொழி அன்புள்ளத்தினர் சிலரும் தொகை விடுத்திருந்தனர்.

கதிரச்சுக்கோப்பில் பணி விரைவுபடுத்தப் பெற்று 10.3.93 அன்று வெளியிட்டுவிடத் திட்டமிடப்பெற்றது. இவ்வாறு மும்முரமாகத் திட்டமிட்டுப் பணி முனைப்பில் இருந்தபோது 1993 சனவரி 26-ஆம் பக்கலில் 'தடா'வில் ஐயா சிறைப்படுத்தப்பட்டார்கள். இந்த முறை சிறை ஐயாவிற்கு மன நைவையும், உடல் நலிவையும் ஏற்படுத்தியது. ஏழு திங்கள் சிறை வாழ்விற்குப் பின் வெளிவந்த பிறகு மீண்டும் திருக்குறளை வெளியிடும் பணியில் முனைந்தார். திருத்தத்திற்குப் பின் உரை நீண்டது.

இல்லறவியல் பகுதி வரை (240 குறள்களுக்கு மட்டும்) முழு நிறைவுபடுத்திவிட்டு முடிக்கும்போது அதைப் பற்றி ஐயா அவர்கள் நகைச்சுவையாகக் குறிப்பிட்டுப் பேசுகையில், "இல்லறவியல் வரையில் முடித்துவிட்டேன். இனி, துறவறவியல்தான் போக வேண்டும்" என்று கூறினார்கள். ஆனால் வாழ்க்கையையே துறப்பார் என்று அப்போது யாரும் எண்ணிப் பார்க்கவில்லை.

ஐயா அவர்களின் மறைவிற்குப் பின்னர், உயிர் முயற்சியான இந்நூலை வெளியிட வேண்டும் என்ற துடிப்பு அனைவரிடமும் இருந்தது. ஆனால் குறிப்புகள் ஒன்றும் விடுபடாமல் தொகுத்து வருவதற்குக் காலம் எடுத்துக்கொண்டது. முதல் நூறு திருக்குறளுக்கான உரை முதல் பகுதியை தி.பி.2028 (10-03-1997)-இல் முதல் பதிப்பாக வெளிக்கொணர்ந்தோம். இப்போது ஐயா அவர்களின் 73-ஆம் ஆண்டு நிறைவையொட்டி 2006-இல் இந்த முதல் பகுதியின் இரண்டாம் பதிப்பை வாங்குவோரின் சுமையைக் கருதி, பொதுமுன்னுரையை முதல்தொகுதி எனப்பிரித்தும் அத்துடன் இரண்டாம் தொகுதி, மூன்றாம் தொகுதி, நான்காம் தொகுதியெனத் தனித்தனியாகவும் தொடர்ந்து வெளிக்கொணர்ந்துள்ளோம். மேலும் ஐயா அவர்கள்,

துறவறவியலுக்கு எழுதிய அதிகார முன்னுரையையும், அடுத்து அவர் தொகுத்திருந்த அனைத்துக் குறள்களுக்குமான அரிய குறிப்புரை களையும் தொடர்ந்து வெளியிடவுள்ளோம்.

ஐயா அவர்கள் இவ் வடிவங்களைப் பார்க்காமல் சென்றிருந்தாலும் அவர்கள் குறித்திருந்தபடியே பதிப்புரையைத் திருக்குறள்மணி புலவர் இறைக்குருவனார் அவர்களும் வெளியீட்டுரையை நானும், தகவுரையைச் சொல்லாய்வு அறிஞர் ப. அருளியார் அவர்களும் எழுத அவை இணைக்கப்பட்டுள்ளன. திரு. அருளியார் எழுதிய தகவுரையை ஐயா அவர்களே பார்க்க நேர்ந்தது.

இம் மூன்றாம் நான்காம் பகுதிகள் கையெழுத்துப் படியிலிருந்து தமிழ்நிலத்தில் கணினியச்சுக்குக் கொணர்ந்த திருவாட்டி. அ.மு. செந்தாமரை செம்பரிதி, திருவாட்டி. செல்லின் சீவராசு ஆகியோர்க்கும், இதைத்தம் வினையழுத்தங்களுக்கிடையில் அக்கறையோடு முன்பாதியை மெய்ப்புப் பார்த்தளித்த எம் அன்புறவான ஐயா புலவர். கி.த.பச்சையப்பனார் அவர்களுக்கும், உடல் நலக்குறைவாக இருந்தும் அதைப் பொருட்படுத்தாமல் தென்மொழி இல்லத்திலேயே வந்திருந்து மெய்ப்புப்பார்த்த எம் அன்பு தமையனார் புலவர் கு. அண்டிரன் ஐயா அவர்களுக்கும், தென்மொழி பதிப்பகம் வெளியிடும் நூல்களின் அனைத்துப் பணிகளையும் மேற்பார்வையிட்டு வியக்கிவரும் திருக்குறள்மணி புலவர் இறைக்குருவனார் அவர்களுக்கும், தென்மொழியின் சுமை நேர்ந்தபோதெல்லாம் ஐயாவின் காலத்திலிருந்தே தோள் கொடுத்துவரும் குடும்பவுறுப்பினரான தென்மொழி ஈகவரசன் அவர்களுக்கும், அனைத்து நூல்களுக்கும் முகப்பு அட்டைவடிவங்களை உருவாக்கிய எம் மூத்த மகன் செல்வன் மா.பூ. தமிழ்மொய்ம்பனுக்கும் மற்றும் இந்த நூல்கள் உருவாகத் துணைநின்ற அனைத்து அன்பு நெஞ்சங்களுக்கும் எம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# அ-2 இல்லறவியல்

## அ-2-15 புறங்கூறாமை -19

### *அதிகார முன்னுரை*

*'**புறங்கூறாமை**' என்பது, புறம் + கூறாமை என்னும் இரண்டு சொற்களின் இணைச்சொல்.*

*'**புறத்தே போய்க் கூறாமை**' - புறங்கூறாமை ஆயிற்று.*

*புறம் - இடம், பக்கம்.*

*- உட்புறம், வெளிப்புறம், முன்புறம், பின்புறம், இடப்புறம், வலப்புறம், கீழ்ப்புறம், மேற்புறம், கிழக்குப் புறம், மேற்குப் புறம், வடக்குப்புறம், தெற்குப் புறம் முதலிய விரிவான வழக்குகளை நோக்குக.*

*- ஆனாலும், 'புறம்' என்று தனித்துவரின், 'அகம்' என்னும் சொல்லுக்கு மறுதலையான வெளிப்புறத்தையே - அயலிடத்தையே குறிக்கும்.*

*எனவே, புறங்கூறுதல், 'அயலிடத்தில் போய்க் கூறுதல்' ஆயிற்று.*

*அந்நிலை, இருவர்க்குள் அகமாக உள்ள செய்தியைப் பற்றி, அயலிடத்தில் - அயலாரிடத்தில் போய்க் கூறுதல் என்னும் பொருள் விரிவு பெற்றது.*

ஆனால், இப் பொருள் இன்னும் விரிவு பெற்று, 'ஒருவரைப் பற்றிய கமுக்கமான, அகநிலையான, தனிப்படியான செய்திகளைப் புறத்தே உள்ளவர்களிடம், அயலிடத்தவர்களிடம் போய்க் கூறுதல்' என்று பொருள் விரிவு பெற்றது.

ஒருவரைப் பற்றி மற்றொருவர் வெளியிடத்தவர்களிடம் போய்ச் சொல்லும் செய்தி, மனவியல்படி, எப்பொழுதும், அவரைப் பற்றிய குற்றம், குறைகள், மெலிவு நலிவுகள், உள்முகமான கமுக்கங்களாகவே இருக்கும்.

மக்கள் பேசுகின்ற பேச்சுகளில் பெரும்பாலும் பிறரைப் பற்றிப் பேசுவதே கூடுதலாக உள்ளது. தம்மைப் பற்றிப் பேசுவது எப்பொழுதும் குறைவாகவே உள்ளது என்பது ஒரு மாந்த மனவியலாகும்.

பிறரைப் பற்றிப் பேசுவதினும், அவரைப் பற்றிய நல்ல செய்திகளை ஒருவர் மற்றவரிடம் அவ்வளவு விருப்பமாகச் சொல்வதில்லை; மற்றவரும் அவற்றை அவ்வளவு விருப்பமாகக் கேட்பதில்லை. எனவே, உலகியல்படி கெட்ட செய்திகள் பரவுவது போல, நல்ல செய்திகள் அவ்வளவு விரைவாக உலகியலில் பரவுவதில்லை.

ஆகவேதான், ஒருவர் பிறரைப் பற்றிய நல்ல செய்திகளையே சொல்லுதல் வேண்டும்; சிறுமையான செய்திகளைச் சொல்லாமல் புறங்காத்துக் கொள்ளுதல் வேண்டும் என்று சான்றோர் அறிவுறுத்துவர்.

**'கண்டு ஒன்று சொல்லேல்'** - ஆத்திசூடி:14

**'ஒருவனைப் பற்றி ஓரகத்திரு'** - கொன்றைவேந்தன்:10

**'கோட் செவிக் குறளை காற்றுடன் நெருப்பு'** - மேற்படி:24

**'கெளவை சொல்லின் எவ்வருக்கும் பகை'** - மேற்படி:25

**'குற்றம் ஒன்றும் பாராட்டித் திரிய வேண்டாம்'** - உலகநீதி:4:1

**'பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்**
**மறவாமே நோற்பதுஒன்று உண்டு பிறர்பிறர்**
**சீர்எல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து**
**யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல்'** - நீதிநெறி விளக்கம்:19

**'அறம்கூறும் நாஎன்ப நாவும்; செவியும்**
**புறங்கூற்றுக் கேளாத என்பர்'** - அறநெறிச்சாரம்:203:1-2

**'கொழித்துக் கொளப்பட்ட நண்பி னவரைப்**
**பழித்துப் பலர்நடுவண் சொல்லாடார் என்கொல்**
**விழித்தலரும் நெய்தல் துறைவ! உரையார்**
**இழித்தக்க காணின் கனா'** - பழமொழி:182

**'தீய பரப்புச்சொல் சான்றார்வாய்த் தோன்றா'** - பழமொழி:95:3

புறங்கூறுதல், பிறன்பழி கூறுதல், தூற்றுதல், குற்றங்கூறுதல், குறளை கூறுதல், புறம் பறைதல், கோள் மூட்டுதல், கொத்தறை சொல்லுதல், அவதூறு கூறுதல் எல்லாம் ஒருசெயல் குறித்த சொற்கள் ஆயின.

இதனைத் தொடர்புற்றவர் முன்னிலையிலேயே கூறுதற்கு அஞ்சியோ, அல்லது அவரைப்பற்றிப் பிறரிடம் கூறி, அவரை இழிவுபடுத்த - பழிப்படுத்த - குற்றப்படுத்த - வேண்டும் என்னும் அறமல்லாத கொடிய நோக்கத்தாலோ நிகழ்வதாயிற்று. இதில் ஊதியம் கருதுதலும் உண்டு.

ஒருவரைப் பற்றிய குற்றங்களை அல்லது குறைகளை அல்லது தவறுகளை அவரிடமே சுட்டிக் கூறுதல், 'இடித்துக் கூறுதல்' எனப்படும். இது அவரைத் திருத்தும் நோக்கத்துடன் கூறுதல் ஆகும். இந்நிலை உண்மை நண்பர்க்கு உரியது. இதனை ஆசிரியர்,

**'நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்**
**மேற்சென்று இடித்தற் பொருட்டு'** - 784

என்று பெருமைக்குரியதாகக் கூறுவர்.

அவ்வாறு இடித்தும், கடிந்தும், அவர் முன்னிலையில் நின்றே அவரிடம் கூறுதல், அவர் அக்குற்றத்தைத் திருத்திக் கொள்ளல் வேண்டும் எனும் நல்லெண்ணத்தாலும், நண்பர்மேல் கொண்ட அக்கறையினாலும் நிகழ்வது ஆகும். இதனை ஆசிரியர்,

**'கண்ணின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க**
**முன்னின்று பின்நோக்கச் சொல்'** - 184

**'அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய**
**வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்'** - 795

என்று கூறி விளக்குவர்.

இதற்கு மாறாக, நட்புப்போல், மனைக்கண் மிக நெருங்கிப் பழகியிருந்து, அவர்களைப் பற்றிய செய்திகளை யெல்லாம் தெரிந்து கொண்டு, அவற்றைப் போய் மற்றவர்களிடம் பழித்துத் தூற்றுவார் தொடர்பை எந்த வகையிலும் ஒருவர் தவிர்க்க வேண்டும் என்று கூறுவார், ஆசிரியர்.

**'எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ**
**மன்றில் பழிப்பார் தொடர்பு'** - 820

இக் குற்றத்தை ஆசிரியர் 'கயமை' என்னும் சொல்லால் இழித்துக் கூறுவர். அவ்வாறு நடப்பவரைக் 'கயவர்' என்று சுட்டுவர்.

**'அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட**
**மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான்'** **- 1076**

இனி, 'புறங்கூறாமை'யைக், 'காணாதவழிப் பிறரை இகழ்ந்துரையாமை' - என்பார், பரிமேலழகர்.

'யாவரையும் இகழ்ச்சியானவற்றைப் புறத்து உரையாமை' - என்பார், மணக்குடவர்.

'ஒருவர் குற்றத்தையும் புறஞ்சொல்லாமை என்பார், பரிதியார்'.

பாவாணர், 'ஒருவரில்லாவிடத்து, அவரைப் பற்றித் தீதாகப் பேசாமை' - என்பார். அவர், மேலும்

'புறம்' - முதுகு அல்லது பின்பக்கம். ஒருவரில்லாத இடம் அவருக்குத் தெரியாத முதுகுப் பக்கம் போன்று இருத்தலால், புறம் எனப்பட்டது. புறத்தில் கூறுதல் புறங்கூறுதல். அது 'புறம்' எனவும் படும்' என்று விளக்குவார்.

இவையனைத்தும் ஒருசார்புப் பொருளுடையவையே.

இனி, 'புறங்கூறாமை'யின் முழுப்பொருள், 'ஒருவர் குற்றம் குறைகளை மற்றவரிடம் சென்று, பழித்தும் இழித்தும் கூறாமையே' ஆகும்.

இப் பொருள் இவ்வதிகாரத்துள் நன்கு புலப்படுத்தப் பெற்றுள்ளது.

**'பிறன்பழி கூறுவான்'** **- 186**

**'துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்'** **- 188**

**'ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்'** **- 190**

இதனை, ஓர் அறமாகக் கூறுவர், ஆசிரியர். பொதுமை நலத்திற்கு இஃது இன்றியமையாதது ஆகலின், இஃதோர் அறக்கூறாயிற்று.

'புறங்கூறுதல்' எனும் சொற்பொருளில், குறளை, கோள், புறணி, பறைதல், குண்டணி (குண்டுணி - என்பார், பாவாணர்), குற்றறை (குத்தறை கொத்றை கொங்கு நாட்டுச் சிற்றூர்புற வழக்கு), பழிகூறல், அவதூறு கூறல் - முதலிய சொற்கள் அகரமுதலிகளிலும், சொல் வழக்கிலும் கூறப்பெறுகின்றன.

இவற்றுள், புறங்கூறுதல், குறளை என்னும் இரு சொற்களே கடைக் கழக நூல்களுள் வழங்கப் பெறுகின்றன. பிற சொற்கள் மிகப் பிந்திய வட்டார வழக்குகள் ஆதல் வேண்டும்.

புறங்கூறுதல் :

**'எற்புறங் கூறும் என்ப'** - குறுந்:364:4

**'பழியிலர் ஆயினும் பலர்புறங் கூறும்**
**அம்பல் ஒழுக்கமும் ஆகியர்'** - அகம்:115:2-3

'புறங்கூற்றுத் தீர்ப்பதுஓர் பொருளுண்டேல்' - கலி:38:21

'பிறர்மறை யின்கண் செவிடாய்த் திறனறிந்து
ஏதிலார் இல்கண் குருடனாய்த் தீய
புறங்கூற்றின் மூங்கையாய் நிற்பானேல் யாதும்
அறங்கூற வேண்டாம் அவற்கு' - நாலடி:158

'நட்டார் புறங்கூறான் வாழ்தல் இனிது' - இனி.நாற்.:19:1

'பொய்யுரையான் வையான் புறங்கூறான் யாவரையும்' - ஏலாதி:33:1

குறளை :

'கடுக்கி ஒருவன் கடுங்குறளை பேசி' - நாலடி:189:1

'பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்லென' - மணிமே:30:68

'குறளையுள் நட்பளவு தோன்றும்' - திரிகடு:37:1

'பொய்குறளை வெளவல் அழுக்காறு இவைநான்கும்
ஐயந்தீர் காட்சியார் சிந்தியார்' - ஆசாரக்:38:1

'கடையாயார்
முன்னின்று கூறும் குறளை தெரிதலால்
பின்னின்னா பேதையார் நட்பு' - பழமொழி:113:3-4

'பொருளல்லார் கூறிய பொய்குறளை' - பழமொழி:147:1

'காப்பாரே போன்றுரைத்த பொய்குறளை' - பழமொழி:193:2

'குறளை வெய்யோர்க்கு மறைவிரி எளிது' - முதுமொழி:74

'பொய்யே
குறளை கடுஞ்சொல் பயனில்சொல் நான்கும்
மறலையின் வாயின வாம்' - ஏலாதி:28:3-4

- புறங்கூறுதலை ஆங்கிலத்தில் back biting என்றும், குறளை கூறுதல், பழிகூறுதல், அவதூறு கூறுதல் ஆகியவற்றை Calumny, aspersion, defamation என்றும் கூறுவர்.

இனி, ஒருவனுக்கு மற்றவனின் செல்வம், பதவிநிலை, கல்வி, அறிவு, ஆக்கம், சிறப்புநிலை, புகழ், குடும்பநலம், முன்னேற்றம் முதலியவற்றில் பொறாமையும் (அழுக்காறும்) அவன் உடைமைகள் மேல் விரும்புதலும் (வெஃகுதலும்) ஏற்பட்டு, அவற்றைத் தானும் அடையாமற் போயினும், அவனின் நன்னிலையைத் தாழ்த்த விரும்பி, அவனொடு பழகியிருக்குங்கால், அவன் கண்ட சில மறைவு நிலைகளைக் கூட்டியோ, திரித்தோ, பொய், புனைவு செய்தோ (183), அல்லது அவனைப் பற்றி அவன் கேள்விப்படும்

தவறான செய்திகளால் உந்தப்பெற்று, அவற்றைப் பெரிதுபடுத்தியோ பிறரிடம் புறங்கூறுகிறான்; குற்றம் கூறுகிறான்; குறளை கூறுகிறான்; பழி கூறுகிறான்; அவதூறு கூறுகிறான். அதன் வழியாக முன்னவனுக்குப் பிறரிடம் உள்ள பெருமைகளை - தகுதிப்பாட்டை - அவனைப்பற்றிப் பிறர் கொண்டடுள்ள நன்மதிப்பீட்டை - நம்பிக்கையைக் குறைக்கவோ, சிதைக்கவோ, முற்றும் அழிக்கவோ முனைகின்றான். அவன் இவ்வாறு புறங்கூறுதலுக்காகப் பலரிடமும் தொடர்புகொள்ளும் வாய்ப்பும் அவனுக்கு உண்டாகிறது. அவர்களுள் தனக்குகந்தவரை நட்பாக்கிக் கொண்டு, தனக்கு அவர்கள் வழிப் பலவகையான நலன்களையும் தேடிக்கொள்கின்றான்.

அவ்வாறு புறங்கூறும் புன்மையுணர்வும் (185), கயமையுணர்வும் (1076), பொய்நகையும் (182) கொண்டவன், கற்றவனாகவும் (823), சில நிலைகளில் சிலர் மதிப்பைப் பெற்றவனாகவும் இருந்துவிடுவானாயின், வெறும் வாய்ச்சொற்களால் மட்டுமின்றி, எழுத்து வகையாகவும் நூல்கள் வழியாகவும் (440) எழுதி அவதூறு பரப்புகிறான்.

இவற்றாலெல்லாம் புறங்கூறும் புன்சொல்லன் (189), ஒரு போலி மனநிறைவு பெறுகிறான் (1074). புறஞ்சொல்லப் படுபவனுக்கு முன்னிருந்த நட்பாளர்களை அவனிடமிருந்து பிரித்துத் (187) தனக்குச் சார்பாளர்களாக அவர்களை ஆக்கி, அவர்களிடமிருந்து நலம் பெற்று உயிர்வாழ்கின்றான்(183).

இவ்வாறு மக்களில் பலர் புறங்கூறும் உணர்வு பெற்று இயங்குவது, பொதுமாந்த நல அமைப்புக்கு - அறத்திற்கு எதிரானதாகையால், அவ்வறமல்லாத தீயவுணர்வை இவ்வதிகாரத்தால் கண்டித்துக் கூறுவார்.

இப் புறங்கூறுதல் உணர்வு அழுக்காற்றுக்கும் வெஃகுதலுக்கும் அடுத்துத் தோன்றும் உணர்வாகையால் அவற்றின் பின்னர் இதனை நிரல்படுத்தினார், என்க.

## கஅக. அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன் புறங்கூறான் என்றல் இனிது. - 181

பொருள்கோள் முறை :

**ஒருவன் அறங்கூறான் அல்ல செயினும்**
**புறங்கூறான் என்றல் இனிது.**

**பொழிப்புரை :** ஒருவன் அறத்தைப் பற்றித் தெரிந்தும் அதைப் பிறரிடம் எடுத்துச் சொல்லாதவனாகவும், அறமல்லாதவற்றையே செய்பவனாகவும் இருப்பினும், அவன் புறங்கூறாதவனாக இருக்கிறான் என்று சொல்லப்பெறுவது நல்லது.

சில விளக்கக் குறிப்புகள் :

1. **ஒருவன் அறங்கூறான்** - ஒருவன் அறத்தைப் பற்றித் தெரிந்தும் அதைப் பிறரிடம் எடுத்துச் சொல்லாதவனாகவும்.

- அறத்தைப் பற்றித் தெரிந்தவன் அதைப் பிறர்க்கு எடுத்துச் சொல்வது என்பதும் ஓர் அறம் ஆகும். என்னை?

**'அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை**
**நாடி இனிய சொலின்'** - **96**

**'அகத்தானாம் இன்சொல் இனிதே அறம்'** - **93**

- என்றார் ஆகலின்.

- இத்தொடர்க்கு உரையாசிரியர்கள் அனைவருமே,

'ஒருவன் 'அறன்' என்று சொல்லுவதும் செய்யாது' (பரிமேலழகர்)

'ஒருவன் அறத்தை வாயால் சொல்லுதலும் செய்யானாய்' (மணக்குடவர்)

'புண்ணியத்தின் வழியைப் பேசான்' (பரிதியார்)

'தன் நாவினால் ஒருவன் அறத்தினைச் சொல்லானுமாய்' (காலிங்கர்)

'ஒருவன் அறம் என்னும் சொல்லையும் சொல்லாது' (பாவாணர்)

- என்றவாறு, 'அறம்' என்னும் சொல்லைச் சொல்லுதலையே பொருளாகக் குறித்திருப்பது வியப்பைத் தருகிறது. அது குன்றக் கூறலாகும். 'அறம்' என்னும் சொல்லை வாயால் சொல்லுவதிலோ சொல்லாமலிருப்பதிலோ குறிப்பிடத் தகுந்த எந்தச் சிறப்போ, இழிவோ இருப்பதாக எவரும் கருத வியலாது.

இதனை மெய்ப்பொருளாசிரியராகிய நூலாசிரியர் பெரிதுபடுத்திப் பேசினார் என்பதும் அவர்க்கு இழுக்கே.

- வாயால் ஒருவன் 'அறம்' என்னும் சொல்லைச் சொன்னால் என்ன? சொல்லாமற் போனால்தான் என்ன? அதனால் யாருக்கு என்ன ஊதியம் அல்லது இழப்பு?

- எனவே, 'அறம்' என்னும் வெறும் சொல்லை ஒருவன் கூறுவது பற்றி ஆசிரியர் இங்குக் குறிப்பிடவில்லை என்பதை உணர்தல் வேண்டும்.

- அவர் குறிப்பிட வந்தது,

'ஒருவன் அறத்தைப் பற்றித் தெரிந்திருக்கிறான்; ஆனால், அவன் அதைப் பிறர்க்கு எடுத்துக் கூறாமல் இருக்கிறான்' என்பது பற்றியே ஆகும்.

- ஏனெனில், 'அறத்தைப் பற்றி ஒருவன் தெரிந்து கொள்வதும், அதைப்

பிறர்க்கு எடுத்துச் சொல்வதும் ஓர் அறக்கடமையாக நூல்களுள் சொல்லப் பெற்றிருக்கிறது. (பார்க்க : 'அறன் வலியுறுத்தல்' அதிகார முன்னுரை).

- எனவே, எளிதாகிய அந்த அறக்கடமையைக்கூட ஒருவன் செய்யாமலிருப்பது 'அறத் தவிர்ப்பு' என்னும் தவறு, குற்றம் - ஆகும்.

'அவன் அந்தத் தவற்றை அல்லது குற்றத்தைச் செய்யினும்' என்பதே ஆசிரியர் கூறவந்த கருத்து.

- அத்துடன் இரண்டாவது தவறாக - அல்லது குற்றமாக 'அறமல்லாததையும் அவன் செய்வதை' அடுத்த தொடரில் கூறுவார்.

2. **அல்ல செயினும்** - அறம் அல்லாதவற்றையே செய்பவனாகவும் (இருப்பினும்).

- அல்ல - என்பதற்கு 'அறம் அல்லாதவற்றை' என்பது முதல் தொடர் செயப்படு பொருளால் வருவிக்கப் பெற்றது.

- அறமல்லாதவற்றையே செய்வது' அவன் செய்யும் இரண்டாவது அறத்தவிர்ப்பு அல்லது குற்றம். 'ஏ'காரம் பிரிநிலை; வருவிக்கப் பெற்றது.

3. **புறங்கூறான் என்றல் இனிது** - அவன் புறங்கூறாதவனாக இருக்கிறான் என்று சொல்லப் பெறுவது நல்லது.

என்றல் - என்று சொல்லப்பெறல்.

இனிது - நல்லது.

**'பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை**
**பெருகலின் குன்றல் இனிது'** - 811
**'இகலின் மிக இனிது'** - 856

- என்னும் இடங்களில் 'இனிது' 'நல்லது' என்னும் பொருளில் வந்தமை காண்க.

4. ஒருவன் செய்யும் இரண்டு அறத்தவறுகளும் ஓர் அறச்செயலும் இங்குச் சுட்டப் பெறுகின்றன.

அவை : 1. அறத்தைப் பற்றித் தெரிந்திருந்தும் அவன் அதைப் பிறர்க்கு எடுத்துக் கூறாமல் இருப்பது.

2. அறமல்லாதவற்றைச் செய்வது.

- ஆகியன அவன் செய்யும் தவறுகள் அல்லது குற்றங்கள் அல்லது அறக்கேடுகள்.

- *அவன் செய்யும் ஓர் அறச்செயல், புறங்கூறாமல் இருப்பது.*

- *இங்கு, ஆசிரியர் கருத்து என்னெனில், 'அவன் முதலிரண்டு அறத்தவறுகள் செய்யினும், 'புறங்கூறாமை' என்னும் ஓர் அறத்தைக் கடைப்பிடித்து ஒழுகுகிறானே, அது நல்லது' என்பது.*

- *அவன் செய்யும் முதலிரண்டு அறத்தவறுகளால் வரும் தீமை அவனுக்கு மட்டுந்தான்.*

*ஆனால், அவன் செய்யும் நல்லறமாகிய 'புறங்கூறாமை'யால் பிறர் நன்மை பெறுகிறார்கள். எனவே, அவன் செய்யும் முதலிரண்டு அறத்தவறுகளைவிட அவன் செய்யும் அறம் நன்மை மிக்கது; அத்தவறுகள் இவ்வறத்தினால் பெரிதாகத் தெரிவதில்லை என்கிறார். ஏனெனில் இவ்வறம் பொதுப்பயன் விளைவிப்பது. முதலிரண்டு அறத்தவறுகள் அவனுக்கு மட்டும் தனித்தீமை தருவன. எனவே அவற்றினும் இது நல்லது என்கிறார்.*

5. *வெறும் 'இனிது' என்னாமல் 'என்றல் இனிது' என்றலால், அவன் புறங்கூறாமையை உணர்ந்திருக்க வேண்டிய மக்கள் உணர்ந்திருப்பதைப் புலப்படுத்தினார், என்க. அவன் புறங்கூறாமையால் நன்மை பெறுபவர் பொது மக்களாகலின், அவர்கள் அவன்மேல் கொண்ட கருத்தை ஏற்பிசைவாக (அங்கீகரித்தலாக) இங்கு உணர்த்தினார், என்க.*

6. *'புறங்கூறாமை' என்பது பிற அறவுணர்களினும் நன்மை பயப்பது என்பதை உணர்த்துவதால், இது முதலில் வைக்கப்பெற்றது, என்க.*

## கஅஉ. அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே
## புறனழீஇப் பொய்த்து நகை. - 182

பொருள்கோள் முறை :

**புறன்அழீஇப் பொய்த்து நகை,**

**அறன்அழீஇ அல்லவை செய்தலின் தீதே.**

பொழிப்புரை : *புறத்தே ஒருவனுக்குள்ள பெருமைகளை அழித்து (விடுமாறு, அவனைப் பற்றிப் பிறரிடம்) புறங்கூறுவதும், பின் அவனைக் கண்ட விடத்துப் பொய்யாக அவனுடன் நகையாடி உறவாடுவதுமான செயல், அறவுணர்வை அழித்து, அறமல்லாத செயல்களைச் செய்வதைவிடத் தீமையானது.*

சில விளக்கக் குறிப்புகள் :

1. **புறன் அழீஇ** - புறத்தே ஒருவனுக்குள்ள பெருமைகளை அழித்து விடுமாறு, அவனைப் பற்றிப் பிறரிடம் புறங்கூறுவதும்.

- **புறன் அழீஇ** - புறன் அழித்து.

'புறன்' என்பது புறத்தே உள்ள நிலையைக் குறித்தது. 'அழித்து' என்னும் சொல் சேர்ந்த பின், அதிகாரப் பொருளால், புறங்கூறுவதும், அதனால் முன்னிருந்து அழித்தல் முயற்சியும், அழிக்கப் பெற்ற பெருமைநிலையும் வருவித்துக் கூறப்பெற்றன.

2. **பொய்த்து நகை** - (புறம் பேசப் பெற்றவனைப்) பின்னர்க் கண்ட விடத்துப் பொய்யாக அவனுடன் நகையாடி உறவாடுவதுமான செயல்.

'புறனழீஇ' என்னும் முன் கருத்தைத் தொடர்ந்ததால், இத்தொடரின் கருத்து விரிவும் வருவிக்கப் பெற்றது.

நகை - என்றது, நகைத்து உறவாடுவது என்பது குறித்தது.

3. **அறன் அழீஇ** - அறவுணர்வை அழித்து.

'அழீஇ' என்பது ஈரிடத்தும் வந்த சொல்லிசை அளபெடை.

4. **அல்லவை செய்தலின் தீது** - அறமல்லாத செயல்களைச் செய்வதை விடத் தீமையானது.

அல்லவை - அறம் அல்லாத செயல்கள்.

செய்தலின் தீது - அவற்றைச் செய்வதைவிடத் தீமையானது.

5. புறத்தே ஒருவனுக்குள்ள பெருமைகளை அழித்துவிடுமாறு அவனைப் பற்றிப் பிறரிடம் புறங்கூறுவது தீதாயிற்று.

இனி, அதைவிட, புறஞ்சொல்லப் பெற்றவனை மீண்டும் காணுங்கால், அவனுக்குத் தான் தீமை செய்து வருதலை மறைத்து, அவனொடு தான் பொய்யாக நகையாடி, உறவாடுவது போல் நடிப்பது அதனினும் தீதாயிற்று.

முன்னர், செய்த தீது புறங்கூறுவது மட்டுமே. பின்னர்ச் செய்யும் தீது, அவனிடம் தான் அவனுக்கு மாறான செயலைச் செய்து வருவதை மறைத்து நிற்பது ஒரு தீது. அவ்வாறு மறைத்து, மீண்டும் அவனிடம் ஒன்றும் அறியாதவனைப் போல் வஞ்சகமாக - பொய்யாக நகைத்து உறவாடுவது போல் நடிப்பது இன்னொரு தீது.

இவ்வாறு, மறைத்து ஒழுகுதலும், பொய்யாய் வஞ்சகமாய் நகைத்து உறவாடுவதும் ஆகிய இரண்டு அறக் கேடுகளைக் கொண்டதால்,

*இது முன்னர்ச் செய்த புறங்கூறியதான ஒரு தீமையைவிட மிகுந்த தீமையாயிற்று என்றார்.*

6. *முன்னைய குறளில், அறமல்லாதவற்றைச் செய்தலின், புறங்கூறான் என்றல் இனிது என்றவர், இதில், அதற்கு மறுதலையாக, அறமல்லாதவற்றைச் செய்வதினும், புறங்கூறிப் பொய்த்து உறவாடல் தீது என்று கூறியதால், அதன் பின் இது வைக்கப் பெற்றது.*

**கஅரு. புறங்கூறிப் பொய்த்துஉயிர் வாழ்தலின் சாதல்**
**அறங்கூறும் ஆக்கம் தரும். - 183**

பொருள்கோள் முறை : இயல்பு.

பொழிப்புரை : *ஒருவனைப் பற்றிப் புறத்தே போய் இழிவானவற்றுடன் பொய்யையும் கலந்து கவர்ச்சியாகக் கூறி, அதனால் பெறும் சில ஊதியங்கள் கொண்டு உயிர் வாழ்தலை விட, அவன் இறந்து போதல், அந்த அறக் கேட்டைச் செய்யாததால் வரும் பொதுவான அறப் பயன்களை இயல்பாக அவன் உயிர்க்குத் தரும்.*

சில விளக்கக் குறிப்புகள் :

1. **புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்தலின்** - *ஒருவனைப் பற்றிப் புறத்தேபோய் இழிவானவற்றுடன் பொய்யையும் கலந்து கவர்ச்சியாகக் கூறி, அதனால் பெறும் சில ஊதியங்கள் கொண்டு உயிர்வாழ்தலைவிட.*

-*'புறங்கூறிப் பொய்த்து' - என்பதற்குப் பரிமேலழகர், முன்னைய குறளில் கூறியவாறே, 'பிறனைக் காணாத வழி இகழ்ந்துரைத்துக் கண்டவழி அவற்கினியனாகப் பொய்த்து' என்றும்,*

- *மணக்குடவர், 'காணாவிடத்துப் புறஞ்சொல்லிக் கண்ட இடத்துப் பொய் செய்து' - என்றும்.*

- *பாவாணர், 'ஒருவன் பிறனைக் காணாவிடத்துத் தீதாகக் கூறி, அவனைக் கண்ட விடத்து நல்லவனாக நடித்து' என்றுமே கூறுவாராயினர்.*

- *பொய் கூறுதல், புறஞ்சொல்லப் படுவானிடத்திலேயே நிகழ்வது முன் குறளில் கூறப் பெற்றதாகலின், இதனினும் அதே பொருள் கூறுதல், 'கூறியது கூறல்' என்னும் குற்றமாகிவிடுதலைக் காண்க.*

- *புறங்கூறுவான், புறங்கூறப்பெற்றவனிடத்துப் பொய்யாக நகையாடுதலும், புறங் கூறுபவர்களிடத்துப் பொய் மிடைந்து கூறுவதும் ஆகிய, இருவகையானும் பொய்யாக நடப்பது இரண்டு குறள்களினும்*

வேறுபிரித்து ஆசிரியரால் கூறப் பெறுவதை அறிவினார் கவனித்தல் வேண்டும்.

- அவன் பொய் கூறுதல் இரண்டு வகையானது.

- ஒன்று, தான் யாரைப் பற்றிப் புறங்கூறுகிறானோ, அவனிடமே, பின்னர் பொய்யாய் நகைத்து உறவாடுதல்;

- இரண்டு, தான் எவரிடம் போய்ப் புறங் கூறுகிறானோ, அவனிடம் புறங்கூறும் செய்திகளுடன், கவர்ச்சிக்காகப் பொய்யையும் கலந்து கூறுதல்.

- இவ்விரண்டு பொய் நடத்தைகளையும் இவ்விரண்டு இடங்களிலும் பிரித்து உணருமாறுதான் நூலாசிரியர் இரண்டு கருத்துகளுடன் பொருத்திக் கூறுகிறார், என்க.

2. **சாதல் அறங்கூறும் ஆக்கம் தரும்** - அவன் இறந்துபோதல், அந்த அறக்கேட்டைச் செய்யாததால், வரும் பொதுவான அறப் பயன்களை, இயல்பாக அவன் உயிர்க்குத் தரும்.

- ஆக்கம் - என்பது இங்கு, இரண்டு அடிப்படை நிலைகளைக் கொண்டதாகக் கூறப் பெற்றுள்ளது.

- ஒன்று, சாதலுக்குப் பின்வரும் என்பது.

- இரண்டு அறம்கூறும் ஆக்கம் என்பது.

- எனவே, அறம்கூறும் ஆக்கம் சாதலுக்குப் பின்னர் வருவதாக இருத்தல் வேண்டும்.

- அவ்வாறாயின் அஃது என்ன ஆக்கமாக இருத்தல் கூடும்?

- இதற்குப் பரிமேலழகர், தம் ஆரியமதக் கோட்பாட்டின் படி இயல்பாகவே, 'மறுமைக் கண் எய்தும் பயன்' என்று கூறிவிடுகிறார்.

- மறுமைக் கொள்கையையே வேதமத நூலார், அனைத்து வாழ்வியல் சிக்கல்களுக்கும் ஒரு தீர்வாகவே வைத்திருப்பதை, முதலில் நாம் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

- அவ்விய நெஞ்சத்தானுக்கு ஆக்கமும், செவ்வியானுக்குக் கேடும் வருகின்றனவா, அவை முன்னைப் பிறவிகளின் பயன் - என்று எளிதாகக் கூறுவது.

- அறத்தைக் கடைப்பிடிப்பவனுக்கு நன்மை கிடைக்கவில்லையே - ஏன் என்று கேட்டால், அதற்குப் பின்னைப் பிறவியில் - மறுமையில் - பயன் கிடைக்கும் - என்பது.

- தீமைக்கு, முன்பிறவியையும், நன்மைக்கு மறுமையையும், காரணங்களாக்குவது வேதமதத்தவரின் ஒரு பெரிய ஏமாற்றுக் கோட்பாடு என்க.

- இம்மை, மறுமை ஓர் உயிரியல் கோட்பாடு எனில், மாந்த உயிர்களை மட்டுமே அக்கோட்பாட்டுக்கு உரியனவாகப் பொருந்தும்படி கூறுதல், அறிவுடைமை ஆகாது.

- ஓர் உயிரியல் கோட்பாடு எனில், அஃது உலகின் கண் உள்ள அனைத்து உயிர்களுக்கும் பொருந்தும்படி இருத்தல் வேண்டும்.

- நன்மை தீமை செய்தல், (புண்ணிய பாவம் ஏற்படல்) அவற்றால் இம்மை மறுமையில் ஆக்கமும் தாக்கமும் ஏற்படல் என்பது, விலங்குகளுக்கும், பறவைகளுக்கும், ஊர்வனவற்றிற்கும், நீந்துவனவற்றிற்கும் உண்டு என்பது பற்றி அவர்கள் கொள்கை தெளிவாக இல்லை. அவர்களுக்கு வேண்டாதவர் - மாறானவர் - அல்லது வேறு 'வருண'ப் பிரிவினர் ஆயின் அவ்ர்களுக்கு ஒரு 'பாவ, புண்ணிய'க் கோட்பாடு. அவர்கள் இனத்தவராயின் வேறு ஒரு கோட்பாடு. கற்பனை செய்வதிலும் கூட ஓர் அறிவுடைமையோ, பொருந்தப் புளுகுவதோ அவர்கள் நூல்களுள் இல்லை என்பதற்கு இவ்வேற்றத் தாழ்வான உயிரியல் நெறிமுறைகளே சான்று.

- இனி, ஒருவன் உயிரோடு இருந்தபொழுது கடைப்பிடித்து ஒழுகிய அறக்கோட்பாட்டிற்கு, அவன் இறந்த பின்னை ஏற்படும் ஆக்கந்தான் என்னெனில், அவன் பெறும் நற்புகழே. இப் புகழ் உடலொடு இருக்கும் போதாயினும், உடல் மாய்ந்த பின்னாயினும் உயிரைச் சார்ந்தே இருக்கும் என்பது ஆசிரியர் கருத்தாம் என்க. அத்துடன் புகழ்பெறுதலே அறப்பயன் என்றும் அறிக. என்னை?

**'அறத்தால் வருவதே இன்பம்மற் றெல்லாம்**
**புறத்த புகழும் இல'** - 39

**'ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்**
**பொன்றுந் துணையும் புகழ்'** - 156

**'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு'** - 231

**'உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று**
**ஈவார்மேல் நிற்கும் புகழ்'** - 232

**'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்**
**தோன்றலில் தோன்றாமை நன்று'** - 234

'வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்' - 238

'வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழாதவர்' - 240

'பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும்' - 296

'என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை' - 652

'சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து' - 777

'ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை' - 1003

- எனவே 'அறம்கூறும் ஆக்கம்' என்பது, அறத்தினால் விளையும் பயன் - அது புகழ் என்று பொருள்படும் என்க.

3. இதில் வந்துள்ள 'தரும்' என்னும் சொல் தன்மையிடத்தும் முன்னிலையிடத்தும் வராது, படர்க்கைக் கண் வந்ததால் இடவழுவமைதியாம் என்க. (தொல். : 512)

4. இது, முன்னிரண்டு குறள்களிலும் கூறப்பெற்ற பொய்த்தன்மையால் வாழும் தீமையும், அஃதின்மையால் பெறும் நன்மையும் கூறியதால், அவற்றின் பின்னர் நிரல் பெற்றது.

## கஅச. கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க முன்இன்று பின்நோக்காச் சொல். - 184

பொருள்கோள் முறை :

**கண்நின்று கண்ணறச் சொல்லினும்**
**முன்இன்று பின்நோக்கச் சொல் சொல்லற்க.**

பொழிப்புரை : ஒருவன் கண்ணுக்கு எதிரே நின்று, கண்ணோட்டம் (எனும் இரக்கம்) இன்றி, அவன் குற்றத்தைக் கடிந்து சொல்லினும், அவன்முன் இல்லாமல், பின் விளையும் கேடுகளை எண்ணிப் பாராமல், (அவனைப்பற்றிப்) புறங்கூறும் பழிச்சொற்களைப் (பிறரிடம்) சொல்லுதல் வேண்டா.

சில விளக்கக் குறிப்புகள் :

1. **கண்நின்று கண்ணறச் சொல்லினும்** - ஒருவன் கண்ணுக்கு எதிரே நின்று, கண்ணோட்டம் எனும் இரக்கம் இன்றி, அவன் குற்றத்தைக் கடிந்து சொல்லினும்.

கண் அற - கண்ணோட்டம் (இரக்கம்) இல்லாதபடி.

- கண் - இவ்விடத்துக் கண்ணோட்டம்.

கண்ணோட்டம் - இரக்கம்.

**'கண்என்னும் கண்ணோட்டம் இல்லாத கண்'** - 573

**'கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்'** - 575

- கண் - கண்ணோட்டம்.

**'கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்**
**நீடின்றி ஆங்கே கெடும்'** - 566

- கண்ணோட்டமின்றிச் சொல்லுதலால் கடிந்து சொல்லுதல் ஆயிற்று.

2. **முன்இன்று, பின்நோக்காச்சொல் சொல்லற்க** - அவன் முன் இல்லாமல், பின் விளையும் கேடுகளை எண்ணிப்பாராமல், அவனைப் பற்றிப் புறங்கூறும் பழிச் சொற்களைப் பிறரிடம் சொல்லுதல் வேண்டா.

- முன்நின்று - அவன்முன் இல்லாமல்

- புறத்தேபோய்.

- பின்நோக்கா - பின்விளையும் கேடுகளை எண்ணிப் பாராமல்.

சொல் - அவ்வாறான புறங்கூறுதலாகிய பழிச் சொற்கள்.

சொல்லற்க - சொல்லுதல் வேண்டா.

பின்விளைவு கருதுதல், - அதனால் அவனுக்கும், புறங்கூறப் பெற்றவனுக்கும் வருகின்ற பொதுநலக் கேடுகள்.

- அறக் கேடுகள், என்க.

**கணமலை நன்னாட கண்ணின்று ஒருவர்**
**குணமேயும் கூறற் கரிதால் - குணன்அழுங்கக்**
**குற்றம் உழைநின்று கூறும் சிறியவர்கட்**
**கெற்றால் இயன்றதோ நா.** - நாலடி:353

- என்றார் பிறரும்.

- 'பின் நோக்கா' என்பதற்கு, மணக்குடவர், 'பிற்காலத்து அவன் முன்னே நின்று எதிர்முகம் நோக்க ஒண்ணாத' என்று பொருளுரைப்பர்.

- இதனையே, காலிங்கரும், 'பின்பு முகநோக்கத் தகாத சொல்லின்' என்று உடன்படுவர்.

- இவர்தம் கருத்தும் ஒரோ வகையிற் பொருந்துவதாம் எனினும், முகநோக்கா நாணவிளைவினும், 'பின்விளையும் தீமையை எண்ணிப் பார்த்தல்' முகாமையானதாம் பற்றி இப் பொருளே முற்றும் பொருந்துவதாம் என்க.

3. இதில், புறங்கூறாமைக்குரிய புறனடை யாகிய கண்நின்று கண்ணறச் சொல்லெனக் கூறப்பெற்றதால் அதனையடுத்து இது வைக்கப்பெற்றது என்க.

## கஅரு. அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும் புன்மையாற் காணப் படும் - 185

பொருள்கோள் முறை : **இயல்பு.**

பொழிப்புரை : ஒருவன் அறத்தைப் பற்றிப் பெருமையாகக் கூறினும், அவன் உள்ளத்தால் அதைக் கடைப்பிடியாதிருக்கின்ற தன்மை, அவன் பிறரைப் பற்றிப் புறங்கூறுகின்ற புல்லிய செயலால் கண்டுகொள்ளப்படும்.

சில விளக்கக் குறிப்புகள் :

1. **அறஞ் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை** - ஒருவன் அறத்தைப் பற்றிப் பெருமையாகக் கூறினும், அவன் உள்ளத்தால் அதைக் கடைப்பிடியாதிருக்கின்ற தன்மை.

- இதில், 'அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை' என்பதற்கு, மணக்குடவர், 'ஒருவன் அறத்தை நினைக்கின்ற மனமுடையவன் அல்லாமை' என்று பொருள் தருகிறார்.

- காலிங்கர், 'ஒருவர் அறநூல் சொல்லுகின்ற தூய நெஞ்சத்தார் அல்லர் என்பதனை' என்றும்,

- பரிமேலழகர், 'புறஞ்சொல்லுவான் ஒருவன் அறனை நன்று என்று சொல்லினும் அது தன்மனத்தானாய்ச் சொல்லுகின்றானல்லன் என்பது' என்றும்,

- பாவாணர், 'புறங்கூறுவானொருவன் அறம் நல்லதென்று சொல்லினும்,

அவன் அதை நெஞ்சாரத் சொல்லுகின்றானல்லன் என்னும் உண்மை' என்றும்,

பொருள் தருகின்றனர். இவையாவும் தெளிவற்ற குறைபொருளே. ஆசிரியருடைய உண்மையான நேரான கருத்து அவற்றில் புலப்படுமாறு இல்லை.

- ஒருவன் அறத்தைப் பற்றிப் பேசுகிறான் பெருமையாகப் பேசுகின்றான். ஆனால் தான் அவற்றைத் தன் உள்ளத்து ஒழுகலாறாகக் கொள்ளவில்லை. அந்நிலை பிறர்க்கு எவ்வாறு தெரியவருகிறது எனில், அவன் புறங்கூறும் தன்மையினனாக இருக்கிறான் என்பதே.

- அவன் 'அறத்தைப் பற்றிச் சொல்லுகிறான்' என்பதை 'அறஞ்சொல்லும்' என்னும் சொற்கள் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. ஆனால் நெஞ்சத்தில் அவ்வுணர்வு இல்லாதவனாக இருக்கிறான் என்பது,

'நெஞ்சத்தான் அல்லன்' என்னும் தொடரால் புலப்படுத்தப் பெறுகிறது.

2. **புறஞ்சொல்லும் புன்மையால் காணப்படும்** - அவன் பிறரைப் பற்றிப் புறங்கூறுகின்ற புல்லிய செயலால் கண்டு கொள்ளப்படும்.

புன்மை - புல்லிய தன்மை. இழிந்த தன்மை.

காணப்படும் - கண்டுகொள்ளப்படும். காணுதற்குப் புலப்படும்.

ஆசிரியர், இத்தகையவர்களை,

**'ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்**
**பேதையின் பேதையார் இல்'** - **834**

என்னும் கூற்றில் அடையாளம் காட்டுவார்.

3. அறத்தை உணர்ந்தும், உரைத்தும், புறங்கூறுதல் அறமன்று என்று உணராத தன்மையைப் புலப்படுத்துகிறதாகலின், முன்னதன் பின், விளக்கத்திற்காக, இது வைக்கப் பெற்றது.

## கஅசு. பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும் திறன்தெரிந்து கூறப் படும் - 186

பொருள்கோள் முறை : **இயல்பு.**

பொழிப்புரை : ஒருவனைப் பற்றிப் பிறரிடம் போய்ப் பழி கூறுபவனிடம் உள்ள குற்றங்களிலும், மிகக் கடுமையான குற்றங்கள் ஆராய்ந்தறியப்பட்டுப் பிறரால் மற்றவர்களிடம் கூறப்படும்.

**சில விளக்கக் குறிப்புகள் :**

1. **பிறன்பழி கூறுவான் தன்பழியுள்ளும்** - *ஒருவனைப் பற்றிப் பிறரிடம் போய்ப் பழி கூறுபவனிடம் உள்ள குற்றங்களிலும்*

2. **திறன் தெரிந்து கூறப்படும்** - *மிகவும் கடுமையான குற்றங்கள் ஆராய்ந்தறியப் பட்டுப் பிறரால் மற்றவரிடம் கூறப்படும்.*

*திறன் - இருக்கின்ற குற்றங்களுள் திறனுள்ளவை. அஃதாவது உறுதியுள்ளவை.*

*- கடுமையானவை.*

*- மிகக் கடுமையானவை.*

*- இவன் பழிகூறுகையில், பிறனின் மேலோட்டமான குற்றங்களையே இயல்பாகச் சொல்லியிருந்தாலும், அவற்றை முறியடிக்க இவனுடைய குற்றங்களில், மிகவும் கடுமையானவையாகப் பார்த்து ஆராய்ந்து அறியப்பட்டுப் பிறரால் மற்றவர்களிடம் கூறப்படும்.*

*- பிறர்பழி கூறுபவனை அடக்க, அல்லது முறியடிக்க, எதிர்ச் செயலாக இந்நிலை தோன்றுவது இயல்பாம் என்க.*

*- அவ்வாறு முறியடிக்க வேண்டுமெனில், புறங்கூறுவானின் குற்றங்களிலும் அவனைப் போலவே பொதுவானவற்றைச் சொல்வது அவ்வளவு வலிவுடையது ஆகாது ஆகலின், அவன் செய்திருக்கும் குற்றங்களிலேயே மிகக் கடுமையானவையாக உள்ளவற்றை ஆராய்ந்து அறிந்து, அவை மற்றவர்களிடம் கூறப்படும், என்றார்.*

*- ஓர் எழுச்சியை அடக்க, அல்லது முறியடிக்க, அதனினும் வலிவான எழுச்சியாலேயே முடியுமாகலின் மக்கள் மனவியல்படியும், உலக இயங்கியல்படியும், இவ் வாராய்ந்து அறிதல் தேவைப்பட்டது, என்க.*

*- 'தெரிந்து கூறப்படும்' என்றது, ஆராய்ந்து அறிந்து கூறப்படும் என்பதை.*

*- ஆராய்தல் - திறனுள்ளவற்றை அறிந்து கொள்ளவே.*

*- 'திறன்' என்பதற்குப் பரிமேலழகர், 'உளையுந்திறன் உடையவற்றை' என்றார். அஃதாவது, 'புறங்கூறியவன் மனத்தால் துன்பப்படுவனவற்றை' மிகக் கடுமையானவற்றை என்பதே மிகப்பொருந்துவதாம் என்க.*

*- பாவாணர் 'கடுமையான'வற்றை என்றார்.*

*3. இது, பிறன்பழி கூறுகின்றவனுக்கு ஏற்படும் எதிர்விளைவு கூறுதலின், இங்கு வைக்கப்பெற்றது.*

## கஅஎ. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி நட்பாடல் தேற்றா தவர் - 187

பொருள்கோள் முறை :

**நகச்சொல்லி நட்பாடல் தேற்றா தவர்**
**பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர்.**

பொழிப்புரை : *ஒருவருக்கொருவர் நகைத்துப்பேசி மகிழும்படியான நட்பாடுதலைத் தெளிவுற அறியாதவர், அவர்கள் வேறுபட்டுப் போகும்படி புறங்கூறி நண்பர்களைப் பிரிப்பர்.*

சில விளக்கக் குறிப்புகள் :

1. **நகச்சொல்லி நட்பாடல் தேற்றாதவர்** - *ஒருவருக்கொருவர் நகைத்துப்பேசி மகிழும்படியான நட்பாடுதலைத் தெளிவுற அறியாதவர்.*

*நகச்சொல்லி நட்பாடல் - ஒருவர்க்கொருவர் நகைத்துப் பேசி மகிழும்படியாக நட்பாடுதலை.*

*தேற்றாதவர் - தெளிவுற அறியாதவர்.*

*தேறுதல் - தெளிவுற அறிதல்.*

- *தன்னொடு அவரும், அவரொடு பிறரும் ஆக, ஒருவர்க்கொருவர் நகைத்துப் பேசி மகிழும்படியாக நட்பாடுதலைத் தெளிவுற அறியாதவர்.*

**'களவல்ல மற்றைய தேற்றா தவர்'** - **289**

**'பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற**
**சிலசொல்லல் தேற்றா தவர்'** - **649**

- *'தேறாதவர்' என்னும் தன்வினைச்சொல் 'தேற்றாதவர்' என்னும் பிறவினை வடிவில் வந்தது.*

- *நட்புச் செய்தலுக்கு அடிப்படையே ஒருவர்க்கொருவர் மகிழ்ச்சியாகப் பேசிக் கருத்துப் பரிமாறிக் கொள்ளுதல். என்னை?*

**'முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து**
**அகநக நட்பது நட்பு'** - **786**

**'நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்**
**பகலும்பாற் பட்டன்று இருள்'** - **999**

*- என்பார் ஆகலின்.*

- இந்த நட்புணர்வின் நுட்பம் அறியாமல், ஒருவரைப் பற்றி ஒருவர் புறங்கூறித் தனக்கும், தன்னால் புறஞ்சொல்லப்படுவார்க்கும் உள்ள நட்பையும்,

வேறுபடச் செய்து அந்நட்புகளைப் பிரிப்பாராவர், புறஞ்சொல்லுபவர்.

- எனவே, அவர், ஒருவர்க்கொருவர் நகைத்துப் பேசி மகிழும் படியான நட்பாகவும், துன்பத்துக்குரிய நட்பாகவும் ஆக்குதலால், நட்பின் உயர்வை அறியாதவர் அவர், என்றார்.

2. **பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர்** - அவர்கள் தம்முள் வேறுபட்டுப் போகும்படி புறஞ்சொல்லி நண்பர்களைப் பிரிப்பர்.

பகச்சொல்லி - பகவுபட்டுப் போகும்படி புறஞ்சொல்லி.

பகவுபடுதல் - பிளவுபடுதல்.

- வேறுபடுதல்.

கேளிர்ப் பிரிப்பர் - நண்பர்களைப் பிரிப்பர்.

'கேளிர் என்பதற்குத் தம் உறவினரை' என்பார் பாவாணர்.

'நட்பாடல்' என்னும் செயல் இங்குக் குறிப்பிடப்படலால், கேளிர் என்னும் சொல் நண்பர்களையும் குறிக்கும் என்க.

- கேளிர் என்பது, இருதிறத்து நண்பர்களையும் குறிக்கும்.

3. பிறர் பழியும், தன்பழியும் கூறப்படுதலை முன்னர்க் கூறியவர், இதில் அவ்வாறு செய்தவழி இருநிலை நட்பும் கெடும் என்றதால், அதன் பின் இது நிரல் கொண்டது.

## கஅஅ. துன்னியர் குற்றமும் தூற்றும் மரபினார் என்னைகொல் ஏதிலார் மாட்டு - 188

**பொருள்கோள் முறை :**

**துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்**
**ஏதிலார் மாட்டு என்னை கொல்.**

**பொழிப்புரை :** தம்மொடு பொருந்திய நண்பர்தம் குற்றத்தையும் வெளியில் போய்ப் பழிதூற்றுகின்ற வழக்கம் உடையவர், தமக்குத் தொடர்பற்றவர் தம்நிலையில் என்னபடி நடந்து கொள்வாரோ?

**சில விளக்கக் குறிப்புகள் :**

1. **துன்னியார் குற்றமும்** - தம்மொடு பொருந்திய நண்பர்தம் குற்றத்தையும்.

துன்னுதல் - பொருந்துதல்.

- துன்னியார் - பொருந்தியவர் நண்பர்.

- பொருந்திய நண்பர்.

குற்றமும் - குற்றத்தையும்.

- 'உம்'மை, சிறப்பும்மை.

துன்னியார்க்கு வந்தது.

2. **தூற்றும் மரபினார்** - வெளியில் போய்ப் பழிதூற்றுகின்ற வழக்கம் உடையவர்.

தூற்றுதல் - பழிதூற்றுதல்.

தூற்றல் - ஓரிடத்து விழுமாறின்றிப் பரவலாகப் பலவிடத்தும் படுமாறு செய்தல்.

- மழைத்தூறல் போல் பலரிடத்தும் சிதறச் செய்தல்.

- 'களத்தில் பொலிதூற்றுவது போலப் பலரறியப் பரப்புதல்' என்பார் பாவாணர்.

மரபினார் - வழக்கம் உடையவர்.

மரபு - வழக்கம் ;

- ஒருவர்பால் நிகழ்வது பழக்கம்.

- அதேபோல் பலரிடத்தும் செய்வது வழக்கம்.

- பழக்கம் மிகுந்து வழக்கமாய் விடுதல்.

3. **ஏதிலார் மாட்டு என்னை கொல்** - தமக்குத் தொடர்பற்றவர் தம் நிலையில் என்னபடி நடந்து கொள்வாரோ?

ஏதிலார் மாட்டு - தமக்குத் தொடர்பில்லாத அயலாரிடத்து.

- ஏதிலாரை 'வேண்டாதார்' என்று பரிதியாரும்,

'பகைவர்' என்று காலிங்கரும், பொருள்படுத்துவர்.

- துன்னியார் (பொருந்திய நண்பர்) என்று முன்கருத்தில் கூறியதால், இதில், தொடர்பில்லாத (அயல)வர் என்பதே பொருந்தும் என்க.

- மேலும், வேண்டாதார் இகல் உள்ளவரும், பகைவர் பகையுள்ளவரும் ஆகையால், அவர்தம்மை இவர் புறந்தூற்றின் இகல் மிகுந்து பகையும், பகை மிகுந்து பழியும் நேரும் என்க. அதனால் அவரைப்பற்றி இவர் வாய் திறவார், எல்லை கடந்தாரும் ஆகலின்.

மாட்டு - இடத்து.

இங்குத் தன்நிலை குறித்தது.

- இங்கு மாட்டு என்பதுடன் 'செய்வது' என்னும் சொல் சேர்த்து, 'அயலார் மாட்டுச் செய்வது யாது கொல்லோ' என்றுகூறி, 'செய்வது' 'சொல்லெச்சம்' என்று முடிப்பர், பரிமேலழகர். அச் சொல்லும் விரிவும் தேவையல்ல.

என்னை கொல் - என்னபடி நடந்து கொள்வாரோ?

கொல் - ஐயம்

'என்னவும் செய்யத் தயங்கார்' என்று கூறி முடிக்க.

4. முன்னதில், நண்பர் வழிக் குற்றம் நிகழ்தலைக் குறித்தவர், அதைத் தொடர்ந்து, நண்பர் அல்லாத அயலார்வழி அக்குற்றம் நிகழ்வது பற்றிக் கூறுதலால், அதன்பின் இது வைக்கப்பெற்றது, என்க.

## கஅகூ அறன்நோக்கி ஆற்றும்கொல் வையம் புறன்நோக்கிப் புன்சொல் உரைப்பான் பொறை - 189

**பொருள்கோள் முறை :**

**புறன்நோக்கிப் புன்சொல் உரைப்பான்**
**பொறை, வையம், அறன்நோக்கி ஆற்றும்கொல்.**

**பொழிப்புரை :** புறத்தில் உள்ளவர்களைத் தேடிச் சென்று, பிறரைப் பற்றிப் புல்லிய சொற்களால் பழி கூறுவானின் உடல்சுமையை, இவ்வுலகம், பொதுமையறம் கருதிப் பொறுத்துக் கொள்ளுமோ?

**சில விளக்கக் குறிப்புகள் :**

1. **புறன்நோக்கிப் புன்சொல் உரைப்பான் பொறை** - புறத்தில் உள்ளவர்களைத் தேடிச் சென்று, பிறரைப் பற்றிப் புல்லிய சொற்களால் பழிகூறுவானின் உடல் சுமையை.

'புறன்நோக்கி' - என்பதற்கு உரையாசிரியர் சிலர் 'பிறர் இல்லாத இடம் நோக்கி' என்பர். அதனினும் 'புறத்தில் உள்ளவர்களைத் தேடிச் சென்று' என்னும் பொருளே பொருந்துவது.

புன்சொல் - புல்லிய சொல்.

- கீழ்மையான சொற்கள்.

பொறை - சுமை, கனம், பாரம்.

- புன்சொல், உரைப்பானை நிலத்துக்குப் பொறை - சுமை என்றது, அவனால் உலகிற்குக் கேடாதலின் என்க.

- இவ்வாறு நிலத்துக்குப் பொறையாக - சுமையாக - உள்ளவர்கள் பலரை ஆசிரியர் ஆங்காங்கே சுட்டுவார்.

**'கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது**
**இல்லை நிலக்குப் பொறை'** - 570

**'கண்ணோட்டத் துள்ளது உலகியல் அஃதிலார்**
**உண்மை நிலக்குப் பொறை'** - 572

**'சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்**
**தாங்காது மன்னோ பொறை'** - 990

**'இசைவேண்டா ஆடவர்**
**தோற்றம் நிலக்குப் பொறை'** - 1003

2. **வையம் அறம் நோக்கி ஆற்றும்கொல்** - இவ்வுலகம் பொதுமையறம் கருதிப் பொறுத்துக் கொண்டுள்ளதோ?

வையம் - உருட்சியால் உலகம் வையம் எனப்பெற்றது.

அறம்நோக்கி - பொதுமையறம் கருதி.

- பொதுமையுணர்வே அறம் எனப்பெறுவது.

(காண்க : அறன்வலியுறுத்தல் அதிகார முன்னுரை)

- பொதுமையறம் - வேறுபாடு கருதாத சமநிலை உணர்வு.

**- ஒப்புரவு - ஒத்தது அறிதல்** (214)

**- பல்லுயிர் ஓம்புதல்** (322)

- மேலும் உலகம் கண்ணோட்டம் (இரக்கம்) என்னும் அறவுணர்வு உடையது. அதனால், எத்தகையவர் மேலும் இரக்கம் கொள்ளும் தன்மை கொண்டது என்பார், நூலாசிரியர்.

(அஃதாவது, உலகியலின் தன்மையை உலகின் மேல் ஏற்றிக் கூறுவார்)

**'கண்ணோட்டம் என்னும் கழிபெரும் காரிகை**
**உண்மையான் உண்டுஇவ் வுலகு'** - 571

**'கண்ணோட்டம் உள்ளது உலகியல்'** - ***572***

- *அக் கண்ணோட்ட அறம்கொண்ட அறம் நோக்கிப் புன்சொல் உரைப்பாரையும் உலகம் பொறுத்துக் கொண்டுள்ளதாகக் கூறுவர், ஆசிரியர்.*
- *'இரக்கம் மனத்தின்கண் தோன்றும் உணர்வெனினும், அது கண்ணினால் கண்டு, உணரப்பெறுவதாகலின் 'கண்ணோட்டம்' எனப் பெற்றது.*

*கண் ஓடுதல் - கண்ணோட்டம். அது துன்புற்றார் மேல் பாய்தல்.*

- *இரக்கம் பொதுமை உணர்வு என்க. அஃது புறஞ்சொல்வானின் அறியாமைமேல் செல்லுவது.*
- *புறஞ்சொல்வான் அறியாமையால் அதுசெய்வான்,*

*என்று முன்னர்க் கூறினார் (187)*

4. *இது, மாந்தரால் பொறுக்கவியலாத குற்றத்தை உலகு பொறுத்தது என்னலால், இங்கு வைக்கப் பெற்றது.*

## கக0. ஏதிலார் குற்றம்போல் தன்குற்றம் காண்கிற்பின் தீதுண்டோ மன்னும் உயிர்க்கு - 190

**பொருள்கோள் முறை : இயல்பு.**

**பொழிப்புரை :** *பிறருடைய குற்றங்களை ஒருவன் புறம் நோக்கிக் காணுவது போல், தன்னுடைய குற்றங்களையும் அவன் அகம் நோக்கிக் காணுவானாயின், இங்கு வாழ்கின்ற மக்கள் உயிர்களுக்குத் தீமை நேர்வதுண்டோ? நேராதாம்.*

**சில விளக்கக் குறிப்புகள் :**

1. *இக்குறள், இவ்வதிகாரப் பொருளாகிய, புறங்கூறுதலையும், அது நிகழ்வதற்கான காரணத்தையும், அது நிகழாதிருப்பதற்குரிய வழியையும், அவ்வாறு நிகழாமல் இருந்தால் உலகின் மக்களுயிர்கள் துன்பப்பட வேண்டியிரா என்னும் முடிபையும் ஒருங்கே சுருக்கவிளக்கமாகக் கூறுகிறது. இது மக்கள் மனவியல்படி* (Social Psychology) *கூறப் பெற்றுள்ள ஓர் உண்மையாகும்.*
2. *இக்குறள்வழி ஐந்து வகையான உண்மைகள் உணர்த்தப் பெறுகின்றன.*

*ஒன்று, உலகில் உள்ள மக்கள் அனைவருமே குற்றங்கள் செய்கின்றனர் - என்பது.*

இரண்டு, அவர்களில் பலரும், பிறர் குற்றங்களைப் பெரிதுபடுத்தி மற்றவர்களிடம் புறங்கூறுகின்றனர் - என்பது.

மூன்று, அவ்வாறு புறங்கூறுகிறவர்கள், பிறர் குற்றங்களைப் போல், தங்களின் குற்றங்குறைகளைக் காணாமல் இருக்கின்றனர் - என்பது.

நான்கு, அவர்கள், அவ்வாறு தங்கள் குற்றங்குறைகளையும் உள்நோக்கிக் காணுவார்களாயின், அவர்கள் பிறரைப் பற்றிப் புறங்கூறும் அறக்கேட்டைச் செய்யமாட்டார்கள் - என்பது.

ஐந்து, அப்படி நிகழின், உலகில் நிலையான மக்கள் உயிர்களுக்கு நேரும் தீமைகள் நேரமாட்டா - என்பது.

3. உலகில், மக்களாகப் பிறந்த உயிர்களுக்கு நேர்கின்ற தீமைகளுள் பெரும்பாலானவை, புறங்கூறதலால் நேர்கின்றன என்பது, ஆசிரியர் கருத்து, என்னை?

- புறங்கூறுகிறவன் பொய்கூறுகிறான் (182, 183); அறவுணர்வைக் கெடுக்கிறான் (185); மக்களுக்குள் நட்புணர்வையும், நல்லிணக்கவுணர்வையும் அழிக்கிறான் (187); அதனால் சமநிலை உணர்வு கெடுகிறது (186); புறங்கூறுதலுணர்வால் பயனில்லாதவற்றைப் பலரிடமும் கூறவேண்டி உள்ளது (191); அதனால் மக்கட் பண்பு கெடுகிறது (194); நயன்மை (ஞாயம்) கெடுகிறது (193); தீங்குகள் நேர்கின்றன (190); தீவினைகள் மிகுகின்றன (தொடர் அதிகாரம் - தீவினையச்சம்), என்கிறார் ஆகலின்.

4. **ஏதிலார் குற்றம் போல்** - பிறருடைய குற்றங்களை ஒருவன் புறம் நோக்கிக் காணுவது போல்.

ஏதிலார் - தொடர்பற்ற பிறர்.

5. தன் குற்றம் காண்கிற்பின் - தன்னுடைய குற்றங்களையும் அவன் அகம்நோக்கிக் காணுவானாயின்.

- தன் குற்றத்தைத் தன் அகம் நோக்கிக் காணுதல் வேண்டும்.

- தன் குற்றத்தை நீக்கிக் கொண்டு பிறர் குற்றத்தைக் காணுதல் வேண்டும் என்பது பொது நெறி, என்னை?

**'தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்**
**என்குற்றம் ஆகும் இறைக்கு'** - **436**
**'தன்நெஞ்சம் தான் அறி குற்றம்'** - **272**
**'குற்றத்தின் நீங்கி வடுப்பரியும் நாணுடையான்'** - **502**
**'தம்வயின் குற்றம் மறையா வழி'** - **846**

**'அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்**
**குற்றமே கூறி விடும்'** - **980**

- என்பார், என்க.

**'தங்குற்றம் நீக்கலர் ஆகிப் பிறர்குற்றம்**
**எங்கெங்கும் நீக்கற் கிடைபுகுதல் - எங்கும்**
**வியன்உலகில் வெள்ளாடு தன்வலி தீராது**
**அயன்வலி தீர்த்து விடல்'** - பழமொழி: 124
**'பிறர்குற்றம் கூறுதல் தேற்றாதோன்'** - கலி:43 : 18

- என்றார் பிறரும்.

6. **தீதுண்டோ மன்னும் உயிர்க்கு** - இங்கு வாழ்கின்ற மக்கள் உயிர்களுக்குத் தீமை நேர்வதுண்டோ? (நேராதாம்).

தீதுண்டோ - தீமை நேர்வதுண்டோ என்றலின் நேராதாம் என முடிவு கூறப்பெற்றது.

மன்னும் உயிர்க்கு - இங்கு வாழ்கின்ற மக்கள் உயிர்களுக்கு. மன்னும் - நிலைபெறும். இங்கு நிலைபெற்று வாழும்.

- பலவகையான உயிர்கள் இந் நிலவுலகில் பிறந்து இல்லாமற் போயிருக்க, மாந்த உயிர்கள் மட்டும் தோன்றி நிலைபெற்று வாழ்கின்றன என்க.

- 'மன்னும் உயிர்க்கு' என்பதற்குப் பரிமேலழகர் 'நிலை பேறுடைய உயிர்க்கு' என்று பொருள் கொண்டு,

'வரும் பிறவிகளினும் துன்பமில்லை' என்பது நோக்கிக் கூறியதாகக் கூறுவர்.

- 'மன்னுயிர்' என்று வினைத் தொகையாக வரும்பொழுது 'நிலைத்த உயிர்' என்று பொருள் கொள்வது பொருந்தும்.

- இங்கு 'மன்னும் உயிர்' என்று நிகழ்காலம் குறித்துக் கூறப்பெற்றதாலும் இடம் நோக்கியும், 'வாழ்கின்ற நிலைபெற்ற உயிர்கள்' என்று கொள்வதே பொருந்தும் என்க.

- 'உடல்நில்லா தொழியவும் உயிர் நிலைபெற்று நிற்றலால் மன்னுமுயிர் என்றார்' - என்று பாவாணர் கூறுதற்கும் இதுவே விளக்கம் என்க.

7. இஃது, இவ்வதிகாரப் பொருளுக்கு முடிவான பொருள் விளக்கம் தருதலால், ஈற்றிலும், முன்னதன் பின்னும் நிரல்பட்டது, என்க.

# அ-2 இல்லறவியல்

## அ-2-16 பயனில சொல்லாமை 20

### அதிகார முன்னுரை

'பயனில சொல்லாமை' என்பது, சொல்லாலும், பொருளாலும், தனக்கோ, பிறர்க்கோ பயனில்லாதவற்றைக் கூறாமையாம்.

'பயனில சொல்லுதல்'-வீணாகப் பேசுதல்.

'பயனில சொல்லாமை'-வீணாகப் பேசாமை.

பயன்-பயத்தல், உதவுதல், உண்டாதல், தருதல், பெறுதல்.

பயன்-பயம்-பழம்-மரத்தின் பயன் பழம்.

**'விழுக்கோட் பலவின் பழுப்பயம் கொண்மார்'** - அகம்:12:8.

அதுபோல், ஒரு சொல்லாலும், பொருளாலும், செயலாலும் பயன் இருத்தல் வேண்டும் என்பது அறிஞர் கருத்து.

சொல் என்பதற்கு 'நெல்' என்று ஒரு பொருள் உண்டு. எனவே, சொல் என்பது நெல் போல் அரிசி அஃதாவது பொருள் உடையதாக இருத்தல் வேண்டும். அரிசி இல்லாத பதர் போல், பொருள் இல்லாமல் சொல் இருக்கக்கூடாது.

ஒருவர் தாம் ஒருநாள் முழுவதும் சொல்லுகின்ற அல்லது பேசுகின்ற செய்திகளில் பயனில்லாதவையே கூடுதலாக உள்ளன என்பது ஒரு பொது மதிப்பீடு.

மேலும் ஒரு செய்தியைச் சுருக்கமாகச் சொல்லத் தெரியாமல், பயனில்லாத சொற்களையும் பொருள்களையும் மிகுதியாகக் கலந்து சொல்கிறோம் என்பதையும் நாம் நினைவில் வைத்திருத்தல் வேண்டும்.

அத்துடன் சொல்லுகின்றவற்றுள் பல செய்திகளைக் குற்றமுடையனவாகவும் சொல்கின்றோம்.

சொல்வதில் உள்ள குற்றங்களை நான்கு வகையாக நூல்கள் பகுத்துச் சொல்கின்றன.

அவை: பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் எனப்படுபவை.

அவற்றுள்,

பொய் எனப்படுவது, இல்லாததை அல்லது நடவாததை அல்லது உண்மையில்லாததைப் பேசுதல்.

- இது காமமும் பொருளும் பற்றி உண்டாவது என்பர்.

- மேலும், இது துறவிகளுக்கல்லது இல்லறத்தாரால் முழுவதும் கடிய (தவிர்க்க) இயலாதது.

- இது பற்றித் 'துறவறவியலி'ல், 'வாய்மை' அதிகாரத்தில் வைத்துப் பேசப் பெறும்.

- பிறமூன்றும் 'இல்லறவியலு'க்கு உரியனவாகப் பேசப்பெறுவன.

குறளை எனப்படுவது புறங்கூறுதல். இது, 'புறங்கூறாமை' அதிகாரத்துள் கடியப்பட்டது.

கடுஞ்சொல் எனப்படுவது, கடுமையாக - கேட்பவர்க்கு விருப்பமில்லாத அல்லது நன்மை தராத வகையில் பேசப்பெறுவது.

- இது, 'இனியவை கூறல்' அதிகாரத்துள் கடியப்பட்டது.

பயனில்சொல் என்பது, சொல்லாலும், பொருளாலும் தனக்கோ பிறர்க்கோ பயனில்லாதவற்றைச் சொல்வது.

- இது, 'பயனில சொல்லாமை' என்னும் இவ் வதிகாரத்துள் கடியப் பெறும்.

இனி, பயனில சொல்லுதல் என்பது, வீண்பேச்சு, தீயவற்றைப் பேசுதல், இழிவானவற்றைப் பேசுதல், தேவையில்லாதவற்றைப் பேசுதல், தவறாகப் பேசுதல், தருக்கிப் பேசுதல், தாக்கிப் பேசுதல்-முதலியனவுமாம்.

இவை மனத்தையும், அறிவையும், உடலுணர்வையும் கெடுத்துத் தவறான செயல்களுக்கு நம்மைக் கொண்டு செலுத்தவும், நம் காலத்தையும், வாழ்க்கைப் பயனையும் வீணாக்கவும் செய்வதால் கடியத்தக்கவை என்க.

இது தொடர்பாக வேறு பலநூல்களிலும், ஆங்காங்கே சான்றோர்கள் கூறிச் சென்றதையும் நாம் இவ்விடத்துக் கருதிப் பார்ப்பது நல்லது.

**'ஔவியம் பேசேல்'** *(பொறாமை)*

**'சித்திரம் பேசேல்'** *(பொய், புனைவு)*

**'சுளிக்கச்சொல்லேல்'** *(அருவருப்பானவற்றை)*

**'சொல் சோர்வு படேல்'** *(தவறாக, பொருத்தமின்றி)*

**'நொய்ய உரையேல்'** *(இழிவானவற்றை, புல்லியவற்றை)*

**'பழிப்பன பகரேல்'** *(பழிக்கத்தக்கவற்றை)*

**'பிழைபடச் சொல்லேல்'** *(தவறு வரும்படி)*

**'மிகைப்படச் சொல்லேல்'** *(உள்ளதைப் பெருக்கி)*

**'வல்லமை பேசேல்'** *(தருக்கி)*

**'வெட்டெனப் பேசேல்'** *(முகம் முரித்தல் போல்)*

**'ஒரம் சொல்லேல்'** *(வஞ்சகம்)*

*- இவை ஔவையாரின்* **'ஆத்திசூடி'** *உரைகள். 'பயனில சொல்லாமை' குறித்தவை.*

**'ஔவியம் பேசுதல் ஆக்கத்திற்கு அழிவு'** **- 12**

**'கோள்செவிக் குறளை காற்றுடன் நெருப்பு'** **- 24**

**'கௌவை சொல்லின் எவ்வருக்கும் பகை'** **- 25**

*(கௌவை - குற்றங்களைத் தூற்றிப் பேசுதல்)*

**'நைபவர் எனினும் நொய்ய உரையேல்'** **- 56**

*- இவையும் ஔவையாரின் 'கொன்றை வேந்தன்' கூற்றுகள்.*

**'கல்விக் கழகு கசடற மொழிதல்'** *- வெற்றிவேற்கை: 2*

**'தண்காமம், பொய், வெகுளி, பொச்சாப்பு, அழுக்காறு**
**என்று ஐந்தே கெடுவார்க்கு இயல்பு என்ப'** *- அறநெறிச்சாரம்:165*

**'பொய், குறளை, வன்சொல், பயனில - என் றிந்நான்கும்**
**எய்தாமை சொல்லின் வழுக்காத்து - மெய்யில்**
**புலம்ஐந்தும் காத்து மனம்மாசு அகற்றும்**
**நலம்அன்றே நல்லாறு எனல்'** - நீதிநெறி விளக்கம்:50

**'காவா தொருவன்தன் வாய்திறந்து சொல்லும்சொல்**
**ஓவாதே தம்மைச் சுடுதலால் - ஓவாதே**
**ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும்**
**காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து'** **- நாலடி: 63**

'நேர்த்து நிகரல்லர் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோர்' - நாலடி: 64
'கல்எறிந் தன்ன கயவர்வாய் இன்னாச்சொல்' - நாலடி: 66
'வையகம் எல்லாம் பெறினும் உரையற்க
பொய்யோடு இடைமிடைந்த சொல்' - நாலடி:80:3-4
'கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு - மெல்ல
இருப்பினும் நாய்இருந் தற்றே இராஅது
உரைப்பினும் நாய்குரைத் தற்று' - நாலடி: 254
'கற்றறிந்த நாவினார் சொல்லார்தம் சோர்வஞ்சி
மற்றையர் ஆவார் பகர்வர்; பனையின் மேல்
வற்றிய ஓலை கலகலக்கும் எஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை ஒலி' - நாலடி: 256
'கற்றதூஉம் இன்றிக் கணக்காயர் பாடத்தால்
பெற்றதாம் பேதைஓர் சூத்திரம் - மற்றதனை
நல்லார் இடைப்புக்கு நாணாது சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும்' - நாலடி: 314
'சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலும் சொல்லார் மிகுதிச் சொல்' - நாலடி: 346:1-2

'நற்பால கற்றாலும் நாடாது சொல்லுவர்ஆல்;
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . மற்று யாரானும்
சொற்சோர்வு இலாதாரோ இல்' - பழமொழி: 94: 1,3,4
'வீண்சேர்ந்த புன்சொல் விளம்பல்' - பழமொழி:15:3
'தெரியா தவர்தம் திறனில்சொல் கேட்டால்
பரியாதார் போல இருக்க' - பழமொழி: 135:1-2
'தம்கண்ணில் கண்டதுவும் எண்ணிச் சொலல்' - பழமொழி 153:4
'சொலற்பால அல்லாத சொல்லுதலும் குற்றம்' - நான்மணி:100:3
'சொல்லால் அறிக ஒருவனை' - நான்மணி:77:1
'கல்லா ஒருவற்குத் தம்வாயின் சொல்கூற்றம்' - நான்மணி:82:1

'வடுச்சொல் நயமில்லார் வாய்த்தோன்றும்; கற்றார்வாய்ச்
சாயினும் தோன்றாக் கரப்புச் சொல்; - தீய
பரப்புச் சொல் சான்றார்வாய்த் தோன்றா; கரப்புச்சொல்
கீழ்கள்வாய்த் தோன்றிவிடும்' - நான்மணி:95

'இன்னா, கொடும்பாடு உடையார்வாய்ச் சொல்' - இன்னா:6:4

'அறைபறை யன்னர் சொல் இன்னா' - இன்னா:23:3

'வல்லாதான் சொல்லும் உரையின் பயன் இன்னா' - இன்னா:28:3

'யாதும் அருள்புரிந்து சொல்லுக சொல்லை' - திரிகடு: 90:3

'படிறும் பயனிலவும் பட்டி யுரையும்
வசையும் புறனும் உரையாரே என்றும்
அசையாத உள்ளத் தவர்' - ஆசாரக்: 52

'விரைந்துரையார், மேன்மேல் உரையார், பொய்யாய
பரந்துரையார், பாரித் துரையார் - ஒருங்கு எனைத்தும்
சில்எழுத்தி னானே பொருளடங்கக் காலத்தால்
சொல்லுக செவ்வி அறிந்து' - ஆசாரக்:76

'. . . . . . . . . . . . . . பொய்யே,
குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் - நான்கும்
மறலையின் வாயினவாம் மற்று' - ஏலாதி: 28

'இயைபு இல்லா வன்சொல்லால் ஆகும் பகைமை' - சிறுபஞ்ச:95:2

'உரைப்பவன், கேட்பான், உரைக்கப் படுவது
உரைத்ததனால் ஆய பயனும் - புரைப்புஇன்றி
நான்மையும் போலியை நீக்கி அவைநாட்டல்
வான்மையின் மிக்கார் வழக்கு' - அறநெறிச்:3

'அற்றுஅறியும் காரணத்தை ஆராய்ந்து அறவுரையைக்
கற்றறிந்த மாந்தர் உரைப்பவே' - அறநெறிச்:33:1-2

'தன்னையும் தன்னில் பொருளையும் பட்டாங்கில்
பன்னி அறம் உரைக்க வல்லார்' - அறநெறிச்:42:1-2

'நம்மைப் பிறர்சொல்லும் சொல்இவை; நாம்பிறரை
எண்ணாது சொல்லும் இழுக்குஇவை என்றெண்ணி
உரைகள் பரியாது உரைப்பார்' - அறநெறிச்:214:1-3

'சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர் நன்றமைந்த

முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே - வெற்றிபெறு
வெண்கலத்தின் ஓசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தின் உண்டோ ஒலி' - நீதிவெண்பா:

'நயனில் வன்சொல்' - பதிற்று.பத்:2:8

'புல்லிய சொல்லும் பொருளும் போலவும்' - பரி:15:12

'செய்யாத சொல்லிச் சினவல்' - கலி:81:27

'இகழ்ந்த சொல்லும் சொல்லி' - அகம்:306:11

'வெஞ்சொல் சேரிஅம் பெண்டிர்' - அகம்:115:4

'தேற்றாப் புன்சொல் நோற்று' - புறம்:202:16

- இனி, நூலாசிரியர் கூறுவன சில இங்குக் கவனிக்கத்தக்கன;

'அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்' - 35

'சிறுமையுள் நீங்கிய இன்சொல்' - 98

'இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று' - 100

'ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும்' - 128

'ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்' - 139

'புறஞ்சொல்லும் புன்மை' - 185

'புறன்நோக்கிப் புன்சொல் உரைப்பான்' - 189

'பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி எனல்' - 196

'அறிவினார் சொல்லார் பெரும்பயன் இல்லாதசொல்' - 198

'சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனில்லாச் சொல்' - 200

'வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்' - 291

'சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு' - 299

'தன்சொலால் தான்கண் டனைத்துஇவ் வுலகு' - 387

'கல்லாதான் சொல்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற்று அற்று' - 402

'கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்' - 403

'கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்' - 405

'இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்' - 415

'பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்து
ஈண்டிய கேள்வி யவர்' - 417

'செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்' - 431

'நாநலம் என்னும் நலனுடைமை' - 641

'ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு' - 642

'திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனின்ஊஉங் கில்' - 644

'சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து' - 645

'பிறர்சொல் பயன் கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்' - 646

'சொலல்வல்லன் கோர்விலான் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது' - 647

'விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்' - 648

'இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார்' - 650

'ஆராய்ந்த சொல் வன்மை' - 682

'தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது' - 685

'கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லி' - 686

'வடுமாற்றம் வாய்சோரா வன்க ணவன்' - 689

'குறிப்பறிந்து காலம் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்' - 696

'வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்
கேட்பினும் சொல்லா விடல்' - 697

'அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்' - 711

'இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்' - 712

'சொல்லின் வகையறியார் வல்லதூஉம் இல்' - 713

'கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லார் அகத்து' - 717

'உணர்வது உடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று' - 718

'புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார்' - 719

'அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்' - 720

'வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்' - 721

'கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார்' - 722

'கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற
மிக்காருள் மிக்க கொளல்' - 724

'பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்' - 728

'உளரெனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்' - 730

'நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை உணரப் படும்' - 826

'நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு' - 953

'நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்' - 959

**'பிறர்தீமை சொல்லா நலத்தது சால்பு'** - ***984***

**'நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி'** - ***995***

**'இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த**
**சொற்பிறக்கும் சோர்வு தரும்'** - ***1044***

**'நல்கூர்ந்தார் சொற்பொருள் சோர்வு படும்'** - ***1046***

**'அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட**
**மறைபிறர்க்கு உய்த்துஉரைக்க லான்'** - ***1076***

*- இனி, புறங்கூறுதல் உணர்வு உடையவரே, பயனிலசொல்லும் அறியாமை உணர்வுடையவராக இருப்பார் ஆகலினாலும் பெரும்பாலும் ஒருவரோடு ஒருவர் உரையாடுதல் மனமகிழ்வுக்கும், அறிவு வளர்ச்சிக்கும், செயல்தூண்டலுக்குமே ஆகலானும் இவ்வதிகாரம், புறங்கூறாமை அதிகாரத்தின் பின்னும், பயனில சொல்லுதல் தீவினைக்கும் அடிகோலுதல் பற்றித் 'தீவினையச்சம்' அதிகாரத்திற்கு முன்னும் வைக்கப் பெற்றது என்க.*

## ககூ க. பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
## எல்லாரும் எள்ளப் படும் - 191

பொருள்கோள் முறை: **இயல்பு**

பொழிப்புரை : *பல தரத்தினருள்ளும் பெரும்பான்மையரால் வெறுக்கும்படி, சொல்லாலும் பொருளாலும், அவனுக்கும் பிறர்க்கும் பயனில்லாதவற்றைச் சொல்லித் திரிபவன், இறுதியில், எல்லாராலுமே இழிவாகப் பேசப்படுவான்.*

சில விளக்கக் குறிப்புகள்:

1) **பல்லார் முனிய:** *பல தரத்தினருள்ளும் பெரும்பான்மையரால் வெறுக்கும்படி பல்லார் என்றது, பலதரத்துள்ள மக்களை. பலர் என்றதால் அவனைப் போலவே உள்ள சிலர் அவனை வெறுக்காமல் விரும்பவும் செய்குவர் என்பதைக் குறிப்பால் உணர்த்தினார் என்க. என்னை? - மக்கள் அமைப்பில் உள்ள பலதரத்தினருள்ளும் அனைவருமே பயனில சொல்லுவானை வெறுத்தல் இயலாது. அவருள் சிறுபான்மையர் அவனை விரும்பவும் செய்யலாம். எல்லாருமே வெறுப்பதாயின் அவன் பயனில சொல்லுதல் யாரிடம் நேரும்? எனவே, அவனைப் போலவே மனப்பான்மை உள்ள ஒரு சிலராகினும் அவன் சொல்லும் ஆரவார, இழிவான, அல்லது பொய்யான சில செய்திகளை விரும்பிக் கேட்கவே செய்வர். இக்குமுகாய உளவியல்*

உண்மையை ஆசிரியர்,

**'செவிச்சொல்லும் சேர்ந்த நகையும்'** - **694**

**'நகைவகைய ராகிய நட்பு'** - **817**

**'அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்**
**மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ்'** - **1074**

ஆகிய இடங்களில் தெளிவுறுத்துவார்.

- இனி 'பல்லார்' என்பதற்குப் பரிமேலழகர் 'அறிவுடையார் பலரும்' என்று பொருள் தருவர்.
- இவரையொட்டிப் பாவாணரும் அதனை வழிமொழிவர்.
- மணக்குடவர் 'பலர்' என்று பொதுவானும்,
- பரிதியாரும், காலிங்கரும் 'தனக்கு வேண்டாதார்' என்றும் உரைப்பர்.
- அறிவுடையார் இத்தகையாரை நெருங்கவும் விடாராகையால் அவர்தம் 'பயனில் சொல்' கேட்கவும், முனியவும் வாய்ப்பில்லை என்பதால், 'அறிவுடையார் பலர்' என்றது பொருந்தாது.
- 'தனக்கு வேண்டாதார்' எனலும், கேட்கவே வாய்ப்பில்லாமற் போவதாலும் முனிதலும் இல்லாமற் போனதாலும், பொருந்தாவுரையே.
- இனி மக்கள், கற்றார், கல்லாதார், வணிகர், கலைஞர், கல்வியாளர், பெண்டிர், இளவர், மாணவர், உழைப்பாளர் முதலிய பலதரத்தினராக இருப்பதே உலகியல்.
- அவ்வாறு இருப்பாருள் பெரும்பான்மையரிடம் 'பயனில சொல்லுவார்' தொடர்பு கொள்ளுவதும் இயல்வதும் இயற்கையுமாகும்.
- எனவே, அவர்கள் அவர்தம் வீணான பேச்சைக் கேட்கவும் வாய்ப்புண்டு. அவ்வாறு கேட்ட பின்னர் அவர்கள், அத்தகவிலாதாரை வெறுத்தலும் இயல்பாக நடைபெறுவதே - என்க.
- இனி, அவருள்ளும் சிறுபான்மையர் அன்னாரை விரும்பவும் கூடும்.
- இறுதியில் அவர்தமை வெறுத்தாரும் விரும்பியாரும் சேர்ந்த எல்லாருமே இழிவுகூறிப் பேசுவர் என்பது அடுத்த கருத்தான் விளக்கப்பெறும்.

2) **பயனில சொல்லுவான்:** சொல்லாலும் பொருளாலும், அவனுக்கும் பிறர்க்கும் பயனில்லாதவற்றைச் சொல்லித் திரிபவன்.

பயனில என்பதற்குப் 'பயனிலவாகிய சொற்களை' என்பது குறைபொருளாகும் 'சொல்லாலும் பொருளாலும்' என்பதே

*நிறைபொருளாம். என்னை? 'வெறுஞ்சொற்கள்' பயனையோ, பயனின்மையையோ உணர்த்தா வென்க.*

- *மேலும் 'பயனில' என்பதனுள் 'தனக்கும் பிறர்க்கும்' என்பதடங்கும், என்க.*

3) **எல்லாரும் எள்ளப் படும்:** *இறுதியில் எல்லாராலுமே இழிவாகப் பேசப்படுவான்.*

*எல்லாரும் என்பதனுள். அவனை முனிந்த பொரும்பான்மையினரும், விரும்பிய சிறுபான்மையினரும் ஆகியர் சேர்ந்த எல்லாருமே எனும் பொருள் அடங்கும் என்க.*

- *இனி, மக்களுள் பலதரத்தினரும் என்பதும் அதில் இணையும்.*

- *இதற்குப் பரிதியாரும், காலிங்கரும் அவர்கள் பொருளில், 'வேண்டினபேரும் வேண்டாத பேரும்' எனப் பொருள் விரிப்பர்.*

*'எல்லாராலும்' என்பதை 'எல்லாரும்' என்றது செய்யுள் நோக்கிவந்த வேற்றுமைத் தொகை.*

*எள்ளப்படும் : இழிவாகப் பேசப் படுவான்; இகழப்படுவான்.*

- *பாவாணர், 'எள்ளுதல் மனத்தின் செயல்' என்று கூறி, 'இழிவாய் எண்ணப்படுவான்' என்று மட்டில் கூறி முடிப்பார். அது குறையாம். 'அவரவர் எண்ணிக்கொள்வதால் இழிவும் இகழ்ச்சியும் தோன்றா' என்க.*

4) *இது, பயனில சொல்லுவான், குமுகாயத்துள் அனைத்துத் தர மக்களாலும் வெறுக்கப்பட்டு இழித்துரைக்கப் படுவான் என்று பொதுவான தீமை கூறியது.*

## கக௯ உ. பயனில பல்லார்முன் சொல்லல் நயனில நட்டார்கண் செய்தலின் தீது - 192

பொருள்கோள் முறை:

**பல்லார்முன் பயனில சொல்லல்,**
**நட்டார்கண் நயனில செய்தலின் தீது.**

பொழிப்புரை : *பயனில்லாதவற்றைப் பலரிடமும் சொல்லித் திரிவது, ஞாயமில்லாதவற்றை நண்பர்களிடம் செய்வதைவிடத் தீமை பயப்பதாகும்.*

**சில விளக்கக் குறிப்புகள் :**

1) **பல்லார்முன் பயனில சொல்லல்** : பயனில்லாதவற்றைப் பலரிடமும் சொல்லித் திரிவது.

பல்லார்முன் - என்பது முன்னைய குறளிலேயே விளக்கப்பெற்றது. இங்கும் பலதரத்து மக்களிடையே என்னும் பொருள் பொருந்தும்.

2) **நட்டார்கண் நயனில செய்தலின் தீது** : ஞாயமில்லாதவற்றை நண்பர்களிடம் செய்வதைவிடத் தீமை பயப்பதாகும்.

நட்டார்கண்: நட்புக் கொண்டவர் இடத்து.

நயனில - ஞாயம் இல்லாத வற்றை

நயன் - ஞாயம் (நீதி)

**'நயன் சாரா'** - **(194)**

**'நயனில சொல்லினும்'** - **(197)**

**'நயனுடையான்'** - **(216, 219)**

**'நயன் தூக்கி'** - **(912)**

- என்னும் இடங்களிலெல்லாம் ஞாயத்தை - நடுநிலையை - நீதியையே குறித்தது என்க.

- 'நயனில' என்பதற்கு இவ்விடத்தில் மணக்குடவரும், பரிமேலழகரும், பாவாணரும் 'விருப்பமில்லாத' என்னும் பொருளையே தருகின்றனர். அது பொருந்தாது.

- நண்பர் விரும்பாததைச் செய்வது தீது என்று சொல்ல முடியாது. அவர் விருப்பம் தீதாகவும் இருக்கலாம் ஆகலின்.

- எனவே, நண்பரிடத்து ஞாயமில்லாதவற்றைச் செய்வதுதான் தீதாக இருக்க முடியும்.

3) இக்குறளில் இரண்டு தீமைகள் குறிக்கப் பெறுகின்றன. ஒன்று - பயனில பல்லார்முன் சொல்லுதல்.

இரண்டு - நயனில நட்டார் கண் செய்தல்.

- இந்த இரண்டு தீமைகளிலும் 'பயனில பல்லார்முன் சொல்லுதல்' பெரிய தீமை என்கிறார், ஆசிரியர். இஃது எப்படி என்று ஆய்தல் வேண்டும்.

- நயன் (ஞாயம்) இல்லாத வற்றை நண்பர்களிடம் செய்வது நண்பர்கள் பொறுத்துக் கொள்ளும் செயல்களாகக்கூட இருக்கலாம். அல்லது

அவர்கள் அவற்றால் பெருங்கேடுகளை அடையாதவையாகவும் இருக்கலாம்.

- ஞாயம் இல்லாதவையுள் சில :

1) நண்பர்களிடம் பெற்ற கடனைத் திருப்பித் தராமல் மறந்து விடுவது அல்லது ஏமாற்றிவிடுவது.

2) நண்பர்களுக்காகச் சிறுவிலையில் வாங்கிய பொருள்களைப் பெருவிலை சொல்லிப் பெறுவது.

3) அவர்கள் பொருளுதவியோ வேறு உதவிகளோ கோரும் பொழுது, தன்னால் செய்யமுடிந்தும் முடியாது என்று பொய்கூறி மறுத்து விடுவது.

4) அவர்களைக் கேளாமலே அவர்தம் பெயரையும் சாய்காலையும் பயன்படுத்தித் தமக்கு நன்மை தேடிக்கொள்வது.

**'கெழுதகையான் கேளாது நட்டார் செயின்'** - *(804)*

5) பெருங்கிழமை (உரிமை)யால், நண்பர்கள் மனம் நோகும்படி செய்வது.

'பெருங்கிழமை என்றுணர்க
**நோதக்க நட்டார் செயின்'** - *(805)*

6) நண்பர்களுக்கு இழப்பையும் அழிவையும் தரும்படி செய்வது

**'அழிவந்த செய்யினும் அன்பறார்'** - *(807)*

- போன்றவை என்க. இவை ஞாயமில்லாமற் செய்யும் செயல்கள்.

- ஆனால், இவற்றால் நண்பர்கள் பெறும் கேடுகளும் மனத்துயரும் அவர்களுக்கு மட்டுமே நிகழக் கூடியவை. மேலும் அவற்றைக் கெழுதகையால் பொறுத்துக் கொள்ளவும் செய்யலாம். (பார்க்க : 'நட்பியல்' , 'பழைமை' அதிகாரம்)

ஆனால், பயனில பல்லார்முன் சொல்லல் எவ்வாறான தீமை என்பதையும் பார்த்தல் வேண்டும்.

1) பயனில்லாதவற்றைச் சொல்லும் உணர்வுள்ளவன் நடுவு நிலையில்லாத உணர்வினாய், பிறர்பொருளைப் பார்த்துப் பொறாமை கொண்டவனாய், அவர் பொருளைக் கவரவும் எண்ணுபவனாய் இருக்கிறான்.

**'பிறனாக்கம் பேணாது அழுக்கறுப்பான்'** - *(163)*

**'பொருள்வெஃகிப் பொல்லாத சூழக்கெடும்'** - *(176)*

- எனவே புறஞ்சொல்லும் புன்மை அவனிடம் இயல்பாகவே

காணப்படுகிறது.

'புறஞ்சொல்லும் புன்மையால் காணப்படும்' - **185**

'புறம் நோக்கிப் புன்சொல் உரைப்பான்' - **189**

இத்தவறான உணர்வு பரவுதல் மக்கள் அமைப்புக்குக் கேடாக முடிகிறது.

2) பயனில்லாதவற்றைச் சொல்லுகின்ற உணர்வால் இழிவுணர்வு பரவுகிறது. அறிவுணர்வு கெடுகிறது. மக்கள் ஒருவரை ஒருவர் வெறுக்கத்தக்க வுணர்வு தோன்றி வளர்கிறது. இவற்றால் குமுகாயச் சமநிலை கெடுகிறது.

- இத்தகைய கேடுகள் தனிப்பட்ட ஒருசிலர்க்கு நேரும் கேடுகளைவிட குமுகாயத்தையே சீர்குலையச் செய்வதால், பல்லார்முன் பயனில சொல்லல், நட்டார்கண் நயனில செய்தலைவிடத் தீதாகிறது என்க.

3) இஃது எல்லாராலும் எள்ளப் படுவானாகிய பயனில சொல்வானின் குமுகாயக் கேடுகளைக் கூறுதலால், முன்னதன் பின் வைக்கப் பெற்றது.

## கசுரு. நயனிலன் என்பது சொல்லும் பயனில பாரித்து உரைக்கும் உரை - 193

**பொருள்கோள் முறை:**

***பயன் இல பாரித்து உரைக்கும் உரை,***
***நயனிலன் என்பது சொல்லும்.***

**பொழிப்புரை:** பயனில்லாதவற்றை ஒருவன் விரிவாக எடுத்துப் பேசும் உரையே, அவன் யாருக்கும் நன்மையாக இல்லாதவன் என்பதை உணர்த்தி விடும்.

**சில விளக்கக் குறிப்புகள் :**

1) **பயன் இல பாரித்து உரைக்கும் உரை :** பயனில்லாதவற்றை ஒருவன் விரிவாக எடுத்துப் பேசும் உரையே.

பாரித்து: பரவலாக, விரிவாக

உரைக்கும் உரை: எடுத்துப் பேசும் உரையே.

2) **நயன் இலன் என்பது சொல்லும் :** அவன் யாருக்கும் நன்மை இல்லாதவன் என்பதை உணர்த்திவிடும்.

நயன் - இவ்விடத்தில் நன்மை என்று பொருள்.

- *இதற்குப் பரிமேலழகரும் அவரை யொட்டிப் பாவாணரும் ஞாயம் (நீதி) (நெறி) என்று பொருள் கூறுவர்.*

- *ஒருவன் ஞாயமுள்ளவன் எனில், அவன் தனக்கும் பிறர்க்கும் நடுநிலை உணர்வுடையவனாக இருத்தல் வேண்டும்.*

- *எனவே, பயனில்லாதவற்றைச் சொல்பவன் ஞாய உணர்வு இல்லாதனாக இருத்தல் வேண்டும். ஞாய உணர்வு உள்ளவனே அவ்வாறு நடவாத பொழுதுதான் அவன் ஞாயமில்லாமல் நடக்கிறான் என்பது சரியான கூற்றாக இருத்தல் முடியும். என்னை? பார்வை உணர்வு உள்ளவனைத்தான் இவர் பாராதவனாக இருக்கிறான் என்று சொல்வது சரியாகும். பார்வை யற்றவனைப் போய், இவன் பாராதவனாக இருக்கிறான் என்று சொல்வதில் பொருளில்லை, என்க.*

- *எனவே, இங்கு 'நயனிலன்' என்பதற்கு அவன் யாருக்கும் நன்மையில்லாதவனாக இருக்கின்றான் அல்லது இருப்பான் என்பதே சரியான கூற்றாகும்.*

*'நயன்' - நன்மை என்றும் பொருள் தரும்.*

**'பயன்தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்**
**நன்மை கடலினும் பெரிது'** *- (103)*

- *என்னும் குறளில் நயன் - நன்மை என்று பொருள் பட்டது.*

- *பயனில்லாத வற்றைச் சொல்பவனே யாருக்கும் நன்மை யில்லாதவனாகவும் இருத்தல் முடியும்.*

- *அவன் உரையுள் எவ்வாறு அவனுக்கோ, பிறர்க்கோ நன்மை இருக்க இயலாதோ, அப்படியே அவன் யார்க்கும் நன்மை உடையவனாகவும் இருத்தல் இயலாது.*

- *எவனுடைய உரையில் பயன் நன்மை - இல்லையோ, அவனும் பயனில்லாதவனாகவே - நன்மையில்லாதவனாகவே இருப்பான் என்பதே இக்குறளின் திரண்ட பொருளாகும். இதனைச் சுருக்க விளக்கமாகச் சொன்னால், ஒருவன் பயனில்லாதவன் என்பதை அவனின் பயனில்லாத வாயுரையே காட்டிவிடும்' என்றார், என்க.*

- *இன்னும் சுருக்கிச் சொல்வதானால், 'வீண்பேச்சும் வெற்றுப் பேச்சும் உள்ளவன் வீணன் என்று கருதிக் கொள்ளுதல் வேண்டும்' என்றார், என்க.*

*'வீணனை ஞாயமில்லாதவன்' என்பது மிகை.*

*3 ) 'பயனில சொல்லுவான் யார்க்கும் தீங்குசெய்வான் என்று முன்குறளில் கூறியவர், அதன் மறுதலையாக, அவனால் யார்க்கும் நன்மையில்லை*

என்பதை அவனின் பயனில்லாத உரையே காட்டி விடும்' என்று இதில் கூறியதால் இஃது அதனை அடுத்து வைக்கப்பெற்றது.

## கக௯ ச. நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப் பண்பில்சொல் பல்லா ரகத்து. - 194

பொருள்கோள் முறை:

***பயன்சாராப் பண்பில் சொல் பல்லார் அகத்து,***
***நயன்சாரா நன்மையின் நீக்கும்.***

**பொழிப்புரை** : *பயனைச் சாராத பண்பில்லாத உரைகளை ஒருவன் பலரிடமும் சொல்லி வருவானானால், (அவ்வுரைகள்) அவர்களின் உள்ளத்தில், நேர்மை உணர்வு படியாமல் செய்து, அவர்களை நன்மை பெறுவதினின்றும் நீக்கிவிடும்.*

**சில விளக்கக் குறிப்புகள் :**

***1) பயன் சாராப் பண்பில் சொல் பல்லார் அகத்து :***

*பயனைச் சாராத பண்பில்லா உரைகளை, ஒருவன் பலரிடமும் சொல்லி வருவானானால் (அவ்வுரைகள்) அவர்களின் உள்ளத்தில்.*

*பண்பில் சொல் : பண்பில்லாத கீழ்மை உரைகள் - சொல்லும் உரைகளில் பயனும் பண்பும் இருத்தல் வேண்டும் என்று அதிகாரத் தலைப்பொடு பொருத்திக் குறிப்புணர்த்தினார் என்க.*

*'அன்பும் அறனும் பண்பும் பயனும்' ஆகும் (45) என்பதை முன்னர்க் கூறினார்.*

*- பயனில்லாத சொற்களுக்குப் பண்பின்மையும் ஒரு கூறு.*

*- பயனில்லாதவற்றைக் கூறுபவன் பண்பில்லாமலும் கூறுவான் என்பது கருத்து.*

*பல்லார் அகத்து : அவ்வுரைகளைப் பலரிடமும் கூறிவருவானானால் அவை அப் பலரின் உள்ளத்திலும்.*

*- அகத்து - அப்பலரின் உள்ளத்தில்.*

*- பல்லார் அகத்து - என்பதற்கு மணக்குடவர், பரிமேலழகர், பாவாணர் போலியர், பலரிடத்து என்றே பொருள் கூறுவர்.*

- அதற்குப் 'பல்லாரகத்து' என்று சொல்ல வேண்டுவதில்லை. 'பல்லாரிடத்து' என்றே சொல்லலாம் என்பதைக் கவனிக்க வேண்டும்.

- இரண்டும் தளைப் பிழையாதிருத்தலை உணர்க.

- 'இடத்து' என்னும் பொருளில் 'அகத்து' என்னும் சொல்லைத் திருவள்ளுவர் போலும் முற்றி முதிர்ந்த அறிவினார் கூறார்.

- இங்குப் பயனில்லாத, பண்பற்ற சொற்களைத் தொடர்ந்து கேட்பார்தம் அகவுணர்வுத் தாக்கத்தையே ஆசிரியர் கூறவந்ததை நுண்ணுணர்வினார் உய்த்து உணர்க.

- அவ்வாறு கேட்பவர்தம் உள்ளத்து நிகழும் மாற்றங்களையே அடுத்துக் கூறவருகிறார் என்பதை முழுவதும் உணர்ந்தால்தான், 'அகத்து' என்பதை 'உள்ளத்து' என்றே பொருள் கொள்ளுதல் வேண்டும் என்று புலப்படும் என்க.

- அவ்வாறன்றி, அவர்கள் அடுத்த தொடர்க்கும் வேறு மயக்கப் பொருளையே கொண்டதை அடுத்துக் காட்டுவோம்.

2) **நயன்சாரா நன்மையின் நீக்கும் :** நேர்மை உணர்வு படியாமல் செய்து, அவர்களை நன்மை பெறுவதினின்றும் நீக்கிவிடும்.

- இந்த அடிக்குப் பொருள் கூறிய மணக்குடவர், பரிமேலழகர், பாவாணர் முதலியோரும், இந்த விளைவைப் பயனில கூறுவான் மேலேற்றிக் கூறிப் போந்தனர்.

- பரிதியார், 'நலஞ்சேராமல், திருமாது (திருமகளும்) போம்' என்றும்,

- காலிங்கர் 'நலஞ் சேராமல் திருமாதும் பொய்க்கும்' என்றும் பொருள் தருவது இன்னும் பொருந்தாததாம்.

- ஆனால், பயனில சொல்லுவார்க்கு இந்த விளைவுகள் ஏற்படுவதாகக் கூறுவது, மிகவும் தவறாகும்.

- ஏனெனில், பயனில சொல்லுவானுக்கு வரும் கேடுகள் முன்னரே கூறப்பெற்றன.

- அவனை எல்லாரும் எள்ளுவர் (191) என்றும், நயனில நட்டார்கண் செய்தலினும் அவன் கேடடைவான் (192) என்றும், அவனின் எந்த நன்மையும் பெறமாட்டான் என்றும் (193), அவனுக்கேற்படும் விளைவுகளைக் கூறியபின், மீண்டும் அவனைப் பற்றியே அதே கருத்துகளைத் திரும்பக் கூற மாட்டுவரல்லர் ஆசிரியர் என்க.

- இதில் கூறப்பெறும், நேர்மை உணர்வு உள்ளத்தில் படியாமல் போகும். அவர்கள் வாழ்வியல் நன்மை பெறுவதினின்றும் கேட்கப் பெறும்

பயனில்லாத பண்பில்லாத உரைகள் செய்து விடும் என்பது, அவ்வுரைகளைக் கேட்டவர்களுக்கு ஏற்படும் விளைவுகளாக, ஆசிரியர் கூறுவது நுணித்து அறியக் கூடியது.

- இவ் விளைவுகளை பயனில சொல்லுவார் மேல் சாற்றிக் கூறுவதாக உரைதருவது, பொருத்தமும் சிறப்பும் இல்லாதது என்று கூறி விடுக்க.

- இக்குறள் கூறும் பொருளை இவ்வதிகாரத்தில் வரும் 196 ஆம் குறளில் மேலும் விளக்குவார், அதன் சிறப்பை ஆண்டுக் கூறுவாம்.

3) இதில், பயனில சொல்லுவான் உரைகளைக் கேட்பவர்களுக்கு ஏற்படும் மனஅழிவு விளைவுகள் கூறப்பெற்றதால் முன்னவற்றைத் தொடர்ந்து இது நிரல்படுத்தப் பெற்றது என்க.

## கக௫ ரு. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
## நீர்மை உடையார் சொலின். - 195

**பொருள்கோள் முறை:**

**நீர்மை உடையார் பயனில சொலின்,**
**சீர்மை சிறப்பொடு நீங்கும்.**

**பொழிப்புரை:** நல்லகுணம் உடையவர் பயனில்லாதவற்றைச் சொல்வாராயின், அவர்க்குற்ற மேன்மையும் பெருமையும் ஒருங்கே நீங்கிவிடும்.

**சில விளக்கக் குறிப்புகள்**

1) **நீர்மை உடையார் பயனில சொலின் :** நல்ல குணநலன் உடையவர் பயனில்லாதவற்றைச் சொல்வாராயின்,

நீர்மை - நீரினது தன்மை.

- அஃதாவது குளிர்மை, பரவல் தன்மை, நெகிழ்வு மற்றவர்க்குத் தக நடத்தல் - முதலிய நல்ல குணங்கள் உடையதாம் தன்மை. (பார்க்க : 'ஒழுக்கமுடைமை' - அதிகார முன்னுரை). - இயல்பான தன்மையும் ஆம்.

**'தக்காரும் தக்கவர் அல்லாரும் தந்நீர்மை**
**எக்காலும் குன்றல் இலராவர்'** - **நாலடி :112 : 1**
**'நீர்மை கொண்டன தோள்'** - **ஐந். ஐம்.2:4**
**'குணநீர்மை குன்றாக் கொடி அன்னாள்'** - **திணைமொழி 44:3**
**'நட்பின் நய நீர்மை'** - **திரிகடு : 86 : 13**

2) ***சீர்மை சிறப்பொடு நீங்கும் :*** *அவருக்குற்ற மேன்மையும் பெருமையும் ஒருங்கே நீங்கிவிடும்.*

*சீர்மை : மேன்மை, உயர்ந்த தன்மை.*

***'செறிவறிந்து சீர்மை பயக்கும்' - 135***

*சிறப்பு : பெருமை, புகழ்த்தன்மை. 'பெருஞ்சிறப்பு' - (58)*

***'ஒன்னார் விழையும் சிறப்பு' - (630)***

***'செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு' - (750)***

- *மேன்மையும் பெருமையும் முன்பே தம் நீர்மையால் பெற்றிருந்தவர்கள், பயனில்லாதவற்றைச் சொல்லத் தொடங்குவாராயின், அவை அவர்களினின்று படிப்படியாய் நீங்கி விடும் என்றார்.*

- *அத்தகையவர் பயனில்லாதவற்றைப் பேசத்தொடங்கிய பின், அவற்றைக் கேட்பவர்கள் அவர்மேல் கொண்ட நல்லெண்ணங்களையும், பெருமையையும் கைவிடுவாராகையால், அவை நீங்கும் என்றார்.*

3) *முன்னைய குறளில், பயனில சொல்வதைக் கேட்டவர்க்கு, நேர்மை உணர்வும், நன்மைகளும் நீங்கும் என்றவர், இதில் அவ்வாறு சொல்பவர் ஏற்கனவே உயர்வும் சிறப்பும் பெற்றவராயிருப்பின், அவையும் நீங்கும் என்றதால், அதையொட்டி இது வைக்கப் பெற்றது.*

## கக௯சா. பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
## மக்கட் பதடி எனல் - 196

**பொருள்கோள்முறை: இயல்பு.**

**பொழிப்புரை:** *பயனில்லாத உரைகளைக் கூறுகின்றவனையும், அவற்றைச் செவிமடுப்பவனையும் மாந்தப் பிறவி என்று கூற வேண்டாம். மக்களினத்தின் பதர் என்று கூறுக.*

**சில விளக்கக் குறிப்புகள்**

1) ***பயனில் சொல் பாராட்டுவானை மகன் எனல்:*** *பயனில்லாத உரைகளைக் கூறுகின்றவனையும், அவற்றைச் செவிமடுப்பனையும் மாந்தப் பிறவி என்று கூற வேண்டாம்.*

***பாராட்டுவானை :*** *போற்றிக் கொள்பவனைப் போற்றிக் கொள்ளுதல் - கூறுதலும் செவிமடுத்தலும். செயற்பயனைக் கூறினார் என்க.*

- பாராட்டுதல் - என்பதற்கு மணக்குடவர், 'கொண்டாடுதல்' என்றும், - பரிமேலழகர் : 'பலகாலும் சொல்லுதல்' என்றும், - பாவாணர், 'பலகாலும் விரும்பிச் சொல்லுதல்' என்றும் பொருள் தருவர். -அவையும் பொருந்துவன எனினும், கூறுதலும் கேட்டலும் ஆகிய இருநிலையும் அதில் உளவாதல் பற்றியும், இரண்டு செயல்களும் போற்றுதல் அடிப்படையிலேயே நிகழ்வன பற்றியும் இரண்டு நிலைகளையும் இணைத்துக் கூறியதாகவே கருதுதல் வேண்டும். கேட்கப் பெறாது அது சொல்லப் பெறாது ஆகலான்.

மகன் எனல் : மாந்தப் பிறவி என்று கூற வேண்டாம். - இங்கு 'அல்' ஈறு எதிர்மறைப் பொருளில் வந்தது.

- மகன் - மக்களில் ஒருவன் - இஃது இருவரையும் குறிக்கும்.

2) மக்கள் பதடி எனல் : மக்கள் பதர் என்று கூறுக. பதடி - பதர், உள்ளீடற்ற நெல்.

- சொல்வதில் பொருள் உள்ளீடு இன்மையால், நெல்லில் உள்ளீடற்ற பதரை உவமை கூறினார்.

- சொல்லில் பொருளில்லாதது போல், மக்கட்குப் பொதுவாக இருக்க வேண்டிய பொது அறிவு இல்லாமையால் மக்கட் பதடியாயினர்.

- மக்கட் பதராகிய அவர்களை அவர் இவர், அவன் இவன், அவள் இவள் - என்னாது அது இது என்று அஃறிணைச் சுட்டால் அழைத்தல் போன்றது.

- இங்கு 'அல்' ஈறு உடன்பாட்டுப் பொருளில் வந்தது.

3) சீர்மையும் சிறப்பும் நீங்கும் என்று முன்னைக்குறளில் கூறியவர், இதில் அவை நீங்கிய நிலையில் அவரை அஃறிணையினும் ஓராறி வுயிராகக் கூறியதால், அதன்பின் இஃது இடங்கொண்டது.

**கசுஎ. நயனில சொல்லினும் சொல்லுக சான்றோர்**
**பயனில சொல்லாமை நன்று. - 197**

**பொருள்கோள் முறை:**

**சான்றோர் நயனில சொல்லினும் சொல்லுக**
**பயனில சொல்லாமை நன்று.**

**பொழிப்புரை:** அறிஞர் பிறர்க்கு விருப்பமிலாதவற்றை ஒருகால் சொல்லினும் சொல்லுக. (அது தீது பயவாது) ஆனால், பயனில்லாதவற்றைச்

சொல்லாமலிருப்பது நல்லது. (அது தீது பயக்கும்).

**சில விளக்கக் குறிப்புகள்:**

**1) சான்றோர் நயனில சொல்லினும் சொல்லுக :**

அறிஞர், பிறர்க்கு விருப்பமிலாதவற்றை ஒருகால் சொல்லினும் சொல்லுக. (அது தீது பயவாது).

சான்றோர் : சான்றாண்மை உடையவர். அறிவினும் பண்பினும் ஒழுக்கத்திலும் சிறந்தவர் அறிஞர்.

(இச் சொல்லின் விரிவான விளக்கத்தைக் குறள் 118-இன் விளக்கக் குறிப்பில் காண்க).

**நயனில :** இங்கு விருப்பமிலாதவற்றைக் குறித்தது. நயத்தல் - விரும்புதல்.

- பரிமேலழகர் இங்கு, 'நீதியோடு படாத சொற்கள்' என்றும், - பாவாணர், 'நேர்மையில்லாத சொற்களை' என்றும் பொருள் தருவர். - அவை இருபொருளும் சான்றான்மைக்கே இழுக்காம் ஆகலின் அவை கூடாவாம் என்க. அறிவுடையார், ஒருகால் கேட்பவர்க்கு விருப்பமில்லாதவாறு சொல்லாலும் பொருளாலும் கவர்ச்சியில்லாதவற்றைப் பற்றியும் கூறநேரலாம் ஆகலின் அப்பொருளையே கொள்வது பொருத்தம் என்க.

- சொல்லினும் - சொல்ல நேர்ந்தாலும் சொல்லாமை குறித்தது.

- சொல்லுக: (எனினும்) சொல்லுக, சொல்லலாம்.

- சொல்லுக என்றலால் தீங்கு குறியாமை வருவிக்கப் பெற்றது.

**2) பயனில சொல்லாமை நன்று :** (ஆனால்) , பயனில்லாதவற்றைச் சொல்லாமலிருப்பது நன்று.

சொல்லாமை நன்று - என்றதால் தீங்கு குறித்தமை வருவிக்கப் பெற்றது.

3) நயனில் சொல்வதால், கேட்பவர் விரும்பாவிடினும், அதைக் கேட்டலால் தீங்கு நேராத தன்மை விளங்கிற்று. ஆனால் பயனில சொல்வது, கேட்பவர்க்கு, யாதானும் ஒருவகையில் தீங்கு நேருமாகையால் அதனைச் சொல்லாமை நன்று என்றார்.

4) இஃது அறிவோர் பயனில சொல்லாமை வேண்டும் என்று குறித்தது.

## கசு அ. அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
## பெரும்பயன் இல்லாத சொல் - 198

பொருள்கோள் முறை:

**அரும்பயன் ஆயும் அறிவினார்**
**பெரும்பயன் இல்லாத சொல் சொல்லார்.**

பொழிப்புரை : எதிலும், பிறர் எளிதில் அறிவதற்கரிய பயன்களை ஆராய்ந்து உணரும் திறன் உள்ள அறிஞர், பிறர்க்குப் பெரும்பயன் இல்லாத சொற்களையோ பொருளையோ சொல்லமாட்டார்.

சில விளக்கக் குறிப்புகள் :

1) **அரும்பயன் ஆயும் அறிவினார் :** எதிலும், பிறர் எளிதில் அறிவதற்கரிய பயன்களை ஆராய்ந்து உணரும் திறன் உள்ள அறிஞர்.

அரும்பயன் : எதிலும் பிறர் எளிதில் அறிவதற்கரிய பயன்களை.

ஆயும் அறிவினார் : ஆராய்ந்து உணரும் திறன்உள்ள அறிஞர். - மேலோட்டமாக அறிய இயலாததை, ஆராய்ந்து உணரும் திறன் உள்ள அறிஞர். என்னை?

**'எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு'** **(355)**

- ஆகலின் என்க.

2) **பெரும்பயன் இல்லாத சொல் சொல்லார் :** பிறர்க்குப் பெரும்பயன் இல்லாத சொற்களையோ பொருளையோ சொல்ல மாட்டார்.

'பெரும்பயன் இல்லாத சொல் சொல்லார்' என்றலின்.

'பெரும்பயன் உள்ள சொற்களையே சான்றோர் சொல்லுவர்' என்று குறித்தார்.

**'பயனீன்று பண்பின் தலைப்பிரியாச் சொல்'** **- 97**
**'பயன்தெரிவார்'** **- 104**
**'வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்**
**மாட்சியின் மாசற்றார் கோள்'** **- 646**
- என்று உணர்த்தினார், ஆசிரியர்.
**'பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்பினிதே'** **- இனி.நா: 6:2.**
**'பயமொழி பண்பு பல கூறி'** **- கைந்நிலை:43:3**

- என்றார் பிறரும்.

- 'பெரும் பயனில்லாத' எனவே, பயன் சிறிது உடையனவும் ஒழிக்கப் பட்டன' - என்பார் பரிமேலழகர்.

- 'தன்பால் கேட்போர்க்குப் பெரிதும் பயனில்லாத சொல்லினைச் சொல்லார்' என்பார் காலிங்கர்.

3) **'அரும்பயன் ஆய்தல்'** - என்பது இவ்வுலகின்கண் உள்ள ஒவ்வொரு பொருளும், அதைச் சுட்டும் ஒவ்வொரு சொல்லும், ஒவ்வொரு பயனை நோக்கியே தோற்றுவிக்கப் பெற்றுள்ளன என்பது மெய்ப்பொருள் கொள்கை என்க. என்னை?

**'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' - தொல்: 640**

**'பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்**
**சொல்லின் ஆகும் என்மனார் புலவர்' - தொல்: 641**

- என்றலால், சொல்தோற்றக் காரணமும்,

**உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே' - தொல்: 876**

- என்றலால் எதனையும் ஆராய்ந்தறிதல், அறிவு வழிப்பட்ட தென்னும் விளக்கமும்,

**'கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்**
**உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்**
**நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே' - தொல்:1221**

- என்றலால், அவ் வறிஞர்களே, எந்தப் பொருளின் தன்மையையும், கண்ணுணர்வாலும், செவியுணர்வாலும், அறிகின்ற நுண்ணுணர்வு பெற்றுள்ளனர் என்பதும், அவர்களே அவற்றை ஆராய்ந்து நன்னயங்களை உணர்தலும், உணர்த்தலும் முடியும் என்பதும், மற்ற பிறர் அவற்றின் உண்மைகளை எண்ணுதற்கும் அரியது, இயலவும் இயலாது என்பதும், இங்குக் கூறப்பெற்றுள்ள தொல்காப்பிய நூற்பாக்களால் அறிந்து கொள்க.

4) 'இனி அரும்பயன் ஆயும்' என்பதற்கு விளக்கம் தருகையில், பரிமேலழகர்.

'அறிதற்கரிய பயன்களாவன, வீடுபேறும், மேற்கதிச் செலவும் முதலாயின' என்றதும்,

- காலிங்கர், 'பெறுதற் கருமையுடைய மறுமைப் பயனைத் தாம் பெறுதற்குத் தக்க நெறியினை ஆராயும்' என்றதும், - பாவாணர், 'நாள், கோள் இயக்கமும், மெய்ப்பொருளியலும் வீடுபேறும் முதலியன' என்பதும்.

- இவ்வுலகியல் தொடர்பற்ற புனைவியல் விளக்கங்களாம் என்க. என்னை?
- அறிஞர்கள் ஆய்கின்ற மக்களியல் சார்ந்த நுண்பொருள்கூறுகள், எப்பொழுதும் இவ்வுலகியல் சார்ந்தவையாகவே இருத்தல் வேண்டும் என்பதும், அப்பொழுதுதான் இவ்வுலகம் சார்ந்த மக்கள் இயக்கம் சரிவர இருக்கும் என்பதுமே மெய்யறிவினார் கொள்கை என்க. அவற்றை ஆசிரியர் கூற்றுகளாலேயே தெளிவிப்போம்.

'ஒப்புரவறிதல்' அதிகாரத்து, ஒப்புரவுணர்வின் - சமநிலை உணர்வின் - பொதுநிலை உணர்வின் - பயன் புத்தேள் உலகத்தும் பெறலாம் எனினும், அஃது இவ்வுலகத்தும் பெறல் வேண்டும், என்பதை,

**'புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே**
**ஒப்புரவின் நல்ல பிற'** - *213*

என்பதும்,

'துறவு' அதிகாரத்து, துறவின் பயனால், இவ்வுலகத்தும் பெறவேண்டிய பல, என்பதை

**''வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்**
**ஈண்டு இயற்பால பல'** - *342*

என்பதும்,

'அவா அறுத்தல்' அதிகாரத்து அவாவுதல் இன்மைபோல் விழுமிய செல்வம் இவ்வுலகத்து வேறொன்றுமில்லை வேறெங்கும் அதுபோல் வேறில்லை, என்பதை,

**'வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை**
**யாண்டும் அஃதொப்பது இல்லை.'** - *363*

என்பதும்,

இறைமாட்சி அதிகாரத்துத்

**' தன்சொலால், தான் கண்டனைத்துஇவ் வுலகு'** - *387*

- என்பதும்,

'அமைச்சு' அதிகாரத்து, இவ்வுலகத் தன்மைகளுக்கு உரிய செயற்கை நிலைகளை அறிந்தபோதும், இவ்வுலக இயலின் இயற்கை நிலைகளையும் அறிந்து செய்தல் வேண்டும், என்பதை

**'செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து**
**இயற்கை அறிந்து செயல்'** - *637*

என்பதும் நன்கு கவனிக்கத் தக்கன.

அதுவன்றி, எந்த ஓர் உலகத்துச் சிறுசெயலுக்கும் இவ்வுலகியல் Secular, wordly, opposed to spiritual - calling - (ondon) அல்லாத, வெளியுலகக் கற்பனைப் புனைவுகளைப் பொருத்தி வலித்துப் பொருள் கூறுதல், இவ்வுலகை மதியாத ஒரு செயலும், மக்களை வாழ்வியலில் ஈடுபடச் செய்யாது மதவியல் சேற்றில் கொண்டு புதைப்பதுமான அறியாமையும் ஆகும், என்க.

5) முன்னைய குறளில் சான்றோர் பயனில சொல்லாமை நன்று என்றவர், இதில். அறிவினார் சொல்லார் என்றலின் அதன் பின்னர் இதனை இணை வைத்தார் என்க.

**கசுசு . பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள்தீர்ந்த மாசறு காட்சி யவர். - 199**

பொருள்கோள் முறை:

*மருள் தீர்ந்த மாசறு காட்சியவர்*
*பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார்.*

பொழிப்புரை : மனமயக்கம் நீங்கிய குற்றமற்ற அறிவை உடையவர் பொருட்பயன் நீங்கிய சொற்களை மறதியாகவும் சொல்லமாட்டார்.

சில விளக்கக் குறிப்புகள் :

1) **மருள்தீர்ந்த மாசறு காட்சியவர் :** மனமயக்கம் நீங்கிய குற்றமற்ற அறிவை உடையவர்.

**மருள் தீர்ந்த** - மனமயக்கம் தீர்ந்த.

மருள் - மனமயக்கம். அனைத்து அறியாமைக்கும் மனத்தினது மயக்கமே முதல் காரணம் என்பது மெய்யறிவினார் கொள்கை. - ஒன்றை வேறாக நினைப்பதும், பொருள்கள் நிலையானவை என்று நினைப்பதும், பொருளாலேயே எல்லாவற்றையும் விளைவிக்க முடியும் என்று கருதுவதும் மனத்தின் மயக்கநிலை என்பது ஆசிரியர் கருத்து.

- ஏனெனில் மனம் ஆசையைப் பற்றி இயங்குகிறது. அவ்வாசை ஐம்புலன்களைப் பற்றி எழுகிறது. எனவே ஐம்புலன்களின் உணர்வைக் கட்டுப்படுத்தி, மனம் ஆசை கொள்ளாமால் செய்து, அதன்பின் பொருள்களின் மேல் மனம் கொண்டுள்ள மயக்கத்தை நீக்கிய

பின்னர்தான், அறிவு தன் அறியாமை இருளை நீக்குகிறது என்பது மெய்யறிவினார் கருத்து. என்னை?

**'அவா இல்லாக்கு இல்லாகும் துன்பம்'** - 368

**'இன்பம் இடையறாது ஈண்டும் அவாஎன்னும்**
**துன்பத்துள் துன்பம் கெடின்'** - 369

**'பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும்**
**. . . . . . . . . . . . . . . . . . . மருள்'** - 351

**'இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி**
**மாசறு காட்சி யவர்க்கு'** - 352

**'பொருளானாம் எல்லாம்என்று ஈயாது இவறும்**
**. . . . . . . . . . . . . . . . . . . மருள்'** - 1007

- என்பார் ஆகலின்.

- மனத்தின் மருள் தீர்ந்த பின்னர்தான் மாசறு காட்சி (அறிவு) தோன்றும் என்பர் நூலாசிரியர்.

(காட்சி - அறிவு என்பது குறள் 174-இல் விளக்கப் பெற்றது. விளக்கம் ஆண்டுக் காண்க.)

- மருள் தீர்ந்த பின்னரே மாசறுகாட்சி ஏற்படும் என்றார், என்க.

**'மருளறு சிறப்பின்'** - தொல் : 1230

**'தெருளநின் வரவு அறிதல்**
**மருளது தேர்ச்சி முனைவர்க்கும் அரிதே'** - பரி: 1 : 32-33

**'மன்னிய நோயொடு மருள் கொண்ட மனத்தவள்'** - கலி: 103: 57.

**'மருளும் உளப்பட வாழ்நர்க்கு'** - புறம் : 28 : 3

**'மருளறு புலவ'** -மணி : 9 : 33.

- தீர்ந்த - நீங்கிய

**'பொய்மையும் வாய்மை யிடத்து புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்'** - 292

**- மாசறு - குற்றமற்ற** - (352,649,956)

**- மாசு - குற்றம்.** - (34, 278, 601)

2) **பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் :** பொருட்பயன் நீங்கிய சொற்களை மறதியாகவும் சொல்ல மாட்டார்.

*பொருள் தீர்ந்த : பொருட்பயன் நீங்கிய சொற்களை.*

*- சொற்கள் அதிகாரத்தால் வருவிக்கப் பட்டது.*

*தீர்தல் - நீங்குதல்*

*பொச்சாந்தும் - மறதியாகவும், மறந்தும்.*

*பொச்சாப்பு - மறதி.*

*(54 - ஆம் அதிகாரம் காண்க)*

*பொச்சு ஆப்பு - பொச்சாப்பு.*

*பொள் - பொய் - பொய்ச்சு - பொச்சு.*

*பொள் - தொளை.*

*- உள்ளீடிருந்து இல்லாமற்போனது.*

*- வினையால், இருந்து இல்லாமற் போன மறதியைக் குறித்தது.*

*(எ-டு) காய்தல் - சூடு ஏறுதல்.*

*காய்வு - எரிவு, எரிச்சல், முனிவு. வெறுத்தல் வினையால் வேறுபொருள் குறித்து.*

*ஆப்பு - ஒரு சொல்லீறு.*

*(எ-டு) பொல்லாப்பு, அங்காப்பு, விடாய்ப்பு, மறியாப்பு, கொண்ணாப்பு.*

*மறியாப்பு, கொண்ணாப்பு இருசொற்களும் பழந்தமிழ்ச் சிற்றூர்ப்புற வழக்கு. கொங்கு நாட்டினது.*

*வழக்கு : குட்டி, வயிற்றில் மறியாப்பாக (குறுக்காக)க் கிடக்கிறது.*

*- திருவிழா வருகிறது. உங்களுக்கெல்லாம் கொண்ணாப்புத்தான். (கொண்டாட்டம்தான்.)*

**'கையாறு இடுக்கண் பொச்சாப்பு பொறாமை'** - **தொல் : 1206 : 6:**
**'வன்சொல் பொச்சாப்பு மடிமையொடு குடிமை'** - **தொல் : 1220 : 2**
**'பொச்சாப்பு இலாத புகழ்வேள்வி'** - **கார் : 7 : 3**
**'மன்னிய செல்வத்துப் பொச்சாப்பு நீத்தானும்'** - **திரி.கடு. 30: 2**
**'பொச்சாப்புக் கேடு'** - **சிறுபஞ்ச : 48 : 5**
**'கொடையளிக் கண் பொச்சாவார்'** - **ஆசாரக் : 66 : 2**
**'பொச்சாந்து ஒழுகுவார் பேதையார்'** - **நாலடி : 182**
**'பெறுதிக் கண் பொச்சாந்து உரைத்தல்'** - **திரிகடு : 91 : 1**
**'அறியாதார் பொச்சாந்து தம்மைப் புகழ்ந்துரைப்பார்'** - **பழமொழி:2[illegible]:2**

3) *மனமயக்கம் தீர்ந்த, மாசற்ற அறிவுடையார், பயன் இல்லாத எந்தச் சொல்லையோ பொருளையோ பிறரிடத்து மறந்தேயும் சொல்லார் என்றது, அவர்க்குச் சொல்லால் அதன் பொருளால் வரும் குற்றங்கள் தெரியுமாகலானும், மனமயக்கம் நீக்கியதால், அறிவுக்குற்றம் இல்லாதவராக இருப்பதாலும் மறதி வராது ஆகையினாலும், பொருளில்லாதவற்றைப் பேசார் என்பது இயல்பாயிற்று என்க.*

4) *இது, அரும் பயன் ஆயும் அறிவினார்க்குமேல், மனமயக்கமும், அறிவுக்குற்றமும் இல்லாதவரின் இயல்பு கூறி, அவர் மறந்தும் பயனில்லாதவற்றைக் கூறார் என்றதால், அதனை அடுத்து நின்றது, என்க.*

## உ00. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க சொல்லில் பயனிலாச் சொல். - 200

**பொருள்கோள் முறை:**

***சொல்லில் பயனுடைய சொல்லுக***
***சொல்லில் பயனில்லாச் சொல் சொல்லற்க.***

**பொழிப்புரை :** *சொல்லுவதில், பயனுடைய சொற்களையே தேர்ந்து சொல்லுக; சொற்களிலும் பொருள்களிலும் தனக்கும் பிறர்க்கும் பயனில்லாதவற்றைச் சொல்லுதலைத் தவிர்க்க.*

**சில விளக்கக் குறிப்புகள் :**

1) ***சொல்லில் பயனுடைய சொல்லுக:*** சொல்லுவதில் பயனுடைய சொற்களையே தேர்ந்து சொல்லுக.

*பயனுடைய சொல்லுக : என்ற மட்டில் பொருள் நிறைவு பெறுமாயினும், சொல்லில் என்பது மிகையாகக் குறித்தாரோ எனில், அஃதன்று. சொல்லுதல் கருத்தை வலியுறுத்துவான் வேண்டி, அதனை இரட்டித்தார் என்க. அது மிகையன்று.*

- தேர்ந்து என்பது சொல்லில் என்பதற்கு வந்த கூடுதல் பொருள்.

2) ***சொல்லில் பயனில்லாச் சொல் சொல்லற்க:*** சொற்களிலும் பொருள்களிலும் தனக்கும் பிறர்க்கும் பயனில்லாதவற்றைச் சொல்லுதலைத் தவிர்க்க.

- *இங்கும் சொல்லில் என்று மிகையாகக் கூறியதன்று. வலியுறுத்தமே.*

- *பயனில்லாச் சொல் சொல்லுதலைத் தவிர்க்க, விடுக்க.*

- சொல்லற்க - என்றது கட்டளை போலும் சொல்.

- சான்றோர்க்கு முகாமையாதலின் கட்டளையாகச் சொன்னார். என்னை?

  - **'சொல்லப் பயன்படுவோர் சான்றோர்' - 1078**

  என்றாராகலின்

3) **பயனில்லாத சொற்கள் - எடுத்துக்காட்டுகள் :**

(எ-டு) 1) காலையில் திடுமென விழித்து, படுக்கையை விட்டு எழுந்து, சோம்பல் முறித்துக் கை கால்களை உதறிக்கொண்டு, படுத்த பாயையும் தலையணையையும் சுருட்டிவைத்து, வீட்டின் மூலையில் கொண்டுபோய் கிடத்திவிட்டு, நேரே கிணற்றடிக்குப்போய் கை, கால், முகங்களைக் கழுவிக் கொண்டு, கழிப்பறைக்குப்போய்க் காலைக் கடன்களையெல்லாம் முடித்துக் கொண்டு, மீண்டும் கிணற்றடிக்குப் போய்க் குளிர்ந்த நீரைப் பத்துப்பதினைந்து வாளிகளைத் தலையில் ஊற்றிக் கொண்டு, நீர்ச்சீலையையும், கட்டியிருந்த வேட்டி, உடலொட்டி (பனியன்), கவட்டி(ஜட்டி, லங்கோடு)களைக் கசக்கிப் பிழிந்து கொடியில் காயவைத்துவிட்டு, தலைவாரிச் சீவி உடையுடுத்துக் கொண்டு, என் மனைவி தட்டில் போட்ட ஐந்தாறு பூப்போன்ற இட்டலிகளையும் சட்டுணியையும், சுடச்சுடப் புட்டுப்புட்டு வாயிலே போட்டு விழுங்கிவிட்டு, நல்ல கொழகொழ வெனத் திண்மமாய்க் கொடுத்த குளம்பியையும் சுடச்சுட ஊதி ஊதி வயிற்றிலே ஊற்றிக்கொண்டு, குடையை ஒரு கையிலேயும் பையை இன்னொரு கையிலேயும் தூக்கிக்கொண்டு, பரபரப்பாக, நடைக்குவந்து காலிலே இரண்டு செருப்புகளையும் மாட்டிக்கொண்டு, எங்கள் வீட்டிற்கும் நகரவுந்து நிறுத்தத்திற்கும் இடையிலே கிடக்கும் ஐந்தாறு தெருக்களில் ஓரமாகப் பரக்கப் பரக்க ஓடோடி நடந்து வந்து, நகரவுந்து நிறுத்தத்திலே வண்டிக்குக் காத்திருந்து - உடனே வருகிறதா கலியன் (சனியன்) - ஒரு மணிநேரம் கழித்து வந்த 9 மணி உந்தைப் பிடித்து, மல்லுக்கட்டி ஏறிக்கூரைக் கம்பியைப் பிடித்துத் தொங்கிக் கொண்டு, - வேகமாகவா ஓட்டுகிறான் - நின்று, நின்று, அசக்கி, அசக்கி மெதுவாய் எருமைக் கணக்காய் ஓட்டிவந்து, எங்கள் அலுவலகத்துக்கு இரண்டு தெரு தள்ளினாற்போல நிறுத்தம் - அதிலே கொண்டு வந்து சாய்க்க, முண்டியடித்து எல்லாரையும் தள்ளிக் கொண்டு, முந்தி வந்தது 'படக்'கெனக் குதித்து இறங்கி, அரக்கப் பரக்க, கடைத்தெருவிலே வந்த திருவிழாக் கூட்டம்போல விடுவிடென்று போகிறவர்களையும் வருகிறவர்களையும் ஊடுருவிக் கொண்டு, ஓடிவந்து, அலுவலகத்திலே, நாற்காலியிலே வெயர்த்து விறுவிறுத்துப் பொத்தென்று விழுவதற்குள், அப்பாடா, என்று போய்விட்டது. அங்கிருந்த கடிகாரத்தைப் பார்த்தால்

மணி பத்துப்பத்து ஆகியது, ஐயா அதற்குள் போதும் போது மென்று ஆகிவிட்டதே, நான் இதற்குமேல் என்ன செய்வேன்? எப்படி வருவேன்?

- என்று அலுவலர் ஒருவர், அதிகாரியிடம், 'ஏன் ஐயா பத்து நிமையம், காலத்தாழ்த்தம் ஆகிவிட்டது?' என்று கேட்டதற்குத் தந்த விடையிது.

- இதனைக் கீழ்வருமாறு பயனுடைய சொற்களால் சொல்வது, சிறந்தது என்க.

"ஐயா, காலை ஒன்பது மணி நகரவுந்தைப் பிடித்துத்தான் வருகிறேன். வண்டி மெதுவாய் வந்தது; கூட்டமும் மிகுதி. அலுவலகம் வருவதற்குள் பத்து நிமையம் கடந்து விட்டது. என்ன செய்வது ஐயா?"

- முன் பத்தியில் உள்ளன பயனில்லாத சொற்கள். பின் பத்தியில் உள்ளன பயனுடைய சொற்கள்.

(எ-டு)

(2) பொய்யும் புளுகும்): 'எப்படி ஐயா உங்கள் கடனைக் கொடுப்பது? நானும் நாணயாகத் திருப்பிக் கொடுக்கலா மென்றுதான் வாங்கினேன்.'

சென்ற மாதமோ, செலவான செலவு, பிள்ளைகளைப் பள்ளியில் சேர்க்க, இழவு - இடமா கிடைக்குது - எத்தனைப் பேருக்கு வெள்ளையப்பனைத் தள்ளவேண்டியிருக்கிறது தெரியுங்களா?

பெண்டாட்டி தங்கைக்குத் திருமணம் வேறு. எல்லாரும் போக வேண்டியதாகப் போய்விட்டது.

என்னமோ, கருமம், போன இடத்தில் அவளுக்கு வேறு கருக்கலைந்து போய் விட்டது. அதற்குவேறு பாழாய்ப்போன மருத்துவர், மருந்துச் செலவுகள்.

தலையெழுத்து யாரை விட்டது? ஊருக்குப் போய்வந்து பார்த்தா, வீட்டுப் பூட்டை உடைத்து, நாங்களில்லாத வேளையில் எவனோ, ஆயிரம் உருவாப் பொருள்களை அள்ளிக் கொண்டு போயிருக்கிறான்.

அதற்குவேறு, காவல் கீவல் என்று அலைந்தேன். அவர்களுக்கும் 'இலஞ்சம் கிஞ்சம்' என்று அழுதேன். மானங்கெட்ட அதிகாரிகள் கொடுத்தால்தான் செயல்படுகிறான்கள், என்ன செய்வது உங்கள் கடனைச் சாவதற்குள் கட்டாயம் கொடுத்து விட்டுத்தான் கண்களை முடுவேன். அப்படி நான் கொடுக்கவில்லை என்றால், என் மகன் இருக்கிறான். இதற்குப் போய் முகத்தை முறிக்கிறாற் போல நறுக்கென்று நாலு கேட்டுவிட்டீங்களே! பொறுத்துக் கொள்ளுங்கள், ஐயா!'.

- இதனைப் பயனுடைய சொற்களால், கீழ்வருமாறு கூறலாம் என்க.

'ஐயா, பொறுத்துக் கொள்ளுங்கள்' சென்ற மாதம் செலவு அதிகம். திருமணம், மருத்துவச் செலவுகள் என்று பலவற்றை ஈடுகட்ட வேண்டியதாகப் போய்விட்டது. பிள்ளைகளுக்கு வேறு பள்ளிக்கூடச் செலவு. திருட்டு வேறு நடந்துவிட்டது. அடுத்த மாதம் கட்டாயம் உங்கள் கடனைத் திருப்பிவிடுவேன்!

(எ-டு)

3) (கொச்சையும் இழிவும்) : 'அண்ணே, இங்க வாங்கண்ணே'. உங்ககிட்டே ஒருசேதி சொல்லனும். அன்னிக்கு, அதான் போன மாசம் தஞ்சாவூரு போயிருந்தேன்.

படு எழவாப் போச்சு, போன வேலையெ முடிச்சுக்கிட்டு வண்டிக்கு வந்தேன். சாயந்தரம் ஆறு மணிக்கு மேலேதான் மெட்றாசுக்கு வண்டிண்ணுட்டான். என்ன பன்றது கண்றாவி.

சரின்னு, நேரம் போகனுமே, பக்கத்திலே இருந்த 'சினிமா' கொட்டாயிலே பகலாட்டம் பூந்துட்டேன். கூட்டம் இளவட்டங்களா நெறஞ்சு கெடந்தது. என்னமோ மலையாளப் படமா? அதெ ஏங் கேங்கறீங்க பச்சைன்னா அப்பிடிப் பச்செ எப்பிடித்தான் எடுக்கிறாங்களோ? எப்படித்தாங் காட்றாங்களோ? போங்க.

வூட்லே பொண்டாட்டிக்கிட்ட படுத்துகிறதுலே இருந்து, வெடிய வெடிய, நடக்கிறதெல்லாம் அப்பிடி வெளிச்சம் போட்டுக் காட்டுனானுங்க, அண்ணே!

அதெ யேங் கேக்கிறீங்க! பாத்துட்டு வந்தா ரெண்டு நாளு அதே எழவு நெனப்பு போங்க.

- இதனைப் பயனுடைய சொற்களால் கீழ்வருமாறு கூறலாம் என்க.

'அண்ணே! போன மாதம் தஞ்சாவூர் போய் வந்தேன். உடனே திரும்ப முடியவில்லை. வண்டிவேறு மாலையில்தான் இருந்தது. அப்பொழுதுதான் ஒரு படம் பார்த்துவிட்டு வந்தேன்! மற்றபடி நமக்குப் படம் பார்க்க நேரம் எங்கு இருக்கிறது?'

4) இது, சொற்பொருட்பின் வருநிலையணி கொண்ட செய்யுள்.

5) இஃது, இவ்வதிகார முடிவாகப் பயனில சொல்லாமையும், பயனுடைய சொல்லுவதும் வலியுத்திக் கூறப்பெற்றதால், முன்னதற்பின்னும் இறுதியிலும் வைக்கப்பெற்றது.

# அ-2 இல்லறவியல்

## அ-2-17 தீவினையச்சம் -21

### *அதிகார முன்னுரை*

*'**தீவினையச்சம்**' என்பது, தீ வினை அச்சம் என்னும் முச்சொற்களின் கூட்டுச் சொல்.*

*தீப்போலும் வினை தீவினையாயிற்று.*

*'தீ' - காய்வு, எரிவு, அழிவுக்குக் காரணமான பொருள்.*

*எனவே, காய்தல் (காய்ச்சுதல்), எரித்தல், அழித்தல் எனும் மூன்று செயற்கும் காரணமான தீயை, அவைபோலும் செயல்களுக்கு முன்வைத்துத் தீயவை என்று குறித்தனர்.*

*'தீ' - பொருளை அழிக்கும்.*

*'தீயவை' - உயிர்களை அழிக்கும்*

*இதனடிப்படையில்,*

*உயிரழிவு செய்யும் அனைத்து எண்ணங்களும், செயல்களும் தீயவை ஆயின.*

*இதற்கு மாறாக,*

*உயிர்மலர்ச்சி செய்யும் அனைத்து எண்ணங்களும், செயல்களும் நல்வினைகள் ஆயின.*

எனவே, தீவினையச்சம் என்பது

- தீயவினைக்கு அஞ்சுதல்,
- தீயவற்றுக்கு அஞ்சுதல்,
- தீயவை செய்ய அஞ்சுதல்,
- தீய செயற்கு அச்சம் கொள்ளுதல்

எனப் பொருள்கள் தருவதாயிற்று.

அச்சம் - அஞ்சுதல் - அஞ்சி அடங்குதல்.

அம் + சு = அஞ்சு. 'சு' ஒரு சொல்லீறு.

பிஞ்சு, குஞ்சு, பஞ்சு, மஞ்சு என்றார்ப் போல.

அம் - அம - அமர் - அமர்வு - அமர்தல் - அடங்குதல்.

அம் - அம - அமை - அமைவு - அமைதல் - அடங்குதல்

அமை - அமைதி.

அம் - அம - அமு - அமுங்கு - அமுங்குதல் - அடங்குதல் - அமுக்குதல் - அடக்குதல்.

அமர்வு - அமைவு - அமுங்கு என்னும் செயல் முடிவுபோல் அஞ்சு, அஞ்சுதல் என்னும் வினைகளும், அடங்கி ஒடுங்குதல் என்னும் பொருள்களைக் குறித்தன.

எனவே, 'தீவினையச்சம்' என்பது, பிறரின் உயிரழிவுக்குக் காரணமான தீயவினைகள் செய்ய அஞ்சி அடங்குதல் - அச்சம் கொள்ளுதல் - என்னும் பொருளதாயிற்று.

'தீயவை' என்பது, 'தீச்சொல் (128), தீயொழுக்கம் (138) தீவினை (201, 210), தீயவை (202, 208), தீப்பால (206), தீப்பிணி (227) - முதலிய அனைத்தையும் அவ்வவ்விடத்துக் குறிக்கும்.

இது தொடர்பான இலக்கியப் பயன்படுத்தங்களும், கருத்துகளும் கீழே தரப்பெறுகின்றன.

**'தீவினை அகற்று'** - **ஆத்திசூடி: 58**

**'தீவினையும் அஞ்சலராய்' - தீவினை** - **பழமொழி 27 : 1**

**அஞ்சிலென் ? அஞ்சா விடிலென் ? குருட்டுக்கண்**
**துஞ்சிலென் ? துஞ்சாக்கால் என் ?'** - **பழமொழி: 238:3-4**

**'தீயாரைக் காண்பதுவும் தீதே; திருவற்ற**
**தீயார்சொல் கேட்பதுவும் தீயதே - தீயார்**
**குணங்கள் உரைப்பதுவும் தீதே; அவரோ(டு)**
**இணங்கி இருப்பதுவும் தீது.'** - **வாக்குண்டாம் : 9**

'தீய செயல்செய்வார் ஆக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல - தீயன
நல்ல ஆ காவாம் ; நாவின் புறநக்கிக்
கொல்லும் கவயஆமாப் போல்' - நீதிநெறி: 74

'கொலையஞ்சார் பொய்நாணார் மானமும் ஒவ்வார்
களவுஒன்றோ ஏனையுவும் செய்வார் - பழியோடு
பாவமிஃ தென்னார் பிறிது மற் றென்செய்வார்
காமம் கதுவப்பட்டார்' - நீதிநெறி: 78

'எல்லா விடத்தும் கொலைதீது ; மக்களைக்
கல்லா வளரவிடல் தீது - நல்லாள்;
நலந்தீது நாணற்று நிற்பின்; குலந்தீது
கொள்கை அழிந்தக் கடை' - நான்மணி : 95

'தீதில் வினையினான் நந்துவர் மக்களும்' -நான்மணி 47:3

'அகம் பொதிந்த தீமை மனம் உரைக்கும்' - நான்மணி 45 : 3

'மனமாண்(பு) இலாதவரை அஞ்சி அகறல்
எனைமாண்பும் தானினிது நன்கு' - இனி. நா.10:3-4

'பாவமும் அஞ்சாராய்ப் பற்றும் தொழில்மொழிச்
சூதரைச் சோர்தல் இனிது' - இனி.நா.23:3-4

'இன்னா பெரியார்க்குத் தீய செயல்' - இன்னா 27:4

'தீமை உடையார் அயலிருத்தல் நன்கு இன்னா' - இன்னா. 24:2

'பிறர்க்கின்னா செய்தலின் பேதைமை இல்லை' - அறநெறி 96 : 1

'பழியஞ்சான் வாழும் பசுவும்' - (ஆன்மா) - திரிகடு : 79 : 1

'கொல்வது தான்அஞ்சான்' - திரிகடு 87 : 1

'தீயன செய்யான் சிறியார் இனஞ்சேரான்' - ஏலாதி:14:2

'தீமை உடையார்
'வருந்தினார் என்றே வயப்படுவது உண்டோ ?' - பழமொழி:9:1-2

'அஞ்சாமை அஞ்சுக ஒன்றின் தனக்கொத்த
எஞ்சாமை எஞ்சும் அளவெல்லாம்' - பழமொழி 25: 1-2

'தீயன ஆவதே போன்று கெடும்' - பழமொழி 173 : 3

'தாம் தீய செய்த மலைமறைத்த(து) என்றெண்ணித்
தாம்தீயார் தம்தீமை தேற்றாரால் - ஆம்பல்

மணஇல் கமழும் மணிதிரைச் சேர்ப்ப
கணையிலும் கூரியவாம் கண்' - பழமொழி 174
'தீமையால் ஊர்மிகின் இல்லை கரியே' - பழமொழி :190: 2
'தீப்பால் வினையினைத் தீரவும் அஞ்சாராய்க்
காப்பாரே போன்றுரைத்த பொய்குறளை' - பழமொழி:193: 1-2
'உழந்ததூஉம் பேணார் ஒறுத்தமை கண்டும்
விழைந்தார்போல் தீயவை மீளவும் செய்தல்
. . . . . . . . . . . . . . . . . . .
முழம்குறைப்பச் சாண்நீளு மாறு' - பழமொழி:211:1-34
'தீயன அல்ல செயினும் திறல்வேந்தன்
காய்வன செய்தொழுகார் கற்றறிந்தார்' - பழமொழி:234: 1-2
'நனிஅஞ்சத் தக்கவை வந்தக்கால் தங்கண்
துனிஅஞ்சார் செய்வது உணர்வார்' - பழமொழி:265: 1-2
'அறிவ(து) அறிந்தடங்கி அஞ்சுவ தஞ்சி
உறுவ(து) உலகுவப்பச் செய்து - பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்பினார் எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்தல் அரிது' - நாலடி : 74
'விரவாருள் நாணுப்பட அஞ்சி' - நாலடி :88:3
'அம்பும் அழலும் அவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறஞ்சுடும் - வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலால் காமம்
அவற்றினும் அஞ்சப் படும்' - நாலடி : 89
'எட்டுணையும் வேண்டார்மன் தீய' - நாலடி : 88
'பெரியார்கண் தீமை
கருநரைமேல் சூடேபோல் தோன்றும்' - நாலடி 227: 3-4
'தீமை எடுத்துரைக்கும் திண்ணறிவு இல்லாதார்
தாமும் அவரின் கடை' - நாலடி: 227:3-4
'எழுநூறு நன்றிசெய்து ஒன்றுதீ தாயின்
எழுநூறும் தீதாய் விடும்' - நாலடி : 357:3-4
'தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந்து உணர்க' - நற் :116 :1-2

| | |
|---|---|
| **'அஞ்சுவழி அஞ்சாது அசைவழி அசைஇ'** | **- நற் : 76 : 4** |
| **'கொலை அஞ்சா வினைவலரால்'** | **- கலி : 10 : 6** |
| **'அஞ்சுவது அஞ்சா அறனிலி அல்லன்'** | **- கலி : 42 : 26** |
| **'பொய்சூள் அஞ்சவும்'** | **- கலி : 75 : 27** |
| **'தவறு அஞ்சி'** | **- கலி : 88 : 19** |
| **'தன்சிதைவு அறிதல் அஞ்சி'** | **- அகம் : 7 : 9** |
| **'பலர் அறிவுறுதல் அஞ்சி'** | **- அகம் : 142 : 15** |
| **'பிறர் அஞ்சுவது அஞ்சி'** | **- புறம் : 182 : 4** |

இனி ஆசிரியர் தீயவற்றுக்கு அஞ்சுதலை வேறு சில இடங்களிலும் குறித்திருப்பதையும் ஓர்க.

**'பழியஞ்சி'** **- 44**

**'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது**
**அஞ்சல் அறிவார் தொழில்'** **- 428**

**'கொலையஞ்சிக் கொல்லாமை சூழ்வான்'** **- 325**

இனி தீயவை செய்வதற்கு அஞ்சுதல் வேண்டும்;

நல்லவை செய்தற்குத் துணிதல் வேண்டும்

- என்னும் ஒரு குறிப்பும் ஆசிரியரால் தரப்பெறுதல் சிந்திக்கத் தக்கது.

**'துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி**
**இன்பம் பயக்கும் வினை'** **- 669**

**'தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்**
**வாய்மை வழியுரைப்பான் பண்பு'** **- 688**

இனி இந் நூலாசிரியப் பெருமானாகிய மெய்யறிவுப் பேராசான், 'இல்லறவியலில் தாம் வகுத்தெடுத்துக் கொண்ட அறவியல் கூறுகள் ஒரு முறைப்படி அமைக்கப்பெற்ற சிறப்பு வாய்ந்தன என்பதை இவ்விடத்து நினைவு கூர்தல் சாலவும் பொருந்தும்' என்க.

- அவர் இல்லறத்தின் அகஅகவியல் (Inner - internal) கூறுகளாக, முதல்நிலையில், இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணை நலம், மக்கட்பேறு - ஆகிய மூன்று அறவியல் கூறுகளின் உண்மைகளைப் புலப்படுத்தினார். இவை கணவற்கும் மனைவிக்கும் மட்டுமே தெரியவேண்டிய உள்ளடக்கம் பற்றியவை.

- அடுத்து அவ்வில்லறத்தின் அகவியல்(Internal) கூறுகளாக, இரண்டாம் நிலையில், அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல்,

செய்ந்நன்றியறிதல் - ஆகிய நான்கு அறவியல் கூறுகளின் உண்மைகளைப் புலப்படுத்தினர்.

இவை, கணவன், மனைவி, பிற நெருங்கிய இல்லறத் தொடர்பாளர்களுக்கும் உரிய குடும்பவியல் பற்றியவை.

- அதனையடுத்து, அவ்வில்லறத்தின் அகப்புறவியல், கூறுகளாக, மூன்றாம் நிலையில், நடுவுநிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையுடைமை - ஆகிய ஐந்து அறவியல் கூறுகளின் உண்மைகளைப் புலப்படுத்தினார்.

இவை, ஒரு குடும்பத்திற்கும், பிற குடும்பங்களுக்குமான தொடர்புணர்வுகளையும், குமுகாயத் தொடக்கத்தின் பொதுமை அறவுணர்வுகளையும் கொண்டவை.

- இவற்றையடுத்து, அவ்வில்லறத்தின் புறவியல்(External) கூறுகளாக நான்காம் நிலையில், அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினையச்சம் ஆகிய ஐந்து அகவியல் கூறுகளில், முதல் நான்கினையும் புலப்படுத்தி விட்டு, ஐந்தாவதாகிய தீவினையச்சத்தை இவ்வதிகாரத்தின்கண் புலப்படுத்துவார்.

இவை, ஒரு குடும்பத்திற்கும் குமுகாயத்திற்கும் உள்ள பொதுமை அறவுணர்வுகளை மேம்படுத்திக் கூறுபவை.

- இனி இதனையடுத்து, அவ்வில்லறத்தின், புறப்புறவியல்(Exterior - External) கூறுகளாக, ஐந்தாம் நிலையில், ஒப்புரவறிதல், ஈகை, புகழ் ஆகிய மூன்று அறவியல் உண்மைகளையும் உள்ளடக்கியவை.

இவை, இல்லறவியலின் குமுகாயப் பொதுமைப் பண்புகளையும் பயன்களையும் உள்ளடக்கியவை. அவை, இதனையடுத்து மேலதிகாரங்களில் கூறப்பெறும், என்க.

**உ0க. தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்**
**தீவினை என்னும் செருக்கு. - 201**

**பொருள்கோள் முறை:**

**தீவினை என்னும் செருக்கு, தீவினையார்**
**அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்.**

**பொழிப்புரை:** *(மன)* ஆணவத்தாலும், *(உடல்)* திமிராலும் பிறர்க்குத் தீமை செய்வதற்கு, அதிலேயே ஈடுபட்டுப் பழகியவர் அஞ்சமாட்டார். மேன்மையுள்ளம் கொண்டவரோ *(பிறர்க்குத் தீமை செய்ய)* அஞ்சுவர்.

**சில விளக்கக் குறிப்புகள் :**

1) **தீவினை என்னும் செருக்கு :** (மன) ஆணவத்தாலும், (உடல்) திமிராலும் பிறர்க்குத் தீமை செய்வதற்கு.

தீவினை செய்ய எண்ணுவதற்குக் காரணமாக விருப்பது செருக்கு.

- அது மனச்செருக்கும் உடல் செருக்கும்.
- மனச் செருக்கு ஆணவம்.
- உடல் செருக்கு திமிர்.
- செருக்குக்கு என்பது உருபு தொக்கிச் செருக்கு என நின்றது.
- மனச் செருக்கே பிறர்க்குத் தீமை செய்யத் தூண்டுவது.
- உடல் செருக்கு அதற்குத் துணை நிற்பது.

2) **தீவினையார் அஞ்சார் :** தீவினை செய்வதிலேயே ஈடுபட்டுப் பழகியவர் அஞ்சமாட்டார்.

- தீவினையார் என்பதற்கு, மனக்குடவர் 'தீத்தொழில்' செய்வார் என்பார்.
- பரிதியாரும், காலிங்கரும், பரிமேலழகரும் 'முற்பிறப்பில் தீவினையுடையார்' என்று மதவியல் சார்ந்து பொருள் தந்தது. மூடநம்பிக்கையாம்.
- இப்பிறப்பில் தீவினையுடையானுக்கு முற்பிறப்புத் தீவினை காரணமானால், அதற்குக் காரணம் யாது? அதற்கும் முன்பிறவியோ? - எனில் அதன் தொடக்கந்தான் எது? - எனற்கு ஏற்ற விடையிரா தென்க.
- வேதமதக் கொள்கையினை வலியுறுத்தவே 'வினை' என்னும் செயற்பொருள் சொல் வருமிடங்களிலெல்லாம், 'முன்வினையே' என்று பரிமேலழகர் போலும் ஆரியமதவியலார் வலியப் பொருள் கூறினர், என்க.
- எனவே, வினைப்பழக்கமே தீவினைக்குக் காரணம் என்க.

3) **விழுமியார் அஞ்சுவார் :** மேன்மையுள்ளம் கொண்டவரோ (பிறர்க்குத் தீமை செய்ய) அஞ்சுவர்.

- விழுமியோர் - சிறந்த, பண்பட்ட, மேன்மையான, சீரிய, நல்ல உள்ளத்தவர்.
- தீவினைக்கு அஞ்சுதல் அதன் விளைவு கருதி ஏற்படும் முற்காப்புணர்வாம், என்க.

4) இதன்வழி, தீவினையைத் தொடர்ந்து செய்வதற்குக் காரணம், அதிற் பழக்கப்பட்டு, உள்ளமும் உடலும் செருக்குப் பெறுவதே என்றும், தீவினை செய்ய அஞ்சுவதற்குக் காரணம், மேன்மையான உள்ளம் பெற்றிருப்பதே ஆகும் என இருவகை அடிப்படை உணர்வுகளை உணர்த்தினார் என்க.

**உ0உ. தீயவை தீய பயத்தலால் தீயவை**
**தீயினும் அஞ்சப் படும். - 202**

**பொருள்கோள் முறை: இயல்பு.**

**பொழிப்புரை :** தீய செயல்கள் (செய்தவர்க்கும் செய்யப்பட்டவர்க்கும்) தீயவற்றையே விளைவித்தலால். தீய எண்ணங்கள் தீயைவிட அஞ்சப்படுதல் வேண்டும்.

**சில விளக்கக் குறிப்புகள் :**

1) **தீயவை** - தீய செயல்கள்.

- இவ்விடத்துச் செயல்களையும், பிறிதிடத்து எண்ணங்களையும் குறித்தது.
- இரண்டும் ஒன்றையே குறித்தலென்பது மிகையாம்.
- **தீய பயத்தலால் :** தீயவற்றையே விளைவித்தலால்.
- பயத்தல் என்னும் சொல்லால் பயக்கப் பெற்றவர். வருவிக்கப் பெற்றார்.
- தீயவே என்னும் ஏகாரம் செய்யுள் நோக்கித் தொக்கது.
- இவ் வேகாரத்தைப் பாவாணர், முதல் சொல்லின் ஐகாரத்துக்குப் பகரமாக ஏற்றிப் பாடம் கொண்டார்.

2) **தீயவை தீயினும் அஞ்சப்படும் :** தீய எண்ணங்கள் தீயை விட அஞ்சப்படுதல் வேண்டும்.

தீயவை - இங்கு எண்ணங்களைக் குறித்தது.

- பரிமேலழகரும் பிறரும் இரண்டிற்கும் தீயசெயல்கள் என்று ஒரே பொருளைக் கொண்டனர்.
- தீயவை, தீயை விடக் கூடுதலான தீமைகளைத் தருதலால், அவை தீயைவிட அஞ்சப்படுதல் வேண்டும் என்றார் என்க. என்னை?

1) தீ, நெருங்கியவர்க்கே தீங்கு செய்யும் - தீமை நெருங்காதவர்ககும் எட்டச் சென்று தீங்கு செய்யும்.

2) தீயினின்று ஒருவன் தப்பிப் பிழைக்கலாம்.

- தீமையினின்று தப்புதலே இயலாது.

3) தீ, காலம், இடம், பொருள் எனும் எல்லைகளுக்குட்பட்டே தீமைசெய்யும்.

- தீமை, அவற்றுக்கு அப்பாலும் சென்று தீமை செய்யும்.

4) தீ, பற்றிய பொருளழிவுக்குப் பின் தானே அழிந்துவிடும்.

- தீமை ஓரழிவுக்குப் பின் வேறார் அழிவு செய்யவும் மூண்டு எரியும்.

5) தீ, ஒன்றில் தானே பற்றி எரியாது.

- தீமை தானே பற்றி எரியும்.

6) தீயை அடக்கி ஆளலாம்.

- தீமையை அடக்கி ஆளமுடியாது. அதுதான் பிறரை அடக்கி ஆட்சி செய்யும்.

7) தீயினால் உலக நன்மைகள் பலவாம்.

- தீமையினால் கேடுகளே அன்றி நன்மைகள் இலவாம்.

8) தீ, பற்றியதை மட்டுமே அழிக்கும்.

- தீமை பற்றியவனை மட்டுமன்றி, அவன் குடும்பத்தையும் சுற்றத்தையுங்கூடப் பற்றி அழிக்கும்.

- எனவே, தீயை விடத் தீமைக்கு அஞ்சுதல் வேண்டும் என்றார்.

3) தீயவை எனப்படுபவை, தீயினும் அழிவு செய்தலால், அதனினும் கொடியது என்றார். அது தீவினை என்னும் செருக்குக்கு விளக்கமாயமைதலின், அதன் பின்னர் இதை வைத்தார்.

**உ0ங. அறிவினுள் எல்லாம் தலையென்ப தீய**
**செறுவார்க்கும் செய்யா விடல். - 203**

**பொருள்கோள் முறை:**

**செறுவார்க்கும் தீய செய்யா விடல்**

**அறிவினுள் எல்லாம் தலை என்ப.**

**பொழிப்புரை:** *தம்மைப் பகைப்பவர்க்கும் தீயவற்றைச் செய்யாமல் விடுவது, எல்லாவகை அறிவினுள்ளும் தலையாய அறிவு என்று கூறுவர், அனைத்தும் அறிந்தோர்.*

**சில விளக்கக் குறிப்புகள்:**

*1)* ***செறுவார்க்கும் தீய செய்யா விடல்:***

*தம்மைப் பகைப்பவர்க்கும் தீயவற்றைச் செய்யாமல் விடுவது.*

*- செறுவார் - பகைவர்*

*செய்யா - செய்யாது. -ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.*

*விடல் - விடுவது, விடுதல்*

*2)* **அறிவினுள் எல்லாம் தலை என்ப** *: எல்லாவகை அறிவினுள்ளும் தலையாய அறிவு என்று கூறுவர், அனைத்தும் அறிந்தோர்.*

*- அறிவினுள் எல்லாம் : ஒருவன் தன் வாழ்வியலுக்கு அறிந்திருக்க வேண்டிய எல்லாவகை அறிவினுள்ளும்.*

*- எல்லாவகை அறிவையும் அறிந்து, அவற்றுள்ளும் தலையாயதை அறிந்திருத்தலால் அவர் அனைத்தையும் அறிந்தவர் எனலாயிற்று.*

*- எல்லாவகை அறிவினுள்ளும், 'பகைவர்க்கும் தீயது செய்யாது விடலால் வரும் நன்மையும் அறிந்தவர்' ஆயினார். என்னை?*

**'திறனல்லல தற்பிறர் செய்யினும் நோநொந்து**
**அறனல்ல செய்யாமை நன்று'** - *157*
**'செற்றார்க்கும் இன்னா செய்யாமை'** - *313*
**'நன்றின்பால் உய்ப்பது அறிவு'** - *422*
**'அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்'** - *428*

*- என்றார், ஆகலான்.*

**'கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம்வாயால்**
**பேர்த்துநாய் கௌவினார் ஈங்கில்லை - நீர்த்தன்றிக்**
**கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவே**
**மேல்மக்கள் தம்வாயால் மீட்டு.'** ***- நாலடி:70***

*- இதிலுள்ள ஈற்றிரண்டடிகளைக்*

**'கீழ்மக்கள் கீழாய செய்தக்கால் செய்பவோ**
**மேல்மக்கள் தம்மறிவால் மீட்டு'**

*- என்று இக் கருத்துக்குத் தக மாற்றியுரைப்பினும் மிகப் பொருந்தும் என்க.*

- சிறந்ததைத் 'தலை' என்று கூறுதல் நூலாசிரியர் வழக்கு.

| | |
|---|---|
| 'ஐம்புலத்தா(று) ஓம்பல்தலை' | - 43 |
| 'முயல்வாருள் எல்லாம் தலை' | - 47 |
| 'நிறைகாக்கும் காப்பே தலை' | - 57 |
| 'இகழ்வார்ப் பொறுத்தல் தலை' | - 151 |
| 'தானஞ்செய் வாரின் தலை' | - 295 |
| 'மாணாசெய் யாமை தலை' | - 317 |
| 'தொகுத்தவற்றுள் எல்லாம் தலை' | - 322 |
| 'கொல்லாமை சூழ்வான் தலை' | - 325 |
| 'செல்வத்துள் எல்லாம் தலை' | - 411 |
| 'வன்மையுள் எல்லாம் தலை' | - 444 |
| 'பொறுத்தாற்றும் பண்பே தலை' | - 579 |
| 'கழிநல் குரவே தலை' | - 657 |
| 'எண்ணி உரைப்பான் தலை' | - 687 |
| 'நாடென்ப நாட்டின் தலை' | - 736 |
| 'வெறுக்கையுள் எல்லாம் தலை' | - 761 |
| 'தமரின் தனிமை தலை' | - 814 |
| 'இன்னா செய்யாமை தலை' | - 852 |
| 'போற்றலுள் எல்லாம் தலை' | - 891 |
| 'உழந்தும் உழவே தலை' | - 1031 |

3) அறிவுள்ளவர்கள் தம்மைப் பகைப்பவர்களுக்கும் கூட தீயவற்றைச் செய்யமாட்டார்கள் என்றார்.

## உ0ச. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
## அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு - 204

**பொருள்கோள் முறை:**

**மறந்தும் பிறன்கேடு சூழற்க. சூழின்**
**சூழ்ந்தவன் கேடு அறம் சூழும்.**

**பொழிப்புரை :** மறந்தும்கூட ஒருவன் பிறனுக்குக் கேடுகள் செய்ய எண்ணிப் பார்க்க வேண்டாம். அவ்வாறு எண்ணினால், எண்ணுகிறவனுக்குத்

தண்டனையாக என்ன கேடுகள் செய்யலாம் என்பது பற்றி அறம் எண்ணிப் பார்க்கும்.

**சில விளக்கக் குறிப்புகள் :**

1) இஃது ஓர் 'உருவக'ச் செய்யுள் (Metaphor).

இதில் முன்னைய உருவகங்களைப் போல, அறம் ஓர் உருவமாகவும், தெய்வமாகவும் உருவகிக்கப் பெற்றுள்ளது.

- இது போலும் உருவகங்களை பல நல்லுணர்வுகளுக்கும், வல்லுணர்வுகளுக்கும் ஆசிரியர் கையாண்டுள்ளது பற்றி முன்பே (77, 84, 130, 167, 168, 179) ஆகிய குறட்பா விளக்கங்களுள் கூறப் பெற்றுள்ளது.

'அறத்'தை ஒரு தெய்வமாக உருவகித்துள்ளமை :

**'அறம் காயும்'** - (77)
**'அறம் பார்க்கும்'** - (130)
**'அறம் சூழும்'** - (204)

'செல்வ'த்தை ஒரு பெண் தெய்வமாக உருவகித்துள்ளமை :

**'செய்யாள் உறையும்'** - (84)
**'செய்யவள் தவ்வையைக் காட்டி விடும்'** - (167)
**'சேரும் திரு'** - (179)
**'நீங்கும் திரு'** - (519)
**'தாமரையினாள்'** - (617)
**'திரு நீக்கப்பட்டார்'** - (920)

'சோம்பலை' 'வறுமை'யை - ஒரு தீத் தெய்வமாக உருவகித்துள்ளமை.

**'தவ்வையைக் காட்டிவிடும்'** - (167)
**'மடியுளாள் மாமுகடி'** - (617)

**'நில'த்தை ஒரு பெண் தெய்வ்மாக உருவகித்துள்ளமை:**

**'நிலம்' என்னும் நல்லாள்'.** - (1040)

**'நாண'த்தை ஒரு பெண் தெய்வமாக உருவகித்துள்ளமை.**

**'நாண்' என்னும் நல்லாள்.'** - (924)

**'சாவை' ஒரு கொடுந்தெய்வமாக உருவகித்துள்ளமை:**

**'கூற்றம் குதித்தலும் கைகூடும்'** - (269)
**'உயிருண்ணும் கூற்று'** - (236)

**'கூற்றுடன்று மேல் வரினும்'** - *(765)*

**'கூற்றத்தைக் கையால் விளித்தற்றால்'** - *(894)*

**'பண்டறியேன் கூற்றுஎன்பதனை'** - *(1083)*

**'கூற்றமோ, கண்ணோ'** - *(1085)*

*'காமத்'தை ஒரு தெய்வமாக உருவகித்துள்ளமை:*

**'காணான் கொல் காமன்'** - *(1197)*

*'அச்சப்படுதலை'ப் பேயாக உருவகித்துள்ளமை:*

**'பேய் கண் டன்னது உடைத்து'** - *(565)*

*'வெறுப்புணர்வை' ஒருவகைப் பேய் (அலகை)ஆக உருவகித்துள்ளமை:*

**'வையத்து அலகையா வைக்கப் படும்'** - *(850)*

*'பொறாமையை ஒரு பாவியாக உருவகித்துள்ளமை' :*

**'அழுக்காறு என ஒரு பாவி திருச்செற்றுத்**
**தீயுழி உய்த்து விடும்'** - *(168)*

*2)* **மறந்தும் பிறன்கேடு சூழற்க :** *மறந்துகூட, ஒருவன் பிறனுக்குக் கேடுகள் செய்ய எண்ணிப்பார்க்க வேண்டாம்.*

*மறந்தும் : மறந்துங்கூட.*

*- அஃதாவது, அதனால் தனக்கும் பிறர்க்கும் வரும் தீமைகளை நினைந்து பாராமல் மறந்தும்கூட,*

*'மறந்தும்கூட ஒரு கேட்டையோ பழிவரும் செயலையோ செய்ய வேண்டாம் அல்லது மறக்க வேண்டாம் என்று எச்சரித்துக் கூறுவதும்,*

*- ஒன்றை ஒரு தீமையைச் செய்யாமல் மறந்துவிடுதல் நன்று அல்லது மறந்துவிடுதல் வேண்டும் என்று உறுதிப் படுத்திக் கூறுவதும், ஆசிரியர் வழக்கு, என்க.*

*மறந்தும் ஒன்றைச் செய்யவேண்டாம் அல்லது மறக்கவேண்டாம் என்பது.*

***'பொருள் தீர்ந்த 'பொச்சாந்தும்' (மறந்தும்) சொல்லார்'*** - ***199***

***'மறத்தலின் ஊங்கில்லை கேடு'*** - ***32***

***'மறவற்க மாசற்றார் கேண்மை'*** - ***106***

**ஒன்றைச் செய்யாமல் மறந்துவிடுக அல்லது மறந்து விடுதல் வேண்டும் என்பது**

**'நன்றல்லது அன்றே மறப்பது நன்று' - 108**

**'மறத்தல் அதனினும் நன்று' - 152**

**'மறத்தல் வெகுளியை யார்மாட்டும்' - 303**

**'பொச்சாவா (மறவாமை)க் கருவியால் போற்றிக் கொளல்' - 537**

பிறன்கேடு : ஒருவன் பிறனுக்குக் கேடுகள் செய்ய.

சூழற்க : எண்ணிப் பார்க்க வேண்டா.

சூழ்தல் - ஆழ்ந்து எண்ணுதல்

- ஆராய்தல், எண்ணிப் பார்த்தல்.

- பிறனுக்குக் கெடுதல்களை என்னென்ன வகையில், எவ்வெவ்வாறு, எவ்வெக்காலங்களில், எவ்வெவ்விடங்களில் செய்யலாம் என்பன பற்றி ஆழ எண்ணுதல், அதுபற்றி ஆராய்ந்து முடிவு செய்தல்.

சூழ்வு - அறிவாராய்வு.

- அறிவால் ஆராய்ந்து ஒன்றைச் செய்தல் 'சூழ்ச்சி' எனப்படும்.

- பெரும்பாலும் பிறர்க்கு நல்லது செய்வதைவிடத் தீயது செய்வதற்கே மிகுதியும் ஆராயப் படுவதால் 'சூழ்ச்சி' என்னும் சொல், தன் உயர்பொருளில் தாழ்ந்து கெடுதற்பொருளிலேயே மிகுதியும் பயன்படுத்தப் பெற்று வருகிறது, என்க.

- 'நாற்றம்' என்பதும், 'கூத்தி' என்பதும் அவ்வகையில் இழிந்த பொருள்கள் தரும்படி தாழ்ந்த சொற்களாம்,

2) சூழின், சூழ்ந்தவன் கேடு அறம் சூழும் :

அவ்வாறு எண்ணினால், எண்ணுகிறவனுக்குத் (தண்டனையாக) என்ன கேடுகள் செய்யலாம் என்பது பற்றி அறம் எண்ணிப் பார்க்கும்.

சூழ்ந்தவன் கேடு : சூழ்ந்தவனுக்கு உரிய கேடுகளை.

- அஃதாவது, அவ்வாறு சூழ்ந்தவனுக்குத் தண்டனையாகத் தரவேண்டிய கேடுகளை.

- அவனுக்கு என்ன கேடுகள் செய்யலாம் என்பது பற்றி.

அறம் சூழும் : அறம் எண்ணிப் பார்க்கும்.

- தானே நிகழும் நிகழ்வுகளை, உறுதிபற்றி ஒரு தெய்வம் நின்று நிகழ்த்துவதாக உருவகித்துக் கூறப்பெற்றது, என்க.

- உருவகங்களை உண்மை என்று வேதநூலார் மிகைப்படுத்திக் கூறியது,

மக்களை அச்சுறுத்தல் நோக்கி, என்க.

- இவ்வகையில், ஆரியவியலில் ஏராளமான, அறவிறந்த, மூடநம்பிக்கைகளை அடிப்படையாகக் கொண்ட கற்பனைகள் கதைகள் உண்டு.

- நரகம், எமவுலகம், தீயவற்றுக்கு அங்குத் தரப்பெறும் தண்டனைகள்,

- துறக்க(சுவர்க்க)வுலகம், இந்திரவுலகம், நல்லவற்றுக்கு அங்குத் தரப்பெறும் நற்பயன்கள் முதலியவாம், அவை.

- இவை தமிழியலுக்கு முற்றிலும் புறம்பானவை மட்டுமல்ல மாறானவையும் ஆகும் என்க.

- நூலாசிரியர்க்கு இவற்றிலெல்லாம் முற்றிலும் உடன்பாடும், அறிவுப் பற்றுதலும் இல்லை யென்றாலும், ஓரிரு பொதுநல வுணர்வு நலன்கள் கருதியும், அக்காலப் புரிதல் உணர்வு, கருதியும், ஆங்காங்கே ஒன்றிரண்டு கருத்துகளைக் கூறியுள்ளார் என்க. அவை,

| | |
|---|---|
| **'இந்திரனே சாலும் கரி'** | **- 25** |
| **'பெற்றாற் பெறின் பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப் புத்தேளிர் வாழும் உலகு'** | **- 58** |
| **'புத்தேள் உலகத்தும்'** | **- 213** |
| **'போற்றாது புத்தேள் உலகு'** | **- 234** |
| **'கள்ளார்க்குத் தள்ளாது புத்தேள் உலகு'** | **- 290** |
| **'புத்தேள் நாட்டு உய்யாதால்'** | **- 966** |
| **'புத்தேள்நாடு உண்டோ'** | **- 1323** |
| **'தேவர் அனையர்'** | **- 1073** |
| **'திங்களைப் பாம்புகொண் டற்று' (இராகு)** | **- 1146** |

- முதலியவாம் என்க.

- 'அறம் சூழும்' என்பது, தனிப்பட்ட ஒருவர் செய்யும் குமுகாயக் கேட்டுக்கு, எதிராக ஏற்படும் குமுகாயப் பொது விளைவுகளையே குறிக்கும் என்று கொள்க.

- ஒருவனுக்கு மற்றவன் கேடு விளைக்க எண்ணுகிறபோதே அவனுக்குள்ளேயே அதற்கு எதிரான உணர்வுகளும் தோன்றி விடும் - என்பதோர் உளவியல். அதனை அவன் தன் துணையாளர்களிடமோ, தன் எண்ணத்தைச் செய்து முடிக்க இருப்பவனிடமோ சொல்லி, அதைச் செயலுக்குக் கொண்டுவர முயலும் பொழுது, அவர்களின் மனங்களிலும் இரண்டாவது எதிர்விளைவுகள் தோன்றி விடுகின்றன.

இவ்வாறு படிப்படியாய் அத்தீய எண்ணம் செயலுக்கு வருவதற்குள் பல படிநிலைகளில் அத்தீய எண்ணத்திற்கு எதிரான எண்ணமும் வலிவு பெற்று விடுகிறது. என்னை?

'ஒவ்வொரு செயலுக்கும் நேர் எதிரான அதே வலிவான ஓர் எதிர்ச்செயல் உருவாகி விடுகிறது'(for every action there is an equal and opposite reaction) என்பது அறிவியல் உண்மை.

- இந்த அறிவியல் உண்மையைத்தான் முன்னாளைய அறிஞர்கள் மெய்யறிவியல் உண்மையாக - இயற்கை உண்மையாக வெளிப்படுத்தினர். நூலாசிரியரும் இவ்வுண்மையை வேறு இடங்களில் வேறு வகையாகவும் வெளிப்படுத்தியுள்ளதைக் காணலாம்.

- கீழே குறிப்பிடப்பெறும் எண்களுள்ள குறட்பாக்களை நோக்குக:

- *31, 32, 38, 77, 83, 84, 85, 98, 107, 110, 112, 116,117, 121, 122, 123, 127, 130, 136, 137, 155, 156, 163, 168, 171, 178, 186, 208, 271, 283, 293, 329, 330.*

- இன்னும் பலவற்றை இனிவரும் இடங்களிலெல்லாம் கண்டு கொள்க.

- இவற்றில் கூறப்பெற்றுள்ள கருத்துகளெல்லாம் குமுகாய அளவில் ஏற்படும் பொதுஅற விளைவுகளே என்பதை உற்றறிந்து உணர்க.

- இவற்றுள், மிகவும் தெளிவாகப் பளிச்சென்று கூறப்பெற்றுள்ள ஒரு கருத்து மட்டும் ஒருசோற்றுப் பதமாக இங்கு வைக்கப்பெறுகிறது.

**'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா**
**பிற்பகல் தாமே வரும்'** **- 329**

- இதற்கியைபாக வேறு பிறரும் கூறிய கருத்துகளில் ஓரிரண்டையும் கீழே காணலாம்.

**'முற்பகல் கண்டான் பிறன்கேடு, தன்கேடு**
**பிற்பகல் கண்டு விடும்'** **- பழமொழி:130 : 3-1**
**'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்'** **- கொன்றைவேந்தன்:74**
**'பிறர்க்கின்னா செய்தலின் பேதைமை இல்லை**
**பிறர்க்கின்னா தென்றுபேர் இட்டுத் தனக்கின்னா**
**வித்தி விளத்து வினைவிளைப்பக் காண்டலின்**
**பித்தும் உளவோ பிற'** **- அறநெறிச்சாரம்:96.**
**'தானே தனக்குப் பகைவனும் நட்டானும்**

**தானே தனக்கு மறுமையும் இம்மையும்**
**தானேதான் செய்த வினைப்பயன் துய்த்தலால்**
**தானே தனக்குக் கரி.'** **- அறநெறிச்சாரம்:174.**
**'வரைகொள்ளா, முன்னை ஒருவன் வினைசுடும்'** **- நான்மணி:52:3**

- 'அறஞ்சூழும்' என்பதற்குப் பரிமேலழகர்

'அறக்கடவுள் என்பது' மதவியற் பொருளாம்.

- பாவாணரும், அவரையொட்டி 'அறத்தெய்வமே செய்ய எண்ணும்' என்று பொருள் கூறி, 'தப்பாது பழிக்குப் பழிவாங்க, வலிமை மிக்க அறத் தெய்வம் உடனிருத்தலால், ஒருவனுக்குத் தீங்கை எண்ணுதலும் ஆகாது என்க' என்று விளக்கமும் கூறுதல், அறிவியலுக்கும், உலகியலுக்கும், அறவியலுக்கும் பொருந்தாக் கூற்றாகும் என்று கூறி விடுக்க.

4) தீய செறுவார்க்கும் செய்ய வேண்டா என அறிவுவழி முன்னர்க் கூறியவர், இதில் பொதுமை யறவழிப் பிறன்கேடு சூழற்க என்றதால், அதன் பின்னர் இது வைக்கப் பெற்றது.

## உ0ரு. இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்
## இலனாகும் மற்றும் பெயர்த்து - 205

**பொருள்கோள் முறை:**

**இலன் என்று தீயவை செய்யற்க; செய்யின்**
**மற்றும் பெயர்த்து இலனாகும்.**

**பொழிப்புரை :** யான் பொருள் இல்லாதவன் என்று கருதி, அவ் வில்லாமை (வறுமை) நீங்குவதற்காகத் தீயவற்றைச் செய்யவேண்டாம். அவ்வாறு செய்யின், ஏற்கனவே இருப்பதும் நீங்கி மேலும் இல்லாதவனாகவே ஆவான்.

**சில விளக்கக் குறிப்புகள் :**

1) **இலன் என்று தீயவை செய்யற்க :** யான்பொருள் இல்லாதவன் என்று கருதி, அவ் வில்லாமை (வறுமை) நீங்குவதற்காகத் தீயவற்றைச் செய்யவேண்டா.

- இலன் என்று : தனக்குப் பிறரைப் போல் இல்லையே என்று கருதி.
- பெரும்பாலான தீமைகள் இல்லாமையால் - வறுமையால் - தாம்

*ஏற்படுகின்றன என்பது குமுகவிலயலாளர் மதிப்பீடு.*

- *எனவே, பொருளின்மை கருதி கூடப் பிறர்க்குத் தீமை செய்தல் கூடாது என்று தடுத்தார், என்க.*
- *பொருளில்லாமல் தீமை செய்வது, அப்பொருளில்லா வறுமையைப் போக்கிக் கொள்ளும் நோக்கத்தால், என்க.*
- *பொருளில்லாமல் செய்யும் தீமைகள்.*

*1) பிறர் பொருளைத் திருடுதல்.*

*2) ஏமாற்றிப் பறித்தல்.*

*3) அடித்துப் பிடுங்குதல்*

*4) கொலைசெய்து எடுத்துக் கொள்ளுதல். முதலியன*

- *உலகின்கண் ஒருவன் தீமை செய்வது பலவகைக் காரணங்களால் நிகழ்கின்றன. நூலாசிரியரே அவற்றைப் பலவிடங்களிலும் பலவகைகளில் விளக்கியுள்ளார். அவற்றை இவ்விடத்து நினைவு கூர்தல் மிகு பயன் தருவதாகும்.*
- *அவை வருமாறு.*

*1) நடுவுநிலையின்மையால்:*
**'நடுவொரீஇ அல்ல செயின்'** **- (116)**

*2) அடக்கமின்மையால்:*
**'அடங்காமை ஆரிருள் உய்த்துவிடும்'** **- (121)**

*3) மிகு சினத்தினால்:*
**'கதம்காத்து கற்றடங்கல் ஆற்றுவான்'** **- (130)**
**'தன்னைத்தான் காக்கின் சினம் காக்க'** **- (305)**

*4) ஒழுக்கமின்மையால் :*
**'இழுக்கத்தின் எய்துவர் எய்தாப் பழி'** **- (136)**

*5) எளிது என்பதால் :*
**'எளிதென இல்லிறப்பான்'** **- (145)**

*6) அறவுணர்வின்மையால் :*
**'அறன்வரையான் அல்ல செயினும்'** **- (150)**

*7) மிகைச்செருக்கால் :*
**'மிகுதியான் மிக்கவை செய்தார்'** **- (158)**

*8) பிறர்மேல் கொண்டபொறாமையால் :*
**'அழுக்காற்றின் அல்லவை செய்வார்'** - *(164)*

*9) குறுகிய மனவுணர்வால் :*
**'அவ்வித்து அழுக்காறுடையான்'** - *(167)*

*10) பிறர்பொருள்மேல் உள்ள ஆசையால் :*
**'வெஃகி வெறிய செயின்'** - *(175)*

*11) ஞாயஉணர்வு இன்மையால் :*
**'நயனில நட்டார்கண் செய்தல்'** - *(192)*

*12) உள்ளச் செருக்காலும், உடல் திமிராலும் :*
**'தீவினை என்னும் செருக்கு'** - *(201)*

*13) வஞ்சனையான மனவுணர்வால் :*
**'வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம்'** - *(271)*

*14) பழக்கவுணர்வால் :*
**'களவின்கண் கன்றிய காதல்'** - *(284)*

*15) உண்மை உணர்வு இன்மையால் :*
**'வாய்மை தீமை இலாத சொலல்'** - *(291)*

*16) செல்வச் செருக்கால்:*
**'செல்வம் பெறினும் பிறர்க்கின்னா செய்யாமை'** - *(311)*

*17) நிலையாமை உணராமையால்:*
**'நில்லாத வற்றை நிலையின என்றுணரும்**
**புல்லறி வாண்மை'** - *(331)*

*18) தன்னைக் குற்றமில்லாதவனாகக் கருதிக் கொள்வதால்:*
**'தன் குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கில்'** - *(436)*

*19) தன்னை அளவுக்குமீறி எண்ணும் தற்பெருமையால்:*
**'வியவற்க எஞ்ஞான்றும் தன்னை'** - *(439)*

*20) நல்ல குடும்பத்தில் பிறவாததால்:*
**'குடிப்பிறந்து தன்கண் பழிநாணுவான்'** - *(794)*

*21) ஏற்கனவே உள்ள உட்பகையால் :*
**'உட்பகை உள்ளதாம் கேடு'** - *(889)*

*22) பெண் ஆசையால்:*
**'பெண் சேர்ந்தாம் பேதைமை'** - *(910)*

23) குடிப்பழக்கத்தால் :
**'கள்ளென்னும் பேணாப் பெருங்குற்றத்தார்'** - (924)

24) சூதாடும் உணர்வால்:
**'சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூது'** - (934)

25) நாணவுணர்வு இல்லாமையால்:
**'நலம் சுடும் நாணின்மை நின்றக்கடை'** - (1039)

26) மனைவிமேல் கொண்ட மிகைவிழைவால் அவளுக்கு அஞ்சும் உணர்வால்:
**'இல்லாளை அஞ்சுவான் அஞ்சும்மற் றெஞ்ஞான்றும்**
**நல்லார்க்கு நல்ல செயல்'** - (905)

27) தீய நண்பர்களால்:
**'நகைவகைய ராகிய நட்பின் பகைவரால்**
**பத்தடுத்த கோடி உறும்'** - (817)

28) அறிவின்மையால்:
**'அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை'** - (842)

29) நற்குணம் இன்மையால்:
**'குணனிலனாய்க் குற்றம் பலவாயின்'** - (868)

30) கயமை(கீழ்மை) உணர்வால்:
**'கயவர்... மேவன செய்தொழுக லான்'** - (1073)

- முதலிய வல்லுணர்வுகளுடன், இந்தக் குறள் கருத்தையும் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

31) இல்லாமை (வறுமை) நிலையால்:
**'இலன் என்று தீயவை செய்தல்'** - (205)
**'இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற**
**புன்மையில் காட்சி யவர்'** - (174)

2) **செய்யின் மற்றும் பெயர்த்து இலனாகும் :** அவ்வாறு செய்யின், ஏற்கனவே இருப்பதும் நீங்கி, மேலும் இல்லாதவனாகவே ஆவான்.

மற்றும் - மீண்டும், மேலும்.

- பரிமேலழகரும் அவரைப்பற்றிப் பாவாணரும், மற்றும் என்பதில் உள்ள 'உம்'மையைப் பெயர்த்தும் என்று பிரித்துச் சேர்த்து, மற்று என்பதை அசைநிலை என்று கூறுவர். அஃது அசைநிலையன்று.

- 'மற்றும்' என்னும் சொல்லை, ஆசிரியர், மீண்டும் அல்லது பின்னும்

அல்லது மேலும் என்னும் பொருள்களிலேயே வேறு இடங்களில் வழங்கியுள்ளமை கருதத்தக்கதாம்.

**'மயலாகும் மற்றும் பெயர்த்து'** - ***(344)***

**'மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல்'** - ***(345)***

**'நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்**
**உண்மை அறிவே மிகும்'** - ***(373)***

**'ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றும் ஓர்**
**ஒற்றினால் ஒற்றிக் கொளல்'** - ***(588)***

பெயர்த்தும் : நீங்கி, விலகி, இல்லாமல் ஆகி.
முன்னர் இருந்ததும் நீங்கி, விலகி.

**'புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்**
**அள்ளிக்கொள் வற்றே பசப்பு'** - ***(1187)***

- தான் பொருள் இல்லாதவன் - வறுமையுடையவன் என்று கருதி, அவ்வில்லாமை நீங்குவதற்காகத் தீயவற்றைச் செய்யின், ஏற்கனவே உள்ள சிறு பொருளும் நீங்கி, மீண்டும் அந்த நிலையை விட இன்னும் கீழான வறுமை நிலையை அடைய வேண்டி வரும் என்று எச்சரித்தார், என்க.

- முன் இருந்ததும் இல்லாமற்போதலாவது, தீயவை செய்ததால் வரும் எதிர் விளைவுகளை நேர்கொள்ள அல்லது ஈடுகட்ட, முன்னிருந்த சிறு பொருளையும் இழத்தல் வேண்டி வருமாதலால் என்க.

3 ) இரண்டு 'இலன்'களில் முன்னது, தன்மை ஒருமையிலும், பின்னது, படர்க்கை ஒருமை வினையாலனையும் பெயராகவும் வந்தன.

4 ) முன்னதில் மறந்தும் பிறன்கேடு சூழற்க, என்றவர், இதில் இலன் என்றும் தீயவை செய்யற்க என்று அதே வகையில் அறிவுறுத்தலால், அதன் பின்னையது ஆனதிது.

**உ0சு. தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால**
**தன்னை அடல்வேண்டா தான். - 206**

**பொருள்கோள் முறை:**

***நோய்ப்பால தன்னை அடல் வேண்டாதான்,***
***தீப்பால தான் பிறர்கண் செய்யற்க.***

**பொழிப்புரை :** *துன்பந்தரும் கேடுகள் தன்னை வந்து வருத்துவதை விரும்பாதவன், தீமையான செயல்களைத் தானும் பிறர்க்குச் செய்யாதிருப்பானாக.*

**சில விளக்கக் குறிப்புகள்:**

*1)* ***நோய்ப்பால தன்னை அடல் வேண்டாதான் :***

*துன்பந்தரும் கேடுகள் தன்னை வந்து வருத்துவதை விரும்பாதவன்.*

*நோய்ப்பால : துன்பம் தரும் கேடுகள்*

*- பால - பாற்பட்டவை. - துன்பத்தின்பாற் பட்டவை. - அஃதாவது பலவகையான கேடுகள்.*

*'நோய்ப்பால' என்பதற்குப் பரிமேலழகர் பாவங்கள் என்று கூறுவது மதம்.*

*அடல் - தாக்கம், வருத்தம் - வருத்துவதை, தாக்குவதை*

*வேண்டாதான் - விரும்பாதவன்.*

*-- தமக்குக் கேடுகள் வரவேண்டுமென்று யாரும் விரும்பமாட்டார்.*

*- அவ்வாறானவன்.*

*2)* ***தீப்பால தான் பிறர்க்கண் செய்யற்க :*** *தீமையான செயல்களைத் தானும் பிறர்க்குச் செய்யாதிருப்பானாக.*

*தீப்பால : தீமையான செயல்களை.*

*செய்யற்க : செய்யாதிருப்பானாக. - தான் செய்தால் அதற்கு எதிராகப் பிறரும் தமக்குச் செய்யலாம் அல்லது அரசால் தண்டிக்கப்படலாம் என்றுணர்தல் வேண்டும்.*

*- என்னை ?*

*'குடிபுறங் காத்து ஓம்பிக் குற்றம் கடிதல்' அரசின் கடமையாகலின், பிறர்க்குத் தீமை செய்வார். தண்டிக்கப் பெறுதல் இயல்பாம் என்க.*

*3) தீய செயல்களைப் பிறர்கண் செய்யாதொழிக என்று கூறுதல் நிலையில், தனக்கு வரும் துன்பங்களைத் தவிர்த்தற் பொருட்டேனும், பிறர்பால் தீயவை செய்யற்க என்றதால், முன்னதனை அடுத்து இது நின்றது.*

**உ0எ. எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை**
**வீயாது பின்சென்று அடும். - 207**

**பொருள்கோள் முறை: இயல்பு**

**பொழிப்புரை** : எவ்வகையான பகையினைக் கொள்ளப் பெற்றாரும், அதனின்று ஒருவகையான் தப்பித்துக் கொள்ளலாம். ஆனால், தீய செயல்கள் என்னும் பகை, அழியாமல் அவற்றைச் செய்தவரைத் தொடர்ந்து சென்று தாக்கும்.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **எனைப் பகை உற்றாரும் உய்வர் :** எவ்வகையான பகையினைக் கொள்ளப் பெற்றாரும், அதனின்று ஒருவகையான் தப்பித்துக் கொள்ளலாம்.

எனைப்பகை உற்றாரும் : எவ்வகையான பகையினைக் கொள்ளப் பெற்றாரும்.

- பகை - 'பகு' என்னும் வேரடியாகப் பிறந்த சொல்.

- பகுத்தல் பிரித்தல் - பாகுபாடு செய்தல். 'எட்பகவுஅன்ன' - (88)

- பிரிந்த பின் வேறுபடல்.

பின், மனம், மொழி, செயல் அனைத்தாலும் வேறுபட்டு இயங்குவது.

- அவ்வுணர்வுகள் வலிவடைந்த பின்னர், ஒன்றையொன்று எதிர்ப்பது.

- எதிர்ப்பு வலிவமைந்தபின் ஒன்றையொன்று அழிக்க முந்துவது; அழிப்பது.

- பகைக்கு முந்து நிலை இகல்.

இகல் - மாறுபடுவது. பகை - வேறுபடுவது. மாறுபட்ட பின்னரே, வேறுபட்டு இயங்கும் நிலை தோன்றும்.

**'மாறு நின்று எதிர்ந்த'** - **குறுந்: 297:3**

பகை - மூன்று நிலைப்பட்டது. மனப்பகை, உட்பகை, புறப்பகை.

- மனப்பகை : தன் மனத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்ள முயற்சி செய்யாமல், பலவாறான தவறான எண்ணங்களை வளர விடுவார்க்கு, அவ்வெண்ணங்களே அகப்பகையாக வளர்ந்து விடுதல் இயல்பு என்க.

- தீய எண்ணங்கள் தோன்றும் பொழுதே அவற்றை அறிவுணர்வால் வளர விடாது. அகற்றிக் கொள்ளுதல் வேண்டும். -

**'சென்ற இடத்தால் செலவிடாது தீதுஒரீஇ**
**நன்றின்பால் உய்ப்பது அறிவு'** - **422**

**'இளைதாக முள்மரம் கொல்க களையுநர்**
**கைகொல்லும் காழ்த்த விடத்து'** - **879**

என்றார் ஆசிரியரும்.

இளையதாக இருக்கும்பொழுது முள்செடியை எளிதாக வேரோடு கொன்றுவிட முடியும். அது முள்மரமாக வளர்ந்து விட்டால் அதனை அழிப்பது இயலாது. அது வெட்ட வெட்ட வளரும். அக்கால் அது கைகளையும் வருத்தும் என்றார். இங்கு அவர் கூறும் செயல் எளிமையையும், செயற்கடுமையையும் கருத்தில் கொள்ளுதல் வேண்டும்.

'கிள்ளி எறிவதைக் கோடரிபோட்டு வெட்டி யெறியும் படி விடுவதா' என்பது ஒரு பழமொழி வழக்கு.

- பகையுணர்வுகள் வளரவிடாது மனத்தைத் தூய்மையாக வைத்துக் கொண்டால் தீயவுணர்வுகள் தோன்றுதற்கு வழியில்லை, என்க. என்னை?

**'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்'** - 34

**'மனம்தூயார்க்கு எச்சம் நன்றாகும்'** - 456

**'மனநலன் மண்ணுயிர்க்கு ஆக்கம்'** - 457

**'எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்**
**மாணாசெய் யாமை தலை'** - 317

**'நெஞ்சத்து அழுக்காறு இலாத இயல்பு'** - 161

**'பலநல்ல கற்றக் கடைத்தும் மனம்நல்லர்**
**ஆகுதல் மாணார்க்(கு) அரிது'** - 823

**'அறம் சொல்லும் நெஞ்சத்தான்'** - 185

- மனத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்ளாமை பலவகையான தீய எண்ணங்களும் தோன்றவே வழி செய்யும்.

- மனமாசு பலவகைப் பட்டது. அம்மாசு உள்ளவர்களைப் பலவாறு தாழ்வு படுத்திக் கூறுவார், ஆசிரியர்.

**'மனத்தது மாசாக'** - 278

**'வஞ்ச மனத்தான்'** - 271

**'அகம் குன்றியவர்'** - 277

**'அவ்விய நெஞ்சத்தான்'** - 169

**'நெஞ்சத்துக் கோடாமை'** - 115

**'களவறிந்தார் நெஞ்சம்'** - 288

**'தன்நெஞ்சம் நடுவுஒரீஇ அல்ல செய்தல்'** - 116

**'நிறை நெஞ்சம் இல்லவர்'** - 917

**'கள்ளாமை காக்க தன் நெஞ்சு' - 281**

**'அறிவிலான் நெஞ்சம்' - 842**

**'மருள் நெஞ்சம்' - 352**

**'ஈயாது இவறும் மருள்' - 1002**

**'கரப்பிலா நெஞ்சம்' - 1053**

**'காணாச் சினத்தான் கழிபெரும் காமத்தான்' - 866**

**'தன்நெஞ்சம் தானறி குற்றப் படின்' - 272**

**'உள்ளத்தால் பொய்யா தொழுகின்' - 294**

**'மனத்தொடு வாய்மை மொழியின்' - 295**

**'நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்**
**பகையும் உளவோ பிற' - 304**

**'நெஞ்சத்து ஒளித்தல்' - 928**

**'வஞ்ச மனத்தான் படிற்று ஒழுக்கம்' - 271**

- ஈங்கு எடுத்துக் காட்டிய ஆசிரியர் கூறும் மனமாசுகள் ஆவன: அஃதாவது மனப் பகையுணர்வுகள் ஆவன.

- வஞ்சமாக இயங்குவது; குறுகிய உள்ளம்; சினம் கொள்வது; பொறாமை கொள்வது; நடுநிலையில்லாமை; திருட்டு உணர்வு; பெருந்தன்மையின்மை; கள்ள உணர்வு; அறிவால் செப்பப்படுத்தப் பெறாத அலைவுள்ள உள்ளம்; சூதுடைமை; காம உணர்வு; கரவுணர்வு; குற்றவுணர்வு, பொய்யான உள்ளம்; மறைத்துப் பேசும் உணர்வு; தீயவை எண்ணும் உள்ளம் முதலியன.

- இவ்வுணர்வுகள் ஒருவன் மனத்தில் தோன்றி, வளர்ந்து, நிலைப்படின், அவை அவனுக்கே அகப்பகையாக நின்று இயங்கும் என்க.

- இவைபற்றிப் பிறரும் பலவகையாகக் கூறியிருப்பனவும் இங்குக் கவனிக்கத் தக்கன. அவற்றுள் சில ;

**'தன்னுடன் உறை பகை' - அகம் 186 : 20**

**'பகைமிக்க நெஞ்சத்தேம் புன்மை' - கலி : 118 : 18**

**'கடவுபு கைத்தாங்கா, நெஞ்சு எனும் தம்மோடு**
**உடன்வாழ் பகை உடையார்க்கு' - கலி: 73: 23 - 24**

**'பொய்த்துரை என்னும் பகை இருள்' - திரிகடு:22 : 3**

**'பகை, ஒருவன் முன்னம் வித்தாக முளைக்கும்'- நான்மணி:30:3**

**'தீமை மனத்தினும் வாயினும் சொல்லாமை' - திரிகடு : 78:3**

- அடுத்து, ஒருவனுக்கு இரண்டாவதாக அமையும் பகை உட்பகை.

- உட்பகை என்பது, உள்ளத்துப் பகை வைத்துக் கொண்டே பழகுகின்ற நண்பர்கள், அல்லது நெருக்கமாகப் பழகி, ஏதோ ஒரு காரணமாக விலகியும் விலகாமலும் உள்ளவர்கள்.

- இவர்களிடத்தும் ஒருவன் எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும். என்னை?

**'அஞ்சுக கேள்போல் பகைவர் தொடர்பு' - 882**

**'மனம்மாணா உட்பகை' - 884**

**'உறல் முறையான் உட்பகை' - 885**

**'செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே உட்பகை' - 887**

**'மனத்தின் அமையாதவர்' - 825**

**'இனம்போன்று இனமல்லார் கேண்மை' - 822**

**'உட்பகை அஞ்சித்தற் காக்க' - 883**

**'எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்**
**உட்பகை உள்ளதாம் கேடு' - 889**

- என்பார் ஆசிரியர்.

**'தன்மை இலாளர் பகை' - இன்னா: 31 : 4**

**'நட்பின் நய நீர்மை நீங்கல்**
**குற்றம் தரூஉம் பகை' - திரிகடு: 86:3-4**

**'உட்பகை ஒருதிறம் பட்டெனா' - புறம்:68:11**

**'நகையாய நண்பினார் நாரின்மை இன்னா' - இன்னா:8:2**

- என்பார், பிறரும்.

- இனி, ஒருவற்கு மூன்றாவதாக அமையும் பகையே புறப்பகை. பெரும்பாலும் இதன் மிகுதியும், கேடும் கருதி இதனைப் பகை என்னும் பொதுப் பெயராலேயே வழங்குவர்.

- புறப்பகை வெளிப்படையாக இயங்கும். அதனால், அதனை அடையாளம் காணுவதும் எளிது.

- இப்புறப்பகை ஒருவற்குப் பல்வேறு கூறுகளான் அமைவது. அவற்றுள் சில :

1) வழிவழி வருவது.

2) கடுமையான வாய்ச்சண்டையிடுவது.

3) ஒருவர்கொருவர் அடித்டி செய்து கொள்வது.

4) குடும்பத் தொடர்பான தீமைகள் செய்வது.

5) குழந்தைகள் தொடர்பாக வரும் கடுங்குற்றச்சாட்டுகள்.

6) உடைமை உரிமைகள் பற்றிவருவது.

7) பகைவர்க்கு நட்பாவது.

8) ஒருவரை ஒருவர் வஞ்சித்தல், ஏமாற்றல், இகழ்தல், புறங்கூறுதல் முதலியவற்றால் நேர்வது.

9) ஆண், பெண் தொடர்புத்தவறால் விளைவது.

10) மிகுதேவைக் குதவாமை அல்லது உதவியைத் திருப்பித் தராமை.

11) பொருளியல் ஏற்றத்தாழ்வுகள், சாதி, சமய, அரசியல் முரண்பாடுகள்.

12) போட்டி, பொறாமை, சீரழிவு காரணமாக வருதல்.

- முதலியவை. பெரும்பாலும் நெருக்கமாகப் பழகுபவர்களே, பின்னர் முற்கூறிய ஏதோ சில காரணங்களால் பகைவர்களாக மாறுகின்றனர். என்னை?

**'அடுத்திருந்து மாணாத செய்வான் பகை'** - **867**

**'குற்றமே காக்க பொருளாகக் குற்றமே**
**அற்றம் தரூஉம் பகை'** - **434**

**'வினை, பகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்**
**தீயெச்சம் போலத் தெறும்'** - **674**

**'அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்**
**தஞ்சம் எளியன் பகைக்கு'** - **863**

**'நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்**
**பண்புள பாடறிவார் மாட்டு'** - **995**

**'ஏமுற்றவரினும் ஏழை தமியனாய்ப்**
**பல்லார் பகைகொள் பவன்'** - **873**

- என்றார் ஆகலின்.

**'பகைப்பவர் என்பவர் பழகி யிருந்தவர்'** - **கனிச்சாறு**

**'பழகிய பகையும்'** - **நற்:108:6**

**'அருந்தொழிற் பகை'** - **ஐங்: 450:1**

**'மழவர் வாய்ப்பகை'** - **அகம்: 101:6**

**'யார்மாட்டும், கொள்ளாமை வேண்டும் பகை'** - **நான்மணி:85:4**

- என்றார், பிறரும்.

இனி, இவ்வகையாகப் பகைகொண்டவன், அவற்றினின்று உய்வது - தப்புவது- எப்படி என்பது பற்றியும் சிந்தித்தல் வேண்டும். அஃதியல்வதோ எனின் இயல்வதே என்க. என்னை?

'நகையேயும் வேண்டாத நல்லறிவி னார்கண்
பகையேயும் பாடு பெறும்' - நாலடி: 187:3-4

'பகையறு பயவினை முயறிமன்' - கலி: 17:14

'நெடும்பகை தற்செய்ய தானே கெடும்' - பழமொழி: 83:4

'பகைகெட வாழ்வதும் பல்பொருளால் பல்லார்
நகைகெட வாழ்வதும் நன்று' - சிறுபஞ்ச: 14:3-4

'நெற்செய்யப் புல்தேய்ந்தாற் போல நெடும்பகை
தற்செய்யத் தானே கெடும்' - பழமொழி: 83:3-4

'நட்டாரை ஆக்கிப் பகை தணித்து' - பழமொழி:398:1

'எதிர்த்த பகையை இளைதுஆய போழ்தே
கதித்துக் களையின் முதிராது; எதிர்த்து
நனிநிற்பச் செய்தவர் நண்புஎலாம் தீர்க்க
தனிமரம் காடு ஆவது இல்' - பழமொழி: 390

'மறையாது இனிதுஉரைத்தல் மாண்பொருள் ஈதல்
அறையான் அகப்படுத்துக் கோடல் - முறையான்
நடுவணாச் சென்றுஅவரை நன்கு எறிதல் அல்லால்
ஒடிஎறியத் தீராப் பகை' - பழமொழி: 387

- 'பழம் பகை நட்பாதல் இல்' - பழமொழி: 97:4

- என்பார், பிறர். நூலாசிரியரும்.

'வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு' - 878

'பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடையாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு' - 874

'பகைநட்பாம் காலம் வரும்' - 723

'பகைஎன்னும் பண்பில் அதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று' - 871

'பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்' - 450

-எனப் பகை நட்பாதற்கும், அஃது இல்லாமற்போயின், அது

விலகுதற்கும், பலவகையானும் உளவு சொல்வார், ஆசிரியர்.

- அஃதாவது, முதற்கண் பகையை நட்புச் செய்தற்கு முயலுதல் வேண்டும். அல்லது அஃது இயலவில்லையாயின், அதைத் தவிர்த்தற்கேனும் முயலுதல் வேண்டும். இவற்றைக் காலமறிந்து, இடமறிந்து, செய்தல் வேண்டும்.

- இவற்றுக்குத் தக்க பெரியார்களை, நடுநிலையுள்ளவர்களை, பொது அறம் கருதுபவர்களைத் தக்க துணையாகக் கொள்ளுதல் வேண்டும்.

அத்துடன்,

- பகையைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்று

கருத்துக் கொண்டவர், அனைத்தினும் மேலாக, முன்னிருந்த பகையுணர்வுகளை வளர்த்துக் கொள்ளும் சிறுசிறு பூசல்களில் ஈடுபடாது, அடங்கியிருத்தல் தலையாய கடைப்பிடியாகும்.

- அவற்றை நிரல் நிறையாகக் காண்போம்.

1) ஓர் இல்லறவியலான், தனக்கு ஏதோ ஒருவகையில், அண்டை அயலில் உள்ளார் கடும் பகையாகச் சூழின், முதலில் அங்கிருந்து இடம் பெயர்ந்து, வேறு எங்கேனும் ஒரு புதிய சூழலில் குடியமர்தல் வேண்டும்.

2) அத்தகு நிலையில், அங்கிருந்து பெயர வேண்டுதல் தேவையில்லாதவிடத்துத் தன் பகைவர்க்கும், தனக்கும் பொதுவான நடுநிலைச் சான்றோர் ஒருவரைத் தான் கண்டுபேசி, தன் பாங்கின் நிலைகளை நன்கு எடுத்து விளக்கித் தனக்கும், பகைக்கும் ஒப்புரவு செய்ய, சந்துசெய்ய, முயலுவித்தல் நலம் தரும்.

3) அல்லது, தன் பகைக்கு ஏதோ ஒரு வகையில் உறவாகிக் கொள்ளும் சூழ்நிலையை உருவாக்குதல் வேண்டும். இதற்கும் முன்னைய சான்றோர்களைத் துணையாகக் கொள்ளலாம்.

- உறவாகிக் கொள்ளும் சூழல் என்பது திருமணத் தொடர்பு, நில, புல முதலிய சொத்துத் தொடர்பு போன்ற நிலைகள்.

4) பகைவர்க்குத் தேவையான நிலையில், தன்னால் இயன்ற வகையில் பொருளாலோ, பணிநிலைகளினாலோ, வழிச்செலவு, நல்லது கெட்டது போலும் குடும்ப நிகழ்வு நிலைகளிலோ, தானே முன்சென்று உதவுதல்.

5) பகைவர்க்கு ஏதேனும் இடர்ப்பாடான சிக்கல்கள் வரும் நிலையில், அவர்க்கு எதிரானவர்களேயோ, அல்லது எதிரான சூழல்களையோ, தான் போய் முன்நின்று, பகைவர் சார்பாக, அவற்றைப் போக்குதற்கு உதவியாய் நிற்பது.

6) பகைவர்தம் குடும்பத்தவரிடை - அவர்தம் துணைவியரிடையே தன் துணைவியையும், அவர்தம் பிள்ளைகளிடையே, தன் பிள்ளைகளையும் - முதலில் நட்புக் கொண்டு உறவாடச் செய்து, படிப்படியே அதனை வளர்த்துப் பகைப் பூசல்கள் சிற்சிறிதா மாய்ந்து போகச் செய்தல்.

7) பகையாளருடன், ஏதும் ஒரு பொது நிகழ்வில், காலமும் இடமும் பார்த்து, ஒப்புரவாகி இணைந்து செய்ய முயலுதல்.

8) பகையாளரைப் பற்றிய குற்றங்களைப் பற்றித் தங்களுக்குப் பொதுவான நண்பர்களிடம் சிறிதும் உரையாடாது, அவர்தம் நற்குணங்களைப் பற்றியே மேலோக்கமாகப் பேசிவருதலும், அத்தகைய பேச்சுகள் பகையாளர்தம் செவிகளுக்கு எட்டுமாறு செய்தலும் வேண்டும்.

- இன்னோரன்ன முயல்வுகளான் பகையை நட்பாகக் கொண்டு ஒழுகும் பண்பு நிலைகளைப் போற்றி, அப் பகையினால் வரும் தாக்கங்களினின்று ஒருவாறு தப்பித்துக் கொள்ளலாம், என்க.

2) **வினைப்பகை வீயாது பின்சென்று அடும்:** ஆனால், தீய செயல்கள் என்னும் பகை, அழியாமல், அவற்றைச் செய்தவரைத் தொடர்ந்து சென்று தாக்கும்.

வினைப்பகை : தீய செயல்கள் என்னும் பகை.

- இவ்விடத்துத் தீய செயல்களே செய்தவனுக்கு ஒரு பகையாக நின்று இயங்குகின்றது.

- இதுவும் ஓர் உருவகமே - இங்குத் தீய செயல்கள் ஓர் உயிருள்ள பொருளாக உருவகித்துச் சொல்லப் பெறுகிறது என்பதை நாம் கவனித்தல் வேண்டும்.

- தீயசெயல் ஒருவன் செய்யும் வினைகளிலேயே அழியாமல் அவனைப் பின் தொடர்ந்து சென்று தாக்குகின்றது. ஆகையால், பரிமேலழகர் முதலிய உரையாசிரியர்கள் அதனை, அவர்தம் மதவியல்பு 'தீவினை'யாக - அஃதாவது ஒருவினைப் பயனாகக் கொள்கின்றனர். அதுவும் ஓர் உருவகமே ஆனாலும் அதை அவர்கள் இலக்கிய வகையில் ஓர் உருவகமாகக் கொள்ளாமல், மதவகையில் ஒரு தீவினைப்பயனாகக் கற்பித்துச் சொல்கிறார்கள் என்பவற்றில் உள்ள அடிப்படை வேறுபாட்டை அறிவினார் உணர்ந்துகொள்ளுதல் வேண்டும்.

வீயாது : அழியாமல்.

இச்சொல்லுக்கும் மணக்குடவர் வரும்.

பரிமேலழகரும் 'நீங்காது' என்று பொருள் கொண்டு,

'அத் தீவினையாகிய பகை நீங்காது, புக்குழிப்புக்குக் கொல்லும்' என்று பொருள் தருகின்றனர்.

- 'புக்குழிப் புக்குக் கொல்லும்' என்பது, தீவினை செய்தானின் உயிர், இப்பொழுதைய உடலைவிட்டு நீங்கி, வேறு பிறவிகளில் எந்தெந்த உடல்களில் புகுகின்றதோ, அந்தந்த உடல்களில் எல்லாம் தானும் புகுந்து, அவனுக்குத் தீங்கு விளைவிக்கும் என்று பொருள்படும்.

- இது தேவையில்லாத அச்சுறுத்த மிகைக் கற்பனை, என்க.

- இஃது, அளறு (நரகம்) தொடர்பான அச்சுறுத்தம். மக்கள் அறிவறியாக் காலத்துக் கற்பித்துச் சொல்லப் பெற்றது. இக்கால் அது பொருந்தாதது மட்டுமன்று, மூடநம்பிக்கையுமாகும் என்று மக்களால் உணரப் பெற்றுவிட்ட தென்க. எனவே, அதுபோலும், 'நரக' 'மோட்ச' வேதவியல் கற்பனைகள் இனி எடுபடா வென்க.

- இனி, 'வீயாது' என்னும் ஒரு சொல் 'வீ' என்னும் ஓரெழுத்தொரு சொல்லின் விரிவாம் என்க.

- வீ - வீழ்தல் - அழிதல்.

- மரத்தினின்றோ, செடியினின்றோ கீழே வீழ்ந்து கிடக்கும், 'பூ'விற்கு, 'வீ' என்னும் ஒரு சிறப்புச் சொல் உண்டு.

- முகை, மொட்டு, அலர், மலர், வீ, செம்மல் என்னும் சொற்கள், மலரின் பல வளர்நிலைகளைப் படிப்படியே குறிக்கும் சொற்களாவன.

- மலரின் ஆறு வளர்நிலைகளில், 'வீ' ஐந்தாவது நிலை. இது சிலகால் மலர்ந்துள்ள மலரையும் குறிக்கும்.

- இதுபோலும் சொற்கள், உலக மொழிகளில், அருஞ்சொல் வளமிக்க தமிழில் தவிர, வேறு எம்மொழியிலும் காணக் கிடைப்பதில்லை, என்க.

- 'வீ' என்பது வீழ்ந்துள்ள மலரைக் குறிக்கும்; 'வீஇ' என்பது வீழ்ந்து விட்ட அதன் செயலைக் குறிக்கும். 'வீ' பெயர்ச்சொல். 'வீஇ' வினைச்சொல்.

**'வேங்கை 'வீ' உகும் ஓங்குமலைக் காட்சி'** - **நற்: 12:7**
**'சிறு 'வீ' ஞாழல் துறையுமார் இனிதே'** - **நற்: 35:5**
**'கோடல், எதிர்முகைப் பசுவீ முல்லை'** - **குறுந்: 62:1**
**'வெள்வீத் தாழை திரையலை'** - **குறுந்: 163:4**
**'எக்கர் ஞாழல் இகந்துபடு பெருஞ்சினை**
**வீ இனிது கமழும்'** - **ஐங்: 148:1-2**

**'சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த**
**தார்மிகு மைந்து'** **-பதிற்: 40:15-16**

**'இறுவரை வேங்கை ஒள்வீ சிதறி'** **- கலி: 41:11**

**'சிறுபீர், வீஏர் வண்ணம் கொண்டன்று'** **- அகம்: 57:13**

**- 'வீ'யின் இரண்டாம் நிலைச்சொல்**

**'பெரும்பெயல் தலைஇய வீஇத் தாங்கு'** **- குறுந்: 165:4**

- 'வீஇ' எனும் வடிவம் 'வீந்து' வீயும், 'வீயா' என்று வளர்கிறது.

**'தீம்புனல் தெரிதர 'வீந்து உக்கா அங்கு'** **- குறுந்: 149:4**

**'மாசுணம் 'வீயும்' நீள் அத்தம்'** **- திணை.மா: 75:3**

**'வேங்கை 'வீயா' மென்சினை வீஉக'** **- குறுந்: 247 : 5**

'இனி, 'வீயா' என்பது 'அழியாத' 'இறவாத' என்னும் பொருள்களைத் தரும்.

'நீங்குதல்' 'தவிர்தல்', 'ஒழிதல்' 'அழிதல்' - என்னும் பொருள்களும் தரும்.

**'வீயா யாணர் நின்வயி னோனே'** **- பதிற்: 35:10; 36:1**

**'வீயா விழுப்புகழ்'** **- அகம் : 135 : 1**

**'வீயா விழுமம் தரும்'** **- குறள் : 284**

**'வீயாது, உடம்பொடு நின்ற உயிரும் இல்லை'- புறம்: 363:8**

**'வீயாச் சிறப்பின் வேள்வி'** **- புறம்: 15:20**

**'வீயாது பரந்தநின் வசையில் வான் புகழே' - புறம் : 168 : 22**

- எனவே, இவ்விடத்து 'வீயாது' என்பதற்கு, 'அழியாது' என்னும் பொருளே மிகப் பொருந்துவதாம் என்க.

- பின் சென்று அடும் : செய்தவனைத் தொடர்ந்து சென்று தாக்கும்.

அடும் - தாக்கும்

- கொல்லும் என்பது அத்துணை பொருந்தாது.

- 'தாக்குதல்' - அகவழியாக மனத்தாக்கத்தையும், புறவழியாக அரசுத் தண்டத்தையும் ஏற்படுத்தும்.

**'தன்நெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்**
**தன்நெஞ்சே தன்னைச் சுடும்'** **- 297**

- என்பது, அகத்தாக்கம்.

**'கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல்'** **- 550**

- என்பது, புறத்தாக்கம்.

- அகத்தாக்கம் உள்ளத்தையும் அதன் வழி உயிரையும் வருத்தும். அதனால் மன அமைதி பெறாது. நோய்த்தாக்குற்றுத் துன்புறுத்தும்.

- புறத்தாக்கம், அரசு வழித்தண்டனை பெற்றுத்தரும்; அதனால் உயிரழிவும் நேரும்.

3) எனவே, தீவினை செய்வது, அது செய்தலோடு நில்லாது, அடுத்தடுத்து, அகத்தும், புறத்தும் பல்வகைத் தாக்கங்களைத் தந்து, இறுதியில் உயிரழிவுக்கும் காரணம் ஆவதால், அது செய்யற்க என்றார், என்க.

4) இது, முன்குறளில் கூறப்பெற்ற 'நோய்ப்பால தன்னை அடல் வேண்டாதான்' என்னும் கூற்றுக்கு, மேலும் ஒரு விளக்கமாக அமைதலின், அதன்பின்னர் நிரல் கொண்டது.

**உ0அ. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை**
**வீயாது அடிஉறைந் தற்று. - 208.**

**பொருள்கோள் முறை: இயல்பு**

**பொழிப்புரை:** தீய செயல்களைச் செய்தவர்க்கு வரவிருக்கும் கெடுதல், அவரைப்பின் தொடர்ந்து வரும் அவருடைய நிழல்போல், அவரைவிட்டு விலகாமல், அவரது காலடியிலேயே தங்கிக் கிடக்கும்.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **தீயவை செய்தார் கெடுதல் :** தீய செயல்களைச் செய்தவர்க்கு வரவிருக்கும் கெடுதல்,

கெடுதல் - வரவிருக்கும் தீங்கு.

2) **நிழல் தன்னை வீயாது அடி உறைந்தற்று :**

அவரைப் பின் தொடர்ந்து வரும், அவருடைய நிழல்போல், அவரைவிட்டு விலகாமல், அவரது காலடியிலேயே தங்கிக் கிடக்கும்.

- நிழல் - நில் + அல். நில்லாமல் தொடர்வது. நிலல் - என்பது, சிறப்புநிலைச் சொல்லாகிய பொழுது, சிறப்பு 'ழ'கரம் பெற்றது.

- 'தோள்' போல் உதவுபவன் 'தோளன்' என்றாகி, சிறப்புச் சொல்லாக நிலை பெற்றபொழுது 'தோழன்' என்றாயதுபோல், என்க.

- அது ஒரு பொருளின் அடியில் சாய்ந்து கிடப்பதால், 'சாயல்' என்றும்

பெயர் பெற்றது.

- தீயவற்றைப் 'பாவம்' என்பது, மதம்.
- இஃதோர் எடுத்துக்காட்டு உவமை.
- வீயாது : விட்டு விலகாது, விட்டு நீங்காது.
- அடிஉறைவது : காலடினின் கண் தங்கிக் கிடப்பது.
- அற்று - அன்ன தன்மையது.

3) இது, முன்னைக் குறளில் கூறப்பெற்ற 'வீயாது பின் சென்று அடும்' என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டால் விளக்கம் கூறியதாகலின், அதனை அடுத்து வைக்கப் பெற்றது.

**உ0கூ. தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்**
**துன்னற்க தீவினைப் பால். - 209**

**பொருள்கோள் முறை:**

***தன்னைத்தான் காதலன் ஆயின்,***
***எனைத்தொன்றும் தீவினைப்பால் துன்னற்க.***

**பொழிப்புரை:** ஒருவன், தன் மேலேயே விருப்பம் உடையவனாக இருப்பின், அவன் என்ன வகையிலேனும் தீயவினைகளில் பொருந்தாமல் இருக்கவேண்டும்.

**சில விளக்கக் குறிப்புகள் :**

1) ***தன்னைத்தான் காதலன் ஆயின் :*** ஒருவன் தன்மேலேயே விருப்பம் உடையவனாக இருப்பின்.

காதலன் : விருப்பம் உடையவன்.

- தன்னையே விரும்புவது. தன் நலன்களிலேயே கருத்துடையவன் ஆதல்.
- காதல் - மிகுவிருப்பம்.

2) ***எனைத்தொன்றும் தீவினைப்பால் துன்னற்க:*** அவன் என்ன வகையிலேனும் தீயவினைகளில் பொருந்தாமல் இருக்கவேண்டும்.

- எனைத்தொன்றும் : எந்த வகையிலும் ஒன்றிலேனும்.
- தீவினைப்பால் : தீவினைச் செயல்களின் பால் - தீவினைகளிடத்து.

- துன்னற்க : பொருந்தற்க. துன்னல் - பிரிவின்றிப் பொருந்துதல்.

'துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்' - 188

'துன்னியார் துன்னிச் செயின்' - 494

'துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா' - 1250

'அன்னோள் துன்னலம் மாதோ' - அகம்: 258:4.

'துன்னல் போகிய துணிவி னோன்என' - புறம்: 23:14

'எம்நலம் தொலைவ தாயினும்
துன்னலம் பெரும பிறர்த்தோய்ந்த மார்பே' - ஐங்: 63:3-4

'புலியினம் மடிந்த கல்லளை போலத்
துன்னல் போகிய பெரும்பெயர் மூதூர்' - புறம்: 398:10-11

3) தீய வினைகளில் ஏதாவது ஒன்றிலேனும் தொடர்பு கொள்ளாமல் இருப்பவரே, தனக்குற்ற தனி நலன்களைப் பெற்று மகிழ முடியும். இல்லெனில் தம் தனிநலன்களை இழப்பதுடன், தீவினைக்குரிய எதிர்விளைவுகளையும் பெற்று மிகவும் துன்பப் படநேரும் என்பார்.

4) தாம் தமக்குரிய நலன்களையும் அவற்றால் மகிழ்வையும் விரும்புவதுபோலவே, இவ்வுலகிலுள்ள ஒவ்வொருவரும் அவரவர் தனி நலன்களையும் மகிழ்வையுமே விரும்புவர். ஆதலால், பிறர்க்குத் தீமைசெய்ய நினைப்பவரும் செய்பவரும், பிறரின் நலன்களையும் மகிழ்வையும் கெடுப்பதுடன், தாமும் அவற்றால் தம் நலன்களையும் மகிழ்வையும் கெடுத்துக்கொள்வதுடன், செய்யப்பட்ட தீமைகளுக்குரிய துன்பங்களையும் தாம் பெற்றாக வேண்டியிருக்கும் என்பது இங்கு ஏரணமுறையிலும் பொதுஅறமுறையிலும் உணர்த்தப் பெற்றது, என்க.

5) தீவினைகள் செய்பவர்க்கு உறுதியாகத் தீமைகள் வந்து சேரும் என்று முன் குறள்களில் கூறியவர், அவற்றொடு பொருத்தி எண்ணத்தக்க ஓர் உண்மையை மனவியல் படி, வேறு கோணத்தில் கூறி விளங்க வைத்தார். ஆகையால், இஃது அவற்றின் பின்னே வைக்கப் பெற்றது, என்க.

**உக0. அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின். - 210**

**பொருள்கோள் முறை:**

**மருங்கோடித் தீவினை செய்யான் எனின்,
அருங்கேடன் என்பது அறிக.**

**பொழிப்புரை:** ஒருவன் நேரிய வழியிற் செல்லாது, குறுக்கு வழியாகச் சென்று நலன்கள் பெற விரும்பிப் பிறர்க்குத் தீவினைகளைச் செய்யாதவன் எனில், அவன் கேடு இல்லாதவன் என்பதை அறிந்து கொள்க.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **மருங்குஓடித் தீவினை செய்யான் எனின் :** ஒருவன் நேரிய வழியில் செல்லாது, குறுக்கு வழியில் சென்று நலன்கள் பெற விரும்பிப் பிறர்க்குத் தீவினைகளைச் செய்யாதவன் எனின்,

மருங்கு ஓடி : பக்க வழியில் சென்று, குறுக்குவழி.

- நேர்வழியில்லாத பக்கவழி - குறுக்கு வழி - யாகச்சென்று.

ஓடி - விரைந்து சென்று.

- நேர்வழியாகச் செல்லாமல் குறுக்கு வழியில் சென்று - நலன்கள்பெற விரும்புதல்.

தீவினை செய்யான் எனின் : - அவ்வாறு சென்று பிறர்க்குத் தீவினை செய்யாதவன் எனின்.

- தீவினை செய்து நலன்கள் பெற விரும்புவது குறுக்கு வழி என்க.

2) **அரும்கேடன் என்பது அறிக :** அவன் கேடு இல்லாதவன் என்பதை அறிந்து கொள்க.

அருங்கேடன் - அருமைக்கேடன்.

அருமை - செய்வதரிது.

- இங்கு அருமை இன்மைப் பொருளில் வந்தது.

'அரும்பெயல் ஊர்' எனில், 'அங்கு மழைபெய்வது அருமை' அங்கு மழை பெய்யாது என்பது பொருள்.

- அருமை சிறப்புப் பொருளில் வருவது வேறு; இன்மைப் பொருளில் வருவது வேறு.
- 'அருங்காய்ப்பு உடைய மரம்' என்பது காய்ப்பது அருமை - காய்க்காத மரம் என்று பொருள் படுவது.
- 'அருவிருந்து வரும் வீடு' எனில், விருந்து வருவது அருமை - அஃதாவது விருந்து வராத வீடு - என்பது பொருள்.
- 'அருங்கேடன்' என்பதும் இவைபோலாம் என்க. என்னை?

**'பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்**

**ஆற்ற விளைவது நாடு'** - ***1732***

**'அருஞ்செவ்வி இன்னா முகத்தன் பெருஞ்செல்வன்**

**பேஎய்கண் டன்ன துடைத்து'** - ***1565***

- *என்பவற்றுள் வரும் 'அரும்' என்னும் சொற்கள் இன்மைப் பொருளில் வந்தமை கண்டு கொள்க.*

- *இனி, திருக்குறள் - பரிமேலழகர் உரைக்குத் தெளிபொருள் விளக்கமும், கருத்துரையும், குறிப்புரையும் எழுதிய கோ. வடிவேலு அவர்கள் (1904), 'கேடரியன் என்பது அருங்கேடன் என்றாயது வடமொழிப் புணர்ச்சி' என்று இதற்குக் குறிப்புரை எழுதியது, சூத்திரக் குறும்பு!*

*3) ஒருவன் தீவினை செய்ய நினைப்பது அல்லது செய்வது தனக்கு விரைந்து நலன்கள் தேடிக்கொள்வதற்காகவே ஆகும் என்பது பொது உலகியல் நடைமுறை.*

- *இவ்வுலகியல் நடைமுறையை முன்வைத்து, அவ்வாறு அவன் செய்யாமலும், அதன்பொருட்டுத் தீவினை செய்யாமலும் இருப்பின், அவனுக்கும் கேடுகள் இல்லாமற் போகும் என்றார், என்க.*

*4) இது, தன்னலத்தின் பொருட்டாகிலும் ஒருவன் தீமை செய்யாதிருக்க என்று கூறிய முன் குறளுக்கு, மேலும் ஒரு விளக்கமாக, அப்படிப்பட்டவனுக்குக் கேடுகள் வருவதில்லை என்று இதில் உறுதி கூறியதால், இஃது அதையடுத்து வைக்கப் பெற்றது என்க.*

# அ-2 இல்லறவியல்

## அ-2-18 ஒப்புரவறிதல் -22

### அதிகார முன்னுரை

**'ஒப்புரவறிதல்'** என்பது ஒப்பு + உரவு + அறிதல் என்னும் மூன்று சொற்களின் கூட்டுச்சொல் ஆகும்.

இவற்றுள், ஒப்பு என்பது சமநிலை. அஃது உலக நடைமுறையின்பாற்பட்டது. உரவு என்பது வலிமை என்று பொருள் ஒரு பெயர்ச்சொல் பின்னொட்டு (Suffix). அஃதாவது ஈற்றுநிலை.

ஒப்புரவு, துப்புரவு, நல்குரவு - என்னும் சொற்களில் அவ்வீற்றுநிலை வருவதைக் கண்டுகொள்க.

அறிதல் என்பது உணர்தல்.

எனவே, 'ஒப்புரவறிதல்' என்பது 'உலக மக்களின் சமநிலையை உணர்ந்து கொள்வது' என்று பொருள்படுவதாகும். இஃது 'உலகத்தில் சமநிலைக் குமுகாயம் அமைய உணர்த்தும் ஒரு சமநிலைக் கோட்பாட்டின் (Socialism) அடிப்படை அறவுணர்வாகும்' என்பது தெளிக.

இதனை 'ஒப்புரவு என்பது உலகநடை' என்று பழைய உரையாசிரியர் தருமரும்,

'உலக நடையை அறிந்து, அதற்கேற்பப் பிறர்க்கு உதவி செய்தல்' 'உலக இயற்கையொடு ஒப்புரவாகிய நன்மை செய்வதற்கு' என்று உரையாசிரியர் பதுமனாரும்,

- தம், நாலடியார்ச் செய்யுள்கள் 22, 37, 148 ஆகியவற்றுக்குப் பொருள் உரைக்க வந்தவிடத்து விளக்குவர். அச்செய்யுள்கள் இவை:

**'வாழ்நாள் உலவாமுன் ஒப்புரவு ஆற்றுமின்'** - **நாலடி: 22:3**

**'உடம்பிற்கே ஒப்புரவு செய்தொழுகாது'** - **நாலடி: 37:3**

**'செல்லாமை செவ்வன்சேர் நிற்பினும் ஒப்புரவிற்கு**
**ஒல்கார் குடிப்பிறந் தார்'** - **நாலடி:148:3-4**

ஆனால், அந்தக் காலத்து, உலகத்துப் பொதுமைச் சமநிலையுணர்வு நன்கு சிந்திக்கப் பெறாதிருந்த பொழுதில், 'ஒப்புரவு' என்னும் தமிழியற் பண்பாட்டுச் சொல்லுக்கு அந்த அளவு மட்டில்தான் அவர்களால் பொருள் காண முடிந்திருந்தது போலும்.

ஆயினும், 'ஒப்புரவு' என்னும் 'நிகரமைச் சமநிலையுணர்வு' (Socialistic Communism) நூலாசிரியர் காலத்திலேயே, அற்றைத் தமிழ்ச் சான்றோர்களால் நன்கு உணரப்பெற்றிருந்தமையைக் கழக நூல்கள் கட்டியங் கூறி உரைதருகின்றன.

**'உளவரை தூக்காத ஒப்புர வாண்மை**
**வளவரை வல்லைக் கெடும்'** - **480**

என்னுமிடத்தில் நூலாசிரியப் பெருமான், 'ஒப்புர'வை, 'ஒப்புரவாண்மை' என்றே கூறுதல் கவனிக்கத் தக்கது. ஒப்புணர்வுடன் அதன் ஆளுமைச் செயலுணர்வையும் சேர்த்தே, 'ஒப்புரவாண்மை' என்று புதிய சொல்லுருவாக்கத்தைத் தருகிறார். இச்சொல் தமிழிலக்கியங்களுள் வேறெவ்விடத்திலும் எவ்வாசிரியராலும் கூறப்பெறவில்லை. திருக்குறளிலும் இவ்வொரே இடத்தில்தான் இச்சொல் கூறப்பெற்றுள்ளது.

இது, 'குமுகாய நிகரமைச் சமநிலையுணர்வை உருவப் படுத்தும் திறத்தைக் குறித்த சொல் வடிவம்' என்க.(Faculty to mould a Socialistic Communism).

மேலும், நூலாசிரியர் 'சான்றாண்மை' அதிகாரத்தின்கண், சான்றாண்மைக்கு அடிப்படையான பண்பிலக்கணத்தைக் கூறுகையில்,

**'அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையோடு**
**ஐந்துசால்பு ஊன்றிய தூண்'** - **983**

என்று கட்டுரைத்துக் கூறுதலும் காண்க. மாந்தச் சமநிலையுணர்வாகிய ஒப்புரவுணர்வு இல்லாத சான்றாண்மை அவர்க்கு நிறைவு தருவதில்லை, போலும்.

இனி, அற்றை நூலாசிரியர்களும் இப்பொதுமைச் சமநிலையுணர்வை மக்களிடை அறிவுறுத்தியிருத்தலும் நன்கு சிந்திக்கத்தக்கது.

**'ஒப்புரவு ஒழுகு'** - **ஆத்திச்சூடி: 10**

**'யார்கண்ணும் ஒப்புரவி னால்அறிக சான்றாண்மை'** - **நான்மணி:77:3**

**'ஒப்புரவு ஆற்ற அறிதல்'** - **ஆசாரக்: 1:3**

**'ஒப்புரவு அறிதலின் தகுவரவு இல்லை'** - **முதுமொழிக்: 53**

**'ஈட்டிய ஒண்பொருள் இல்லெனினும் ஒப்புரவு**
**ஆற்றும் குடிப்பிறந்த சான்றவன்'** - **பழமொழி : 217:1-2**

**'தாமே ஒப்புரவு அறியின்'** - **நற் : 220 : 8**

இவை அக்காலத்துக் கால்கொண்ட பொதுநிலைச் சிந்தனைகள். இவற்றின்வழி, பொருள்வழி ஒப்புரவே அவர்கள் முதலிற் கண்டது என்று நாம் துணிந்து கூறலாம்.

இவ்வுணர்வைப் பரிமேலழகர்,

'ஒப்புரவறிதல்' - அஃதாவது, உலக நடையினை அறிந்து செய்தல். உலகநடை வேதநடைபோல அறநூல்களுள் கூறப்படுவதன்றித் தாமே அறிந்து செய்யும் தன்மைத்தாகலின், 'ஒப்புரவறிதல்' என்றார். மேல் மன, மொழி, மெய்களால் தவிரத்தகுவன கூறினார். இனிச் செய்யத் தகுவனவற்றுள், எஞ்சி நின்றன கூறுகின்றாராகலின், 'தீவினையச்சத்தின் பின் வைக்கப் பட்டது' என்று தம் முன்னுரையில், வேதநடையில் இவ்வுணர்வு கூறப்பெற்றுள்ளது போல், வேதப்படுத்தியும், அது விளங்காததாகலின், 'தாமே அறிந்து செய்யும் தன்மைத்தாகலின்' என்று கொச்சைப் படுத்தியும் கூறியதுடன் நில்லாது.

- அடுத்துவரும் 'ஈகை' அதிகாரத்து முன்னுரையில்,

'அஃதாவது, வறியராய் ஏற்றார்க்கும் ஆற்றாது கொடுத்தல்'. இது (ஈகை) மறுமை நோக்கியது ஆகலின், 'இம்மை நோக்கிய 'ஒப்புரவறித'லின் பின் வைக்கப்பட்டது' என்றும் கூறி, இவ் வொப்புரவறிதல் உணர்வை ஆரியப் படுத்திக் கூறுவார். இஃது அவரின் வேதவியற் புரட்டுகளில் ஒன்று என்க.

இவ்வுரைக்கு விளக்கவுரை கூறிய, ஆரிய அடிவழிப் புத்துரைகாரர் கோ. வடிவேலு (1904) அவர்கள்,

'ஒப்புரவறிதற்குப் பயன் இம்மையிற் புகழ். இஃது 'ஈகை' அதிகாரத்தின் அவதாரிகையில் 'இம்மை நோக்கிய 'ஒப்புரவறித'லின் பின் வைக்கப் பட்டது' என்றும், இவ்வதிகாரத்தின் பத்தாம் செய்யுளின் விசேடவுரையில், 'புகழ் பயத்தல் நோக்கி' என்றும், கூறியிருத்தலினாலும் விளங்கும்' என்று விதந்து கூறினார்.

இஃது, ஆரியவியற் சேற்றில் அழுந்தக் கால் ஆழப் புதைத்துக் கொண்டு, அதனின்று மீட்டடிவைக்க அறியாத உணர்வினால் எழுதப் பெற்றதாகலின், அதனை விடுக்க.

மற்று, மொழியாய்வறிஞர் பாவாணரும், தம் 'தமிழ்மரபுரை'யுள்,

'ஒப்புரவறிதல் - 'அஃதாவது, இல்லறத்தாருட் பெருஞ்செல்வரானவர் செல்வருள் உயர்ந்தோரான வள்ளல்களைப் பின்பற்றி யொழுகுதலின் கண், 'வளவனாயினும் அளவறிந்தளித்துண்' என்ற நெறிமுறைப்படி தத்தம் அளவறிந்து அதற்கேற்ப நடந்து கொள்ளுதல். உயர்ந்தோரான வள்ளல்களை யொத்தொழுகுதலும் அவரவர் செல்வத்தின் அளவறிதலும் பற்றி ஒப்புரவறிதல் எனப்பட்டது. இது பெருஞ்செல்வர்க்குரிய உலக நடையாம்' என்று உணராது கூறினார், என்க.

திருவள்ளுவப் பேராசானின் தமிழியல் திருவுளப் பாங்கில், வெளிப்பட்டுப் போதந்த 'உலகப் பொதுமைச் சமநிலை உணர்வு இஃது' என்பது, இவ்வதிகாரத்துள் வரும் குறட்பாக் கூற்றுகளினாலும் நன்கு உணரப் பெறலாகும் என்க.

இனி, ஒப்புரவறிதல் என்பது 'இம்மைப் புகழ் கருதும் தாளாண்மை உணர்வு' மட்டும் அன்று. அஃது, ஈகை அதிகாரத்தின்கண் வெளிப்பட்டு நிற்பதை, அங்குக் காணலாகும். அதற்கு 'ஈகை'யதிகாரத்தையடுத்துப் 'புகழ்'அதிகாரம் வைக்கப் பெற்றிருப்பதே பெரும் அகச்சான்று ஆகும். எனவே, அது குன்றக் கூறலும், மயங்கக் கூறலும் ஆகும்.

அதுவேபோல், 'தத்தம் அளவறிந்து அதற்கேற்ப நடந்து கொள்ளுதலோ,' இது பெருஞ்செல்வர்க்குரிய உலக நடையாம் என்பதோ அன்று. அதுவும் மாறுகொளக் கூறலும், மனங்கோள் இன்மையுமாகும்.

எனவே, ஒப்புரவறிதல் என்பது, வெறும் ஈகையுணர்வு மட்டுமன்று. தன்னைப் பிறரொடு ஒப்பவைத்துக் கண்டு தம்மினும் எளியார்தம் பொருளியல் தாழ்வுநிலையைச் சமநிலைப் படுத்திப் பொதுமைநிலை நிரவவும் நிறுவவும் வழிகாண்பது, ஆகும்.

இதனை, இவ்வதிகாரத்து வரும் முதற்குறளிலேயே ஓர் உவமை வழியான் புலப்படுத்திக் கூறுவது, ஆண்டுக் காணத்தக்கது.

இஃது, 'இலன் என்று தீயவை செய்யற்க' (205) என்றும், 'தன்னைத்தான் காதலனாயின் எனைத்தொன்றும் துன்னற்க தீவினைப் பால்' (209) என்றும், முன்னர் 'தீவினையச்ச' அதிகாரத்துள், 'பொருள்நிலைத் தாழ்வே தீவினைகளுக்கு அடிப்படை' என்று, முற்றவுணர்ந்த மெய்யுணர்வினால் கூறியதை அடுத்து, இப் பொருள்வழிச் சிந்தனையில்

*மேலோங்கிக் கூறியதாகலின், அதன்பின் வைக்கப்பெற்றது, என்க.*

**உகக. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு**
**என்ஆற்றும் கொல்லோ உலகு. - 211**

பொருள்கோள் முறை:

***உலகு மாரிமாட்டு என் ஆற்றும் கொல்லோ***
***கடப்பாடு கைம்மாறு வேண்டா.***

பொழிப்புரை: *இவ்வுலகமானது (தன் அனைத்து ஆக்கங்களுக்கும் தண்ணீர் வழங்குகின்ற) மழைமேகங்களுக்கு என்ன நன்றியைத் திருப்பிச் செய்கிறது? ஒன்றும் செய்வதில்லை. அதுபோலவே, (இங்கு மேனிலையில் உள்ளவர்கள், அவ்வாறில்லாத ஏழை, எளிய மக்களுக்குச் செய்யும்) பொதுமை நலக் கடமையறங்களும் கைம்மாறு கருதப்பட வேண்டாதவை.*

சில விளக்கக் குறிப்புகள்:

1) *இச் செய்யுளின்கண்; நூலாசிரியர், பொதுமக்களுக்குச் செய்யவேண்டிய பொதுமைநலக்கடமையறங்களுக்கு, ஓர் இயற்கை உவமையைக் கூறி, இங்கு ஏற்கனவே நல்லநிலையில் வாழும் மேனிலை மக்களும் அவ்வாறு வாழ வாய்ப்பில்லாத ஏழை எளியவர்களுக்கு உதவி வாழுகின்ற கடமையை உணர்த்துகின்றார். அவர் காட்டும் உவமையாகிய மழையின் செயற்பொருள் மிகவும் உன்னிப்பாகக் கருதி உணரத்தக்கவையாம், என்க.*

2) ***உலகு மாரிமாட்டு என் ஆற்றும் ?:*** *இவ்வுலகமானது, (தன் அனைத்து ஆக்கங்களுக்கும் தண்ணீர் வழங்குகின்ற) மழை மேகங்களுக்கு என்ன நன்றியைத் திருப்பிச் செய்கிறது? ஒன்றும் செய்வதில்லை என்க.*

*உலகு : இதிலுள்ள மக்களைக் குறித்தது.*

*மாரி : மழை. இச்சொல் தொடக்கக் காலத்தில், கோடை மழையை மட்டும் குறித்தது. பின்னர் இது பொதுவாக எல்லா மழையையும் குறித்த சொல்லாயிற்று.*

***'காலொடு பட்ட மாரி' - நற் : 2 : 9***

*(காற்றொடு கலந்து பெய்த கோடைமழை)*

***'உரம் சுடும் கூர் எரி ஆள்வினை மாரியின் அவியா' -அகம்:279:7-1***

*- உரம் (அ) வரம்*

- இனி, மழை கைம்மாறு கருதாது உலகு புரக்கப் பெய்தலின், அது, தண்ணளிக்குச் சிறந்த எடுத்துக்காட்டு ஆகியது.

- உலக மக்களிடை எவ்வகை வேறுபாடும், ஏற்றத் தாழ்வும் கருதாமல், பொதுமை நல அறஞ்செய்வதற்குச் சான்றாக, மழையே தலையாய எடுத்துக்காட்டாகும்.

- பிறர்க்கும் உதவுதல் தன்மையே மக்களிடைப் பொதுமை நலச் சிந்தனைகளை வளர்க்கும்.

- மழைபோலும் ஈதல் தன்மை கழகக்கால இலக்கியங்களுள் பெரிதும் பாராட்டப் பெற்றுள்ளது.

- அதுவும் கைம்மாறு கருதாத கடப்பாடு - கடமை - என்பது மழையின் கொடையளிக்கு மிகவும் பொருந்துவது.

- உவர் நீராகத் தேங்கியுள்ள கடல் நீரை முகந்து கொண்டு வந்து, மக்கட்குப் பயன்படு நீராக, அதன் உவர்ப்புத் தன்மையை மாற்றி, மேகங்கள், எவ்வகை வேறுபாடும் இன்றி மழையாகப் பொழியும் தன்மை, தம்மிடத்து முழுவதும் பயன்படுத்தப் பெறாமல் உள்ள பெருஞ்செல்வத்தை, அது தேவையுள்ளவர்க்கு நன்றிப் பயன் கருதாமல் கொடுக்கும் கொடையே போன்றதாகலின், அதன் தன்மையே ஒப்புரவு - மக்களின் பொதுநல அறம் - என்று போற்றத்தக்கது என்றார். அவ்வறச் செயலுக்குச் சான்றாக, நூலாசிரியர் மழையை - மாரியை - உவமையாக்கினார் என்க.

- அம்மழையின் தண்ணளித் தன்மையால் உலக உயிரினங்கள் பயன்பெறுகின்றன. ஓரறிவுயிர்முதல் ஆறறிவுயிர்வரை மழையாலேயே உயிர் வாழ்கின்றன. அதுபோல் சமநிலைகருதும் பொதுமையறம், மேனிலை மாந்தர்களாலும் கடைப்பிடிக்கத் தக்கது. இதுவே ஒப்புரவறிதலின் ஒண்பயன் என்று ஆசிரியர் இவ்வுவமையால் அதனை விளக்கினார், என்க.

- மழைதான் உலகின் அனைத்து உயிரினங்களுக்கும் அவற்றின் உயிர்வாழ்தலுக்கு இன்றியமையாதது என்பதை, ஆசிரியர் பெருமான், முன்னரே 'வான்சிறப்பு' அதிகாரத்தில் கூறியுள்ளது இங்கு நினைவு கூரத் தக்கது.

**'விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து**
**உள்நின்று உடற்றும் பசி'** - **13.**

- இக்கருத்தையே வேறுகோணத்தில் விளக்குமுகத்தான் 'பெருஞ்செல்வர்கள் வறுமை எய்துவது மழைபெய்யாது உலகம் வறண்டு போதலைப்

போன்றது' என்று கூறி, 'அவர்கள் மக்களுக்கு மழைபோலும் சமநிலை நோக்கினர்களாக உதவுதல் வேண்டும்' என்னும் கடமையை வலியுறுத்துவார். அவ்வாறு பொதுப்பயன் கருதாமல் இருந்தால் அவர்தம் செல்வம், நன்மையில்லாத பயன்படாத செல்வம் ஆகிவிடும் என்றும் குறிப்புணர்த்துவார். 'நன்றியில் செல்வம்' என்னும் அதிகாரத்தில் அவர் கூறுவதிது.

**'சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி**
**வறங்கூர்ந் தனையது உடைத்து'** - **1010**

- மாரிக்கு உள்ள சிறப்புகளிலேயே அதன் பொதுமைத் தன்மைதான் அனைத்தினும் உயர்ந்தது. பல பிரிவினராக உள்ள மக்கள் அனைவரையும், ஒரே தன்மையினராகக் கருதுவது அதன் தனிச்சிறப்பு.

**'மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ'** - **கபிலரகவல்**

என்றார் கபிலர். இதுவே பொதுமையறத்திற்கும் சமநிலை உணர்வுக்கும் அடிப்படையானது.

**'பெயற்பால் மழைபெய்யாக் கண்ணும் உலகம்**
**செயற்பால செய்யா விடினும் - கயற்புலால்**
**புன்னை கடியும் பொருகடல் தண்சேர்ப்ப**
**என்னை உலகுய்யு மாறு'** - **நாலடி : 97**

- இச்செய்யுளுக்கு உரையெழுதிய ஆசிரியர் பதுமனார், 'எல்லா உயிர்களும் உயிர்வாழ்வதற்கு மழைபெய்தல் இன்றியமையாததுபோல, வறியோர்க்குப் பொருளுள்ளோர் ஈதல் இன்றியமையாதது என்பது கருத்து' என்று கூறுதல் காண்க.

- மற்று, மாரியின் பொதுமைக் கடப்பாட்டைப் பண்டை நூலாசிரியர் பலரும் பாராட்டியுள்ளதை அறிந்து மகிழ்தல் வேண்டும்.

**'பேரியலாளர் செய்கை ஊதியம் பிடித்தும் என்னார்**
**மாரியை நோக்கிக் கைம்மாறு) இயற்றுமோ வையம் என்றான்'**
**- கம்ப. யுத்த. நாகபாச. 271**

**'வான்செய்யும் நன்றிக்கு வையகத்தோர் செய்யும்**
**கைம்மாறு உண்டேயோ'** - **திருவிளை. மாணிக்க. 86**

**'கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்...**
**எல்லா உயிர்க்கும் இல்லால் வாழ்க்கை'** - **புறம் : 203 : 1, 3**

**'மழையின்றி மாநிலத்தார்க் கில்லை'** - **நான்மணி:46:1**

**'மறந்து கடல்முகந்த கமஞ்சூல் மாமழை**

'பொறுத்தல் செல்லாது இறுத்த வண்பெயல்' - நற்: 99:6-7
'மாக்கடல் முகந்து மணிநிறத்து அருவித்
தாழ்நீர் நனந்தலை அழுந்துபடப் பாஅய்
மலைஇமைப் பதுபோல் மின்னி
சிலைவல் ஏற்றொடு செறிந்த இம்மழை' - நற்: 112 : 6-9
'வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்கால் பேகன்
கொடைமடம் படுதல் அல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே' - புறம் : 142 : 4-7
'மாரி ஈகை மறப்போர் மலையன்' - புறம் : 158 : 7
'ஓவாது ஈயும் மாரி வண்கை
கடும்பகட்டு யானை நெடுந்தேர் அஞ்சி' - குறுந் : 91 : 5-6
'ஆர்அரண் கடந்த மாரி வண்மகிழ்த்
திதலை எஃகின் சேந்தன் தந்தை' - குறுந் : 190 : 2-3
'மண்ணுடை ஞாலம் புரவுஎதிர் கொண்ட
தண்ணியல் எழிலி தலையாது மாறி
மாரி பொய்க்குவது ஆயினும்
சேரலாதன் பொய்யலன்' - பதிற்று: 18 : 9-12
'மாரி வண்மகிழ் ஓரி' - குறுந்: 265 : 7
'அடுபோர் ஆனா ஆதன் ஓரி
மாரி வண் கொடை' - புறம்: 152 : 4-5
'இரவலர் வரூஉம் அளவை அண்டிரன்
புரவுஎதிர்ந்து தொகுத்த யானைபோல
உலகம் உவப்ப ஓதரும்
வேறுபல் உருவின் ஏர்தரும் மழையே!' - நற்: 237 :7-10
'கடும்பகட்டு யானை நெடுமான் அஞ்சி
ஈர நெஞ்சமோடு இசைசேண் விளங்க
தேர்வீசு இருக்கை போல
மாரி இரீஇ மான்றன்றால் மழையே!' - நற்: 381 :7-10

3) கடப்பாடு கைம்மாறு வேண்டா : (அதுபோலவே) (இங்கு மேனிலையில் உள்ளவர்கள், அவ்வாறில்லாத ஏழை எளிய மக்களுக்குச் செய்யும்) பொதுமை நலக் கடமை அறங்களும் கைம்மாறு கருதப்பட

வேண்டாதவை.

- கடப்பாடு : கடமை அறங்களும்
- கடமைப்பாடு - கடப்பாடு.
- அருமைப்பாடு - அரும்பாடு.
- பெருமைப்பாடு - பெரும்பாடு.
- போல என்க.

'முழங்குகடல் முகந்த கமஞ்சூல் மாமழை' - நற்: 347:1

'யாண்டு பிழைப்புஅறியாது பயமழை சுரந்து
நோயில் மாந்தர்க்கு ஊழி ஆக' -பதிற்: 21:30-31

'மன்னுயிர் புரைஇய வலனேர்பு இரங்கும்
கொண்டல் தண்தளிக் கமஞ்சூல் மாமழை' -பதிற்: 24:27-28

'நரவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவைஎடுத்து
அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும்
திறம்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
குழவியைப் பார்த்துறூஉம் தாய்போல் உலகத்து
மழைசுரந்து அளித்து ஓம்பும்' - கலி: 99 :1-5.

'கடல்முகந்து கொண்ட கமஞ்சூல் மாமழை' - கலி: 43:1

'உலகுதொழில் உலந்து நாஞ்சில் துஞ்சி
மழைகால் நீங்கிய மாகவிசும்பு' -அகம்: 141: 6-7

'நீண்டுஒலி அழுவம் குறைபட முகந்துகொண்டு
ஈண்டுசெலல் கொண்மூ வேண்டுவயிற் குழீஇப்
பெருமலை யன்ன தோன்றல சூல்முதிர்
புருமுரறு கருவியொடு பெயல்கடன் இறுத்து
வளமழை மாறிய வென்றூழ்' - புறம்: 161:1-5

'ஆள்வினை மாரியின்' - அகம்: 279: 8

'உறுபஞ்சம் மூலம்தீர் மாரிபோல்' - சிறுபஞ்ச. சிறப்பு: 2-3

'மழைவேண்டு புலத்து மாரி நிற்ப
நோயொடு பசிஇகந்து ஒரீஇ' - பதிற்றுப்: 13:26-27

- இனி மாரியின் பொதுமைத் தன்மை போலவே பொருள் மிகு செல்வரும் பொதுவறம் கருதி இல்லோர்க்கும் நல்லோர்க்கும் அளிசெய்து உதவுதலே சிறந்தது என்னும் கருத்து மிக்கிருந்த காலம்

அது.

'பலநாள் அறத்தொடு வருந்திய அல்குதொழில் கொளீஇய
பழமழை பொழிந்த புதுநீர் அவல
நாநவில் பல்கிளை கறங்க' - நற்: 42: 1-4

'உயர்ந்த
மழையினும் பெரும்பயம் பொழிதி; அதனால்
பசியுடை ஒக்கலை ஒரீஇய
இசைமேந் தோன்றல் !' - பதிற்றுப்: 64:17-20

'இரப்போர்க்கு
இழையணி நெடுந்தேர் களிறொடு என்றும்
மழைசுரந் தன்ன ஈகை' - அகம்: 238:11-13

'நச்சியார்க்கு ஈதலும் ...
. . . . . . . . . . . போல்
எச்சாகும் மின்னும் மழை' - கார்: 7: 1-4

'செப்பம் உடையார் மழையனையர்' - திரிகடு : 83 : 3

'மெய்யா உணரின் பிறர்பிறர்க்குச் செய்வதுஎன் ?'
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
செய்யார் எனினும் தமர்செய்வர்; பெய்யுமாம்
பெய்யாது எனினும் மழை' - பழமொழி: 109:1,3,4

'சேறுசெய் மாரியின் அளிக்கும் நின்
சாறு படு திரு' - பதிற்று:65:16,17.

'நின் சுரத்தலும் வண்மையும் மாரி உள' - பரி: 4:27

'மாரி யன்ன வண்மையில் சொரிந்து' - புறம் : 397: 16

'சீரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்றாய்
மாரிபோல் மாண்ட பயத்ததாம்' - நாலடி : 232: 1-2

'பிறர்க்குதவி செய்வார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி ஆக்குபவர் பேறுஆம் - பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடல்நீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு' - நன்னெறி : 4

இனி மாரிபோல் இல்லார்க்கு ஈந்து மகிழ்ந்த செல்வர்கள், சிற்றரசர்கள், வள்ளல்கள் ஆகியோரை அற்றைப் புலவோர்கள் மாரியோடு இணைவைத்துப் பண்பு பாராட்டிய பாக்கள் பற்பல. அவற்றுள்

எடுத்துக் காட்டாக ஒருசில கண்டு மகிழ்க.

**'பாரி ஒருவனும் அல்லன்**
**மாரியும் உண்டு ஈண்டு உலகுபுரப் பதுவே'** - புறம்:, 107:3-4

**'மாரிஒன்று இன்றி வறந்திருந்த காலத்தும்**
**பாரி மடமகள் பாண்மகற்கு நீர்உலையுள்**
**பொன்திறந்து கொண்டு புகாவாக நல்கினாள்'** -பழமொழி: 171:1-3

**'மாரி யன்ன வண்மைத்**
**தேர்வேள் ஆயைக் காணிய சென்மே!** - புறம்:133:6-7

- கைம்மாறு - செய்ந்நன்றிக்கு நன்றி செய்தல் - எதிர் நன்றி.

- பிறர்பால் நன்றி எதிர்பாராத பொதுவறம் கருதுதல் வேண்டும் என்றார்.

**'கைம்மாறு உகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தி**
**தம்மால் இயலுதவி தாம்செய்வர் - அம்மா!**
**முளைக்கும் எயிறு முதிர்சுவை நாவிற்கு**
**விளைக்கும் வலியனதாம் சென்று'** - நன்னெறி : 27

கொல்; ஓ - அசைகள்

4) இஃது ஒப்புரவறிதல் உணர்வுக்கு விளக்கமாக அமைதலின் அதிகாரத்து முன்வைத்துக் கூறினார் என்க.

## உகஉ. தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தல் பொருட்டு - 212

பொருள்கோள் முறை: **இயல்பு**

**பொழிப்புரை** : பொதுமை நலம் கருதும் ஓர் அறவாணனுக்கு அவன் செய்கின்ற தாழாத முயற்சி ஈட்டித் தந்த பொருள்யாவும், அவன் தகுந்தவர்களுக்கு அவற்றைக் கொடுத்து உதவுதல் பொருட்டேயாம் என்க.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **தாள்ஆற்றித் தந்த பொருள் எல்லாம்:** பொதுமை நலம் கருதும் ஓர் அறவாணனுக்கு அவன் செய்கின்ற தாழாத முயற்சி ஈட்டித்தந்த பொருள்யாவும்,

- ' பொதுமை நலம் கருதும் ஓர் அறவாணனுக்கு' என்னும் எழுவாய்,

அதிகாரத்தான் வருவிக்கப் பெற்றது.

- தாள் ஆற்றித் தந்த : அவன் செய்கின்ற தாழாத முயற்சி ஈட்டித்தந்த.

- தாள் - முயற்சி, தாழாத முயற்சி.

**- இதைத் தாளாண்மை என்றும் குறிப்பிடுவார். - (613, 614)**

**'தாளுளாள் தாமரையினாள்' - (617)**

**'தாள் தந்தது' - (1065)**

'தாள்' காலடியைக் குறிக்கும் இச்சொல் (2, 7, 8), அக் கால்கள் இங்கும் அங்கும் சென்று செய்கின்ற முயற்சியையும் குறித்த தென்க. இது சினையாகு பெயர். முதலில் உழைப்பைக் குறித்தது. பின் உழைப்புக்கான முயற்சியையும் குறித்தது.

ஆற்றித் தருதல் : ஈட்டித் தருதல். உழைக்கின்ற உழைப்பு. முயற்சி - ஈட்டித் தருவது.

- பொருள் எல்லாம் : செல்வத்தின் வழியின எல்லாம். பொருள் சொத்து முதலிய உடைமைகள் அனைத்தையும் குறித்தது.

- இதன்வழி, பொதுமை நலம் கருதும் ஒருவன், முயற்சி செய்து பொருளீட்டுதல் வேண்டும் என்று வலியுறுத்தினார்.

- தான் ஈட்டிய பொருளிலேயே ஒருவர்க்கு உதவுதல் வேண்டும் என்பது, குறிப்பு.

- மற்று தான் முயற்சி செய்யாமல் வந்த பொருளைப் பிறர்க்குக் கொடுத்தல் அத்துணைச் சிறப்பின்றாம், என்றார்.

- அது, 'கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையார்க்கு உடைத்தல்' என்னும் நாட்டுப் பழமொழிப் படி சிறப்பிலதாம் என்றார். 'ஊரான் வீட்டு நெய்யே தன் பெண்டாட்டி கையே' என்னும் பழமொழிக்கேற்பவும், அக்கொடையில் பொருள் வருத்தம் தெரியாதென்க.

**'ஆற்றின் வருந்தா வருத்தம்' - (468)**

என்பார், அதனை.

- மேலும், தான் தன் முயற்சியால் ஈட்டாது வந்த பொருள், ஆரவாரக் கொடைக்கே பயன்படுவதன்றித் தக்கார்க்கு அது போற்றி ஒழுகப்படாது என்றவாறு, என்னை?

**'ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்**
**போற்றி வழங்கும் நெறி' - (477)**

- 'அத்துடன், மேலும் மேலும் முயற்சியில் ஈடுபடாதவன் செல்வம், தேய்ந்து கொண்டே போகும் தரத்தது ஆகலின் அவன் தன் பொதுவுணர்வை, ஒப்புரவறிதல் உணர்வைச் செயற்படுத்த வாய்ப்பில்லாமற் போகுமன்றோ? அதனாலும் தாளாற்றுதல் தேவை என்றார், என்க.

- இக் கருத்துகளைப் பழந்தமிழ்ச் சான்றோரும் தம் நூல்கள் நெடுகப் பரக்கக் கூறுவதும் காண்க.

'தாள்படு செல்வம் காண்தொறும் அருள' - புறம்: 161:15

'தாளாண்மை கூறும் பொதுவன் நமக்கு, ஒருநாள்
கேளாளன் ஆகாமை இல்லை; அவற்கண்டு
வேளாண்மை செய்தன கண்' - கலி: 101 : 44-46

'தாளாண்மை நீரும் அமிழ்தாய் விடும்' - நாலடி: 200:4

'தானே மடிந்திராத் தாளாண்மை முன்னினிதே' - இனி. நாற்: 33:2

'பெருந்தகு தாளாண்மைக்கு ஏற்ப
அரும்பொருள் ஆகும்' - ஐந்.எழு: 29:3

'எவ்வம் துணையாப் பொருள் முடிக்கும் தாளாண்மை' - பழமொழி:63:1

'. . . . . . . . . . . . . . தாளாண்மை
தாழ்க்கும் மடிகோள் இலராய் வருந்தாதார்
வாழ்க்கை திருந்துதல் இன்று' - பழமொழி:175:3-4

'தாளாளர்க்(கு) உண்டோ தவறு' - நாலடி: 191 :4

'தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்' - திரிகடு.12:1

'கேளிர்கள் நெஞ்சு அழுங்கக் கெழுவுற்ற செல்வங்கள்
தாளிலான் குடியேபோல் தமியவே தேயுமால்' - கலி: 149: 8-9

'தொடங்குவினை தவிரா அசைவில் நோன்தாள்' - அகம்: 29 : 1

'பரிசிலர்க்கு அருங்கலம் நல்கவும் குரிசில்
வலிய வாகுநின் தாள்தோய் தடக்கை' -புறம்: 14:10-11

'தாளில் தந்து தம்புகழ் நிறீஇ' - புறம்: 18:3

'வாளில் வாழ்நர் தாள்வலம் வாழ்த்த
இரவல் மாக்கள் ஈகை நுவல' - புறம்: 24 : 29-30

'தாள்தோய் தடக்கைத் தகைமாண் வழுதி
வல்லை மன்ற நீநயந் தளித்தல்' - புறம்: 59: 2-3

'அசைவில் நோன்தாள் நசைவளன்' - புறம்: 148 : 2

'உண்டால் அம்மஇவ் வுலகம்

. . . . . . . . . . . . . . . . . .

தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே' -புறம்: 182:1,8-9
'மண்டுஅமர் அட்ட மதனுடை நோன்தாள்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

நின்பெருஞ் செல்வம் யார்க்குஎஞ் சுவையே' - புறம்: 213:1,16
'பாவடி யானை பரிசிலர்க்கு அருகாச்
சீர்கெழு நோன்தாள் அகுதை' - புறம்: 233:2-3
'ஈனமாய் இல்லிருந்து இன்றி விளியினும்
மானம் தலைவருவ செய்பவோ - யானை
வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்தாள்
அரிமா மதுவை யவர்' - நாலடி: 198
('முயற்சிவலி இல்லாதார் ஈனத்தொழிலுக்கு
உடன்படுவர்' - உரையாசிரியர் தருமர்.)
'உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்' - திருமுருகு:8:4
'பெரிதணியர் ஆயினும் பீடிலார் செல்வம்
கருதும் கடப்பாட்ட தன்று' - நாலடி: 261:3-4
'பல்வகையும், தாளினால் தந்த விழுநிதியும்
.... காப்பு இகழல் ஆகாப் பொருள்' - திரிகடு: 47:2,4
'தம்தாள் நிழற்கீழ்க் கொள்பவே
கொல்லையில் கூழ்மரமே போன்று' - பழமொழி:272:3-4

2) **தக்கார்க்கு வேளாண்மை செய்தல் பொருட்டு:** தகுந்தவர்களுக்கு அவற்றைக் கொடுத்து உதவுதல் பொருட்டேயாம் என்க.

தக்கார் - தகுந்தவர், தகுதியுடையவர். *(114, 446, 731, 1051)*

- வேளாண்மைக்குத் தக்கவர் என்பது பொருள்.

- உடல் உறுப்பு அற்ற பிறவியர், ஏழையர், அறிவர், பொதுநலம் கருதுபவர், கல்வியர், ஏதிலியர், துணையில் பெண்டிர் களைகண் அற்ற சிறுவர் முதலியோர், என்க.

**'தக்கார்க்கே ஈவார்; தகார்க்களிப்பார் இல்லென்று**
**மிக்கார்க் குதவார் விழுமியோர் - எக்காலும்**

**நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி**
**புல்லுக் கிறைப்பரோ போய்.'** **- நன்னெறி: 36**

- என்றார் பிறரும்.

வேளாண்மை : உற்றுழி உதவுதல்.

- (இதன் விரிவான பொருளை 81-ஆம் குறள் விளக்கவுரையில் காண்க.)

- பிறர்க்குப் பொதுமையறம் கருதி உதவுதல் தன்மை தாளாண்மை முயற்சியின் பாற்பட்டது என்பதை நூலாசிரியர் மிகவும் வலியுறுத்திக் கூறுவார்.

- இதே பொருளில் அவர்முன்னரே

**'இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தல் பொருட்டு'** **- (81)**

என்று கூறிய கருத்தும், இத்துடன் ஒப்பவைத்துக் கருதத் தக்கது, என்க.

- அத்துடன், 'ஆள்வினை உடைமை' அதிகாரத்துள், அவர் கூறவரும்,

**'தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே**
**வேளாண்மை என்னும் செருக்கு'** **- (613)**

**'தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை**
**வாளாண்மை போலக் கெடும்'** **- (614)**

- இரு கருத்துகளிலும் உலகப்பொதுமை அறம் கருதுவான் தன்முயற்சியும் ஊக்கமும் உடையவனாக இருத்தல் வேண்டும்;

- தன் முயற்சியால் அவர் பொருள்திரட்டி அதைக் கொண்டுதான் தக்கார்க்கு உதவுதல் வேண்டும்;

- அப்பொழுதுதான் அவ்வறம் தொய்வின்றித் தொடர்ந்து நடக்கவும் முடியும்; பெருமையும் பெறமுடியும்;

- அதுவன்றிப் பிறரிடம் பொருள் தண்டியோ, வேறு தவறான வழிகளில் பொருளை ஈட்டியோ, பொதுநலம் - அறத்தொண்டு - செய்ய ஒருவன் முற்பட்டால், அவ்வூற்றம் கிடையாத விடத்து அத்தொண்டில் சோர்வும், இழுக்கும் ஏற்படும் என்பதை ஆசிரியர் நுண்மையாக உணர்த்துவர். இதனை,

**'நல்லாறு எனினும் கொளல் தீது; மேலுலகம்**
**இல்லெனினும் ஈதலே நன்று'** **- (222)**

- என்று அறவுணர்வின் பழுதற்ற தூய்மையை விளக்குவார்.

- அவ்வாறு, பொதுமையறம் பேணி வந்த ஒருவன், அது, தன் நலிவினால் இயையாத பொழுது, சாவதே அதனினும் நன்மை தரும் என்பார்.

**'சாதலின் இன்னாத தில்லை; இனிததூஉம்**
**ஈதல் இயையாக் கடை'** - *(230)*

என்னும் அவர் கூற்றை உய்த்து உணர்க. இதன் பொருள் விரிவை வரலாற்றுவமையுடன் ஆண்டுக் காண்க.

- இதில் வந்த 'தக்கார்க்கு' என்னும் சொல்லை 'வேளாண்மை செய்பவர்க்கு ஏற்றியுரைப்பார், பரிமேலழகர். அது பொருந்தாது. வேளாண்மை செய்யப் பெறுபவர்க்கே அது பொருந்தும் என்க, என்னை?'

**'இத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்**
**துணைத்துணை வேள்விப் பயன்'** - *(87)*

- என்று 'விருந்தோம்பல்' அதிகாரத்தும்

**'உதவி வரைத்தன்று உதவி உதவி**
**செயப்பட்டார் சால்பின் வரைத்து'** - *(105)*

- என்று 'செய்ந்நன்றி' அதிகாரத்தும் ஆசிரியர் கூறும் கருத்துகள், உதவி பெறுவாரை நோக்கியே கூறப்பெற்றுள்ளதும்,

**'ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்**
**போற்றி வழங்கும் நெறி'** - *(477)*

- என்று 'வலியறிதல்' அதிகாரத்துள் 'ஆற்றின்' என்னும் சொல்லால் பெறுவார் தம் துறையும் தகுதியும் பெறுவார்க்கே கூறுவதும், உய்த்துணர்ந்து அதன் உண்மை காண்க.

3) இதில், கடப்பாடு செய்பவர்க்குள்ள முயற்சியும், செய்யப்படு பவர்க்குள்ள தகுதியும் கூறப்பெற்றன வாகலின், முன்னதன் பின்னர் இஃது அடைவு கொண்டது, என்க.

**உகரு. புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே**
**ஒப்புரவின் நல்ல பிற.** **- 213**

**பொருள்கோள் முறை:**

**ஒப்புரவின் நல்ல பிற**
**புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல் அரிதே.**

**பொழிப்புரை:** *ஒப்புரவு என்னும் பொதுமையறத்தைவிட நன்மை தரும் பிற செயல்களைத் தேவருலகம் என்று கூறப்படுவதிலும், இவ்வுலகத்தும் பெறுவது இயலாது.*

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **ஒப்புரவின் நல்ல பிற** : ஒப்புரவு என்னும் பொதுமை அறத்தைவிட நன்மை தரும் பிற செயல்களை.

ஒப்புரவின் - ஒப்புரவு என்னும் பொதுமை அறத்தை விட.

நல்ல பிற : நன்மை தரும் பிற செயல்களை.

- 'பிற' என்பதைப் பாவாணர் அசைநிலை என்றது பொருந்தாது.

அது பொருள் தருவதாகலின்.

- இவ்வுலகின் பற்பல அறச்செயல்களில் சமநிலை கருதும் பொதுமை அறமே சிறந்தது என்பதை ஆசிரியர் இக்குறளில் மிக்கு வலியுறுத்தியது உற்று நோக்கத் தக்கது. அதுவே அனைத்தினும் நன்மை தருவது. மக்களின், பொருளியல் வேறுபாடுகளைத் தவிர்க்க உதவுவது. இருப்பவர், இல்லாதவர் என்னும் ஏற்றத் தாழ்வைக் களைவது.

- பொருளியல் வேறுபாடு களையப்பெறின், பிற அனைத்து வேறுபாடுகளும் கால் கொள்ளாவாம் என்க.

2) **புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல் அரிதே** : தேவருலகம் என்று கூறப்படுவதிலும், இவ்வுலகத்தும் பெறுவது இயலாது.

- புத்தேள் உலகத்தும் : தேவருலகம் என்று கூறப்படுவதிலும்,

- 'புத்தேள் உலகம்' என்பது ஒரு கற்பனைக் கருத்தே யன்றி உண்மை யன்று. அஃது ஆரியச் சார்பானது.

- அவ்வாறான ஒரு கற்பனையை அக்காலத்து மக்கள் கொண்டிருந்ததால், அதனை ஆசிரியரும் குறிப்பிட்டுக் கூறவேண்டியிருந்ததென்க.

**'நல்லாறு எனினும் கொளல்மீது மேலுலகம்**
**இல்லெனினும் ஈதலே நன்று'** - ***(222)***

- எனும் குறளில், ஈதல் அறம் செய்பவர்க்கு, மேலுலகம் என்று கூறப்பெறும் அத்தேவருலகம் இல்லை என்றாலும், அவ் வீதலைச்செய்து, கடமை ஆற்றுக என்று கூறுவதிலிருந்தே, அவ்வுலகத்தைப் பற்றியும், அங்குக் கிடைக்கும் நன்மை பற்றியும் அவர் கவலைப் படவில்லை என்றும் மக்களும் அது பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை என்று கூறினார் என்றும் அஃது, அவ்வாறு இருப்பதாகக் கருதினும், அங்கும்

கிடைக்கும் நன்மைகளைவிட, இவ்வுலகத்துச் செய்யும் ஈதல் அறத்தாலேயே, மக்களை நலம்பெறச் செய்தல் இயலும் என்று அவர் கருத்துக் கொண்டிருந்தார் என்றும், உய்த்துணர முடிகிறது, என்க.

- மற்று, புத்தேள் உலகம் பற்றிய பிற விளக்கங்களைக் குறள் 58-இன் உரை விளக்கத்துள் கண்டு கொள்க.

- பெறல் அரிது : பெறுவது இயலாது. அரிது - இன்மை குறித்தது.

- பெறுவது இயலாது என்பதை முதலில், புத்தேளிர் உலகத்துக் குறித்தது என்னெனில், காணா உலகக் கற்பனை நலன்கள், உண்மை உலகத் துன்பங்களை நோக்கப் பெரிதும் உவகைக்கும் வேட்கைக்கும் அவாவுதலுக்கும் உரியவாகையால், அவை மெய்யன்று, பொய்யாம் எனக் காட்டற்கென்க. மேலும் ஈத்துவக்கும் இன்பம் இல்லாத அவ்வுலகம் பெருமைக்குரியதன்று என்னும் குறிப்புமாம்.

- அடுத்து, ஈண்டும் அஃதாவது இவ்வுலகத்தும் பெறலரிது என்றது, பிறபிற செயல்முயற்சிகளெல்லாம், பொதுமையறம் கருதாது தந்நலம் சான்றவையாகவே இருப்பனவாகலான் என்க. என்னை?

- ஈதல் இன்பமே இன்பம் என்பது ஆசிரியர் கருத்தாகலின்.

**'ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை**
**வைத்திழக்கும் வன்கண் அவர்'** - **228**

**'இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்**
**தான்கண் டனைத்துஇவ் வுலகு'** - **387**

**'சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்**
**பெற்றத்தால் பெற்ற பயன்'** - **524**

**'கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய**
**கோடிஉண் டாயினும் இல்'** - **1005**

**'ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்கொன்(று)**
**ஈதல் இயல்பிலா தான்'** - **1006**

**'அற்றார்க்கொன்(று) ஆற்றாதான் செல்வம் மிகநலம்**
**பெற்றாள் தமியள்மூத் தற்று'** - **1007**

**'நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்**
**நச்சு மரம்பழுத் தற்று'** - **1008**

- இனி, செல்வத்தைத் தொகுத்து வைத்துக் கொண்டு பிறர்க்கு ஈயாத கயவரிடம் அடித்துப் பிடுங்குதலையும், உளவுபோல் ஓரிடத்துக் கூறுவர், ஆசிரியர்.

**'ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்**

**கூன்கையர் அல்லா தவர்க்கு' - 1077**

3) இக்குறளால், மக்களைப் பொருள்நிலையால் சமநிலைப் படுத்தும் ஒப்புரவுக் கொடையே இவ்வுலகத்து அனைத்துச் செயல்களிலும் இன்பம் உடையது; உயர்ந்தது; சீரியது - என்பது ஆசிரியர் கருத்தாதல் காண்க.

- அவர் காலத்திலிருந்து நிலவுடைமைக் குமுகாயமும் அரசுரிமை ஆட்சியும் ஆகலின், அவற்றுக் கேற்றவாறு பொருளுடைமை கொண்டவர்கள் பொதுமை உணர்வினைத் தங்கள் அளவில் தாங்களே விரும்பி மேற்கொண்டு, தங்கள் செல்வங்களைப் பிறர்க்கும் பகிர்ந்து அல்லது கொடையாகக் கொடுத்து, இல்லாமையை நிரவல் செய்தல் வேண்டுமென்று ஆசிரியர் ஓர் அறவுணர்வாகக் கூறும் உணர்வே 'ஒப்புரவறிதல்' உணர்வாகும் என்பதை நன்குணர்ந்து கொள்க.

அவர் வாழ்ந்திருந்த காலத்து, இதனினும் மேலாக ஓர் அறநூலாசிரியர் சிந்தித்தல் இயலாததாம் என்க. செல்வம் பெறுதலும் அஃதில்லாததும், தலைவிதிக் கொள்கையாகக் கருதுகின்ற, ஆரியரின் பிறவிக் கோட்பாடு பரவிவந்து கொண்டிருந்த அக்காலத்து, பொருட்சமநிலையை நூலாசிரியர் இந்த அளவில் சிந்தித்ததே பெருமையுடைய தென்க. ஆரியரின் விதியியற் கோட்பாட்டின் படியும், இம்மை மறுமைக் கொள்கையின்படியும், இருப்பவர் இல்லாதவர்களுக்குக் கொடுக்கும் 'தர்ம'வியல் கருத்து, (தமிழியலின் 'ஈகை'யியல் வேறு, ஆரியரின் 'தர்ம'வியல் - என்பதை 'அறன்வலியுறுத்தல்' அதிகாரத்தில் கொடுக்கப் பெற்ற விரிவான விளக்கத்துள் கண்டுகொள்க.)

புண்ணிய பாவக் கொள்கையின் அடிப்படையிலேயே சிந்திக்கப் பெற்றது என்பதற்கு, இவ்வதிகாரத்திற் கெழுதிய முன்னுரையில், பாவாணர் எடுத்துக் காட்டிய,

**'இம்மை செய்தது மறுமைக் காமெனும்**

**அறவிலை வணிகன் ஆயலன் பிறரும்**

**சான்றோர் சென்ற நெறியென**

**ஆங்குப் பட்டன்(று) அவன்கை வண்மையே' - புறம் : 134**

- என்று ஆயை, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடிய பாடலே தக்க சான்றாம், என்க. இப் பாடலின்கண் ஆரியரின் இம்மை, மறுமை, புண்ணிய பாவக் கோட்பாடு மறுக்கப்பெற்றுத் தமிழியல் மரபின் ஈகையுணர்வே தலையெடுத்து நிற்றலும் கண்டுணர்தற்குரியது, என்க.

இஃதேயன்றி, மேலும், அப்புலவர் அதே ஆயைப் புகழ்ந்து பாடிய வேறு பாடல்களிலும் அவ்வறவுணர்வின் தமிழியல் பார்வை கூறப்பெற்றிருப்பதும் உடன் வைத்துக் கண்டு உணர்தற் குரியதாம், என்க.

**'பிறர்க்(கு) ஈவுஇன்றித் தம்வயிறு அருத்தி**
**உரைசால் ஓங்குபுகழ் ஓரீஇய**
**முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே' - புறம்:127: 3-1**
**'இவண்வந்த பெருநசையேம்**
**எமக்கீவோர் பிறர்க்கீவோர்**
**பிறர்க்கீவோர் தமக்கீவெண**
**அனைத்துரைத்தனன் யானாக' - புறம்: 136:19-22**

- இனி, அவ்வகையில், வையாவிக் கோப்பெரும் பேகனைப் பரணர் பாடிய பாடல் ஒன்றிலும், அவ்வாரிய 'தர்ம'வியல் கருத்து மறுக்கப்பட்டுத் தமிழியல் கருத்தே வலியுறுத்தப் பெறுதல் காண்க.

**'படாஅம் மஞ்ஞைக் கீத்த எங்கோ**
**கடாஅ யானைக் கலிமான் பேகன்**
**எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென**
**மறுமை நோக்கின்றோ வன்றே**
**பிறர், வறுமை நோக்கின்று அவன்கை வண்மையே' - புறம்:141:11-15**

- இனி, ஆசிரியர் பிறரும் அவ்வகையிற் கூறியவை காண்க.

**'ஏற்றகை மாற்றாமை என்னானுந் தாம்வரையா(து)**
**ஆற்றாதார்க்(கு) ஈவதாம் ஆண்கடன்' - நாலடி:98:1-2**
**'ஆற்றுதல் என்பதொன்று அலர்ந்தவர்க்கு உதவுதல்' - கலி:133:6**
**'ஆற்றுநர்க்(கு) அளிப்போர் அறவிலை பகர்வோர்;**
**ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்**
**மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை' - மணி:11:92-94**
**'வைப்பானே வள்ளல்; வழங்குவான் வாணிகன்' - சிறுபஞ்ச: 34**
**'இம்மையாற் செய்ததை இம்மையே ஆம்போலும்**
**உம்மையே ஆம்என்பார் ஓரார்காண்' - திணைமாலை:123**
**'சிறுநன்றி யின்றிவர்க்குயாம் செய்தக்கால் நாளைப்**
**பெறுநன்றி மன்னும் பெரிதென்று - உறுநன்றி**
**தானவாய்ச் செய்வதூஉம் தானம்அன் றென்பதுவே**
**வானவாம் உள்ளத் தவர்' - யா.வி.4. மேற்.**
**'ஏற்றார்கட்கு எல்லாம் இறைநிற்பத் தாமுடைய**
**மாற்றார் கொடுத்திருப்ப வள்ளண்மை' -பழமொழி : 318**
**'ஆற்றா மக்கட்கு ஆற்றுந் துணையாகி - மணி: 17:64**

'நிலந்தினக் கிடந்த நிதியமொடு அனைத்தும் - மணி: 19:35
இலம்படு புலவர் ஏற்றகைந் நிறைய
. . . . . . . . . . . . . ஈகை நல்கி' - மலைபடு: 575:80
'வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர(து) உடைத்து' - 221
'இறப்பச் சிறிதென்னாது இல்லென்னாது என்றும்
அறப்பயன் யார்மட்டும் செய்க' - நாலடி:99:1-2
'அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்றோர்
கொடுத்தார் எனப்படும் சொல்' - நாலடி:100:3-4
'தக்கோர் குணம் கொடையால்' - நல்வழி:16:1
'கற்றா தரல்போல் கரவாது அளிப்பரேல்
உற்றார் உலகத் தவர்' - நல்வழி:29:2-3
'ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆம்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர் - சோறுஇடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து' - நல்வழி: 32
'இரப்பவர் என்பெறினும் கொள்வர்; கொடுப்பவர்
தாமறிவர் நங்கொடையின் சீர்' - ஔவையார்
'முனிவினும் நல்குவர் மூதறிஞர் உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர் - நனிவிளையில்
காயினும் ஆகும் கதலிதான் எட்டிபழுத்(து)
ஆயினும் ஆமோ அற' - நன்னெறி:28

4) *இது, தக்கார்க்கு வேளாண்மை செய்யும் ஒப்புரவு உணர்வின் நன்மை கூறுவதாகலின், அடுத்து வைக்கப் பெற்றது.*

## உகச. ஒத்த(து) அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
## செத்தாருள் வைக்கப் படும். - 214

பொருள்கோள் முறை: இயல்பு

பொழிப்புரை: *(உலகமக்கள்) அனைவரது நலனுக்கும் ஒத்த பொதுமையறச் செயலை அறிந்து, அதன்படி நடப்பவனே உயிர்வாழ்கிறான் என்னும்*

பெருமைக்கு உரியவனாவான். அவ்வாறு அல்லாதவன், இறந்துபோனவனாகவே கருதப் படுவான்.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான்:** (உலகமக்கள்) அனைவரது நலனுக்கும் ஒத்த பொதுமையறச் செயலை அறிந்து, அதன்படி நடப்பவனே உயிர்வாழ்கிறான் என்னும் பெருமைக்கு உரியவனாவான்.

ஒத்தது: உலக மக்கள் அனைவரது நலனுக்கும் ஒத்த பொதுமையறச் செயலை.

அறிவான்: அறிந்து அதன்படி நடப்பவன்.

- அறிதல் - வெறும் அறிந்து கொள்ளுதலன்றி, அதன்படி நடப்பதும் ஆகிய செயலை உள்ளடக்கியது.

உயிர்வாழ்வான்: 'உயிர் வாழ்கிறான்' என்னும் பெருமைக்கு உரியவனாவான்.

- உயிரொடு வாழ்ந்தாலும், அவன் வாழ்க்கை சிறப்புடையதாக இருந்தால் மட்டுமே, அவன் 'வாழ்கிறான்' என்று சொல்லப் பெறும் பெருமைக்கு உரியவனாகிறான்.

- மற்று, உயிரொடு இருப்பது, உலவுவது உண்பது, உறங்குவது, உடலுறவு துய்ப்பது முதலியவை எல்லாம் பறவைகளுக்கும் விலங்குகளுக்கும் பொதுவாகையால் -

- அவையெல்லாம் வாழ்கின்றன' என்று சொல்லப் பெறுதலுக்கு உரியன அல்ல. எனவே, அவைபோல் இருப்பவனும் வாழ்கின்றவன் ஆகான்.

- 'கிளி வாழ்கிறது' 'மாடு வாழ்கிறது' என்று எவரும் கூறார். 'கிளி உயிரோடு இருக்கிறது' 'மாடு உயிரோடு உள்ளது' என்று மட்டுமே அவை கூறுதற்கு உரியவை, என்க.

- எனவே, உயிர் வாழ்தல் என்று சொல்வதற்கு உரியவர் மாந்தரே. இனி அவருள்ளும் அப் பறவைகள் போலும், விலங்குகள் போலுமே உயிர்த்துக் கொண்டு, அவை செய்து கொண்டிருக்கும் செயல்களைப் போலவே செய்துகொண்டிருப்பார்களாயின், அவர்களும் 'உயிரோடு இருப்பவர்கள்' என்றே சொல்லப்படுவதற்குரியவர்கள் - அவர்கள் வாழ்பவர்கள் என்று சொல்லப் பெறுதற்கு உரியர் அல்லர் - என்பார் என்க.

- இனி, இவர் போலும் 'வாழ்கின்றவர்' என்று. வேறு இடங்களிலும் ஆசிரியர் சிலரைக் குறிப்பிட்டுள்ளது, இவ்விடத்துக் கவனிக்க

வேண்டியது.

**'வசையொழிய வாழ்வாரே வாழ்வர்'** - **24**

**'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வர்'** - **1033**

- இவ்விரண்டு கூற்றினும் இருவேறு - மாந்த வாழ்க்கைக்குரிய இரண்டு சிறப்புக் கருத்துச் சொல்லப் பெறுகின்றன.

- அவை, 'மாந்தனாகப் பிறந்தவன் பிறர் இகழ்வதற்கு உரியவனாக, பிறர் வசை கூறுவதற்கு உரியவனாக இருத்தல் கூடாது. அவ்வாறு இருந்தால், அவன் வாழ்வதற்கு உரியவனல்லன். வாழ்க்கை உடையவனுமல்லன்.'

- ஏனெனில், பறவைகளும் விலங்குகளுங்கூடப் பிறர் இகழ்வதற்கு - வசை கூறுவதற்கு - உரிய நிலையில் வாழ்வதில்லை.

- ஆனால், மாந்தனாகப் பிறந்தவன் அவ்வாறிருந்தால், அவனும் வாழாதவனே. எனவே பிறர் இகழத் தக்க வகையில், பிறர் இவனை வசை கூறுவதற்குரிய முறையில் வாழாதவனே 'வாழ்பவன்' என்று சொல்லப் பெறுவான் என்பது முதல் கருத்து.

- இனி, இரண்டாவதாக, 'உழுது உண்டு வாழ்பவரே வாழ்பவர்' என்பதும் மாந்தர்க்கே உரிய சிறப்புநிலையைச் சுட்டிக் கூறுகின்ற கருத்தாம்.

- ஏனெனில், பறவைகளும், விலங்குகளும் நிலத்தை உழுது, பயிர் செய்து அவற்றை உண்டு வாழ்வதில்லை. அப்படியே கிடைப்பதைத்தான் உண்டு உயிர்த்திருக்கின்றன.

- மாந்தருள்ளும், அவ்வாறு கிடைப்பவற்றை வாங்கி உண்பவரே பெரும்பாலார்.

- ஆனால், அவ்வாறு செய்யாமல் தாமே நிலத்தை உழுது. வேளாண்மை செய்து உண்டு வாழ்பவர் மக்களுள் சிறுபான்மையர் ஆவார்.

- இவர் சிறப்பும் பெருமையும் கருதியே 'உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார்' என்று அவர்க்கு, மக்கட் பெருமை சாற்றிக் கூறுவார், என்க.

- இனி, அவர்களே போலும், உலக மக்களில் பெரும்பாலாரும் பிறரைப் பற்றிக் - குறிப்பாக ஏழை எளியவர்கள், நலிந்தவர்கள் பற்றிக் - கவலைப் படாமல் வாழ்ந்திருக்க, அவருள் சிறுபான்மையர், அதுவும் மிகச்சிலர், தம் இயல்புக்கு மீறிய மேம்பட்ட மனப்பண்பு உடையவர்களாய்ப், பொதுமையற உணர்வுடன், அவர்களைப் பற்றி அறிதலும், அவர்கட்குத் தம்மாலான உதவிகளை, மாந்தச் சமநிலை நோக்கிச் செய்வதும் உடையவர்களாக உள்ளார்கள்.

- அவர்களின் செயல் மற்றவர்களின் செயற்பாடுகளை விட மிக்குயர்ந்தனவாக விருப்பதால், அவ்வாறு உள்ளவர்களையே, ஆசிரியர் பெருமான் உயிர் வாழ்கிறார் என்று பெருமைப்படுத்திச் சிறப்பித்துக் கூறுகிறார், என்க.

- இனி, 'ஒத்தது அறிவான் வாழ்வான்' என்று கூறாது, 'உயிர் வாழ்வான்'என்று கூறியது, உயிரின் சிறப்பியல்பான சமநிலைப் பொதுமை யுணர்வை மேம்படுத்தும். அவ்வுயிர் தன்னளவில் வளர்த்துக் கொண்ட மீமிசை மாந்தத்தன்மை(Super Manism) யைச் சுட்டிக் காட்டுதற்காம் என்க.

2) **மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்:** அவ்வாறு அல்லாதவன் இறந்து போனவனாகவே கருதப்படுவான்.

- 'மற்றையான்' என்றது, அவ்வாறல்லாத மற்றையனைவரையும் குறித்தது என்க.

- மற்றுப் பொதுவாக உயிரோடிருப்பவன்.

செத்தாருள் வைக்கப்படும்: (அவ்வாறுள்ளவன்) இறந்துபோனவனாகவே கருதப்படுவான்.

- அஃதாவது, அவனை நடைப்பிணம் என்று இழிவு படுத்திக் கூறுவார்.

- இனி, 'வைக்கப்படுவான்' என்று கூறாது, 'படும்' என்றது, பிணத்தை என்று குறிப்புக் காட்டியது.

- வைக்கப்படும்: வைத்து எண்ணப்படும்.

- இனி, இதுபோல், இறந்துபோனவராகக் கருதப்படுபவரையும் இரண்டோர் இடங்களில் அவர் சுட்டியிருப்பதும் இங்குக் கவனிக்கத் தக்கது.

**'விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரின்**
**தீமை புரிந்தொழுகு வார்'** - 143
**'இசையொழிய வாழ்வாரே வாழாதவர்'** - 240
**'இறந்தார் இறந்தார் அனையர் சினத்தை'** - 310
**'உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்**
**செல்லாத்தீ வாழ்க்கை யவர்'** - 330
**'வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணா**
**செத்தான் செயக்கிடந்தது இல்'** - 1001

- இங்குக் கூறப்பெற்ற கருத்துகளுள்,

*இறந்தாராகக் கருதப் பெறுபவர்கள்,*

**'நம்பியவர்கள் இல்லங்களில் தீமை செய்து வருபவர்கள்'**

**'புகழ்பெறுமாறு வாழாதவர்கள்'**

**'சினத்தை மிக்குடையவர்கள்'**

**'உயிர்களைக் கொல்லுகின்ற தீய தொழில் செய்பவர்கள்'**

**'ஏராளமான செல்வங்களைத் திரட்டி**
**வைத்துக் கொண்டு கஞ்சத்தனமாய்**
**அவற்றைக் காத்துக் கிடப்பவர்'**

- *ஆகியோர் ஆவர், என்று ஆசிரியர் கூறுவர்.*

- *இனி இவர்களுடன், மக்கள் நலம் கருதும் சமநிலைப் பொதுமை யறவுணர்வு இல்லாதவனும், செத்தவனாகவே கருதப்படுவான் என்று இதில் கூறுவர்.*

3) *முன்னைய மூன்று குறட்பாக்களிலும் ஒப்புரவுணர்வின் பெருமை கூறியவர், இதில் அவ்வுணர்வுள்ளவனின் மேன்மையும், அஃதில்லாதவனின் இழிவும் கூறப்பெறுவதால், இஃது இங்கு இடம் பெற்றது என்க.*

## உகரு. ஊருணி நீர்நிறைந்து அற்றே உலகுஅவாம் பேரறி வாளன் திரு. - 215

**பொருள்கோள் முறை:**

**உலகு அவாம் பேரறிவாளன் திரு**
**ஊருணி நீர்நிறைந்து அற்றே.**

**பொழிப்புரை:** *ஒப்புரவுணர்வு உடைமையால், உலக மக்கள் மிக விரும்புகின்ற பேரறிவுடையவனின் செல்வம், ஊர் மக்கள் பயன்படுத்துகின்ற தண்ணீர்க் குளம் நீர் நிறைந்திருத்தல் போல்வதாம் என்க.*

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **உலகு அவாம் பேரறிவாளன் திரு :** *ஒப்புரவுணர்வு உடைமையால் உலக மக்கள் மிக விரும்புகின்ற பேரறிவுடையவனின் செல்வம்.*

- *பேரறிவுள்ளவன், உலகமக்களின் சமநிலைப் பொதுவுணர்வை விரும்புவதால் அவனை மக்கள் மிக விரும்பி இருப்பர். என்னை?*

'குடிசெய்து வாழ்வானைச் சுற்றமாகச் சுற்றும் உலகு' - 1025

'நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு' - 994

திரு: செல்வம் - பொதுநலத்துக்குப் பயன்படுவதால் - நல்வினைவைத் தருதலால் - 'திரு' என்று செல்வத்தைக் குறித்தார்.

'கைம்மாறு உகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தி
தம்மால் இயல்உதவி தாம்செய்வார்' - நன்னெறி:29:1-2

'பேரறிஞர் தாக்கும் பிறர்துயரம் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார் - நேரிழையாம்
மெய்சென்று தாக்கும் வியன்கோல் அடிதன்மேல்
கைசென்று காக்கும் கடிது' - நன்னெறி: 31

'தத்தம் நிலைக்கும் குடிமைக்கும் தப்பாமே
ஒத்த கடப்பாட்டில் தான் ஊன்றி - எய்த்தும்
அறங்கடையில் செல்லார்; பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடையது ஆகும் பொருள்.' - நீதிநெறி: 64

'தன் அளியால் மன்பதை ஓம்பாதாற்கு என்ஆம்' - நீதிநெறி:27:3

'பயம்கெழு திரு' - நீதிநெறி:298:1

2) **ஊருணி நீர்நிறைந்தற்றே :** ஊர்மக்கள் பயன்படுத்துகின்ற தண்ணீர்க்குளம் நீர் நிறைந்திருத்தல் போல்வதாம், என்க.

ஊருணி : ஊர்மக்கள் நீர்உண்ணப் பயன்படுத்துகின்ற தண்ணீர்க்குளம்.

'ஊருண்கேணி' - புறம் 392:13

'உண்துறை . . . குண்டுநீர்' - நற்:310:3

'வரைஇழி அருவி உண்துறைத்தரூஉம் குன்று' - குறுந்: 90:5

'ஊருண்கேணி உண்துறை' - குறுந்: 399:1

'உண்துறை உடைந்த பூப்புனல்' - கலி: 78:3

'அகல்இலை நாவல் உண்துறை உதிர்த்த' - அகம்: 380:4

'உண்துறை மலையலர் அணியும் தலைநீர்' - புறம்: 390:24

'ஊருணி' என்னும் சொல் கழகஇலக்கியங்களுள், இந்நூலுள் மட்டும் ஒரே இடத்தில் பயன்படுத்தப் பெற்றுள்ளது என்பதை அறிதல் வேண்டும்.

'ஊருணி' என்னும் சொல்லைப் பாவாணர் பாண்டிநாட்டு வழக்கென்றதால், நூலாசிரியர் பாண்டி நாட்டின் கண் வாழ்ந்திருத்தல்

வேண்டும் என்பதும் உய்த்துணரப் பெறுகிறது, என்க.

*நீர்நிறைந்து அற்று:* மக்கள் நன்கு பயன்படுத்துவதற்குரிய வகையில் நீர் நிறைந்திருந்தது போல்வது.

- ஊருணியைப் பேரறிவாளனுக்கும் அதிலுள்ள நீரைச் செல்வத்திற்கும் உவமைப் படுத்தினார் என்க.

- மக்கள் உண்ணும் நீர்நிலையை, வள்ளண்மை உடையவர்க்கு உவமை கூறும்வழக்குப் புலவர் பிறரிடமும் இருந்துள்ளது, அறியப் பெறுகிறது.

**'தீஞ்சுனை நிலைஇய திரு'** - பதிற்று: 85:6

**'உண்ணீர் மருங்கின் அதர்பல வாகும்'** - புறம்: 204:9

- இதன்வழி, 'பேரறிவாளன் திரு' 'விடரகத்துக் கட்டிய தேன்கூடு' போல் அணுகுதற்கு அரியதன்று; அது ஊர் மருங்கின் தோண்டிய 'ஊருணி நீர்நிறைந்தது போல் கொள்ளுதற்கு எளியது' என்று பயன்எளிமையும் பயன் பொதுமையும் புலப்படுத்தினார் என்க.

3) இஃது, ஒத்தறியும் பேரறிவாளனது ஈட்டம் மக்கள் கொள்ளுதற்கு எளியது என்று முன்னைய குறளுக்கு இயைபுபடுத்திக் கூறியதால், அதன்பின் இதனை நிரல்படுத்தினார், என்க.

**உகசூ. பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்**
**நயனுடை யான்கண் படின். - 216**

**பொருள்கோள் முறை:**

**செல்வம் நயன் உடையான்கண் படின்,**
**பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றுஆல்.**

**பொழிப்புரை:** செல்வம், பொதுமை உணர்வுடைய நடுநிலையாளன் ஒருவனிடத்து வந்து சேருமாயின், அஃது, எல்லார்க்கும் பயன்தரும் நன்மரம் ஒன்று ஊரின் நடுவில் பழுத்து நின்றது போலாம், என்க.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **செல்வம் நயன் உடையார்கண் படின் :** செல்வம், பொதுமை உணர்வுடைய நடுநிலையாளன் ஒருவனிடத்து வந்து சேருமாயின்.

*நயன் உடையான்கண்:* பொதுமை உணர்வுடைய, நடுநிலையாளன் ஒருவன் இடத்து.

நயன் : ஞாயம், நடுநிலை உணர்வு.

- ஒப்புரவுணர்வுக்கு நடுநிலை உணர்வு மிகுதேவை யாகலின், அஃதுடையான் என்றார்.

- பிறர்க்கும் தனக்கும் உள்ள பொதுநிலைத் தேவைகளைப் பொது நல உணர்வுடன் ஒரு நடுநிலையாளன்தான் சரியாகச் சிந்திக்கமுடியும்.

- பாவாணர் இதனை நேர்மை என்றார். நேர்மைக்கும் நடுநிலை உணர்வே அடிப்படை என்றார்.

படுவது - வந்து படிவது, சேர்வது. உழைப்பான் வந்து சேர்வது.

படின் - வந்துசேரின்.

2) **பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் :** எல்லார்க்கும் பயன்தரும் நன்மரம் ஒன்று ஊரின் நடுவில் பழுத்து நின்றது போலாம் என்க.

- பயன்மரம் - பயன்தரும் நன்மரம் பயன் பொதுவாகையால், எல்லார்க்கும் என்பது வருவிக்கப் பெற்றது.

உள்ளூர் - ஊர் உள். ஊர் நடுவில் 'இல்வாய்' என்பது 'வாயில்' என்றானாற் போல்.

- இஃது இலக்கணப் போலி.

பழுத்தற்று: பழுத்ததுபோல்.

- பழுத்து நின்றாற் போல்.

- நன்மரம் காய்த்தது மட்டுமன்று, உடனடிப் பயனுக்கு உதவுவதால், பழுத்தது போல் என்றார்.

- இதிலும் முன் குறளில் கூறியதுபோல் பயன் எளிமையும் பயன் பொதுமையும் புலப்படுத்தினார், என்க.

- மரம் என்றதால் பயன்படுநிழலும் குறித்தார், என்க.

- இக்கருத்துக்கு நேர் எதிரான ஒரு கருத்தை, நன்றியில் செல்வம் அதிகாரத்துள் கூறுவார். அது,

**'நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்**
**நச்சு மரம்பழுத் தற்று'** **- 1008**

- என்பது.

- இங்குப் பயன்மரம் என்றவர், அங்கு நச்சுமரம் என்று கூறிய நயம் உணர்ந்து மகிழ்தற்குரியது.

- முன்னைய குறளில் பேரறிவாளன் செல்வத்தை விடாய் தணிக்கும் நீராகக் கூறியவர், இதில் நயனுடையான் செல்வத்தைப் பசிதணிக்கும் பழமாகக் கூறிய நயம் கண்டு மகிழத்தக்கது.

- ஆல் அசை.

- நயனுடையான் கண் செல்வம் வந்துசேரின், அது பழுமரம் போல் பயன்படும் என்னும் கருத்தைச் சான்றோர் பிறரும் கூறுதல் காண்க.

'அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழல்மரம்போல் நேரொப்பத் தாங்கிப் - பழுமரம்போல்
பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்' - நாலடி : 202

'முன்னூர்ப் பழுனிய கோளி யாலத்துப்
புள்ளார் யாணர்த்(து) அற்றே என்மகன்
வளனும் செம்மலும் எமக்கு' - புறம்: 254:7-9

'உதவுமாடுயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற் றாகவும்' - கம்ப.அயோத்தி.மந்திரப்:82

'மற்றவண் உள்ளபன் மரமும் தம்பயன்
எற்றையும் உலப்புற(து) ஈகை சான்றவே' - கந்தபுராணம்

'பழுமரத்து ஈண்டிய பறவையின்' - மணி: 14:26

'பழுமரம் முன்னிய பறவையின்' - பெருநர்: 64

'பழுமரம் தேரும் பறவைபோல' - பெரும்பாண்.20

'நடுவூருள் வேதிகை சுற்றுக்கோள் புக்க
படுபனை யன்ன பலர்நச்ச வாழ்வார்' - நாலடி: 96:1-2

'பழுமரம்போல்
பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்' - நாலடி: 202:2-3

'அருஞ்சுரத்தின் மரம்போல அடைந்தார்க் களித்தல்
அவற்கியல்பு' -சீவக:3 நச்: உரை.

3) முன்குறளில் ஒப்புரவு உணர்வுடையான் பேரறிவாளன் என்று கூறி, அவன் செல்வம் அனைவர்க்கும் பயன்படுதலை ஓர் எடுத்துக் காட்டான் கூறியவர், இதில் அத்தகையவனை நடுநிலையாளன் என்று விதந்துகூறி, அவனுடைய செல்வப் பயனையும் மற்றுமோர் எடுத்துக்காட்டால் கூறி வேறு வகையில் விளக்கியதால், அதன்பின் இது வைக்கப் பெற்றது.

## உகஎ. மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம் பெருந்தகை யான்கண் படின் - 217

பொருள்கோள் முறை:

***செல்வம் பெருந்தகையான் கண்படின்***
***மருந்துஆகித் தப்பா மரத்து அற்று ஆல்.***

பொழிப்புரை: *செல்வம், மக்கள் நலம் கருதும் பொதுமையுணர்வென்னும் பெருங்குணம் நிறைந்த ஒருவனிடம் வந்துசேரின், அது முழுமையும் மருந்துக்கு ஆகும் மரம் போல் என்றும் எவர்க்கும் தவறாமல் பயன்தரத் தக்கதாம்.*

சில விளக்கக் குறிப்புகள்:

1) ***செல்வம் பெருந்தகையான் கண் படின் :*** *செல்வம் மக்கள் நலம் கருதும் பொதுமையுணர்வென்னும் பெருங்குணம் நிறைந்த ஒருவனிடம் வந்து சேரின்.*

*பெருந்தகை : பெருந்தன்மை, மேலாந்தன்மை, பெருங்குணம் உடைமை.*

*தகை - தகுதிக்கூறு, தகுதன்மை.*

2) ***மருந்து ஆகித் தப்பா மரத்து அற்று :*** *அது முழுமையும் மருந்துக்கு ஆகும் மரம்போல் என்றும் எவர்க்கும் தவறாமல் பயன்தரத் தக்கதாம்.*

*மருந்து ஆகி: முழுமையும் மருந்துக்கு உதவுதல் ஆகி.*

*- முழுமையும் என்றது, மருந்து மரத்தின் வேர், பட்டை, இலை, பூ, காய், கனி, கொட்டை, காற்று, நிழல் முதலிய அனைத்தும் மருந்துக்கு பயன்படுவனவாதல் பற்றி.*

*தப்பா மரம்: பயன்படுவதில் எவர்க்கும் என்றும் தப்பாத மரம். அனைவர்க்கும் பாதுகாப்பும் உயிர்க்காப்பும் தரும் வள்ளல் தன்மையை இவ்வாறு கூறினார்.*

*- உடல் நோய்க்கு எவ்வாறு மருந்து உதவுகிறதோ, அவ்வாறு பசிநோய்க்கும், வறுமை நோய்க்கும், உணவும் உறுதுணை தந்து உதவுதல் தன்மை.*

*ஒப்புரவாண்மை பேணி அனைவர்க்கும் உதவும் பொதுமை உணர்வு கொண்ட பெருந்தகையாளனை மருந்து மரம் எவ்வாறு உடற்பிணி தீர்க்குமோ, அவ்வாறு பசிப்பிணியும் வறுமைப் பிணியும் தீர்க்கும் மருத்துவனாகக் கூறுதல் புலவர் மரபு என்க.*

*- பசியை ஒரு நோய் - ஒரு பிணி - என்றும், அதை நீக்கும்*

பெருந்தகையாளனைப் 'பசிப் பிணி மருத்துவன்' என்றும்; 'பசிப்பகைவன்' என்றும் கூறிப் புகழ்கின்றமையைத் தமிழ் இலக்கியங்களில் காணலாகும்.

'பசியென்னும் தீப்பிணி' - 227

'அறிவு அழுங்கத் தின்னும் பசிநோய்' - திரிகடு: 95:1

'பசிப்பிணி என்னும் பாவியது தீர்த்தோர்' - மணி: 11:80

'பசிப்பிணிக்கு இறைஞ்சிய' - குறுந்:213:3

'பசிப்பிணி மருந்து' - மணி :28 : 217

'பசிப்பகைப் பரிசில் காட்டினை கொளற்கே' - புறம்: 182:10

'பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே' - புறம்: 173:11-12

'ஈர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞன்
இன்மை தீர வேண்டின் எம்மொடு
நீயும் வம்மோ முதுவாய் இரவல' - புறம்: 180:7-9

'பைதல் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்
கோழி யோனே கோப்பெருஞ் சோழன்' - புறம்:212: 12-13

'தன்பகை கடிதல் அன்றியும் சேர்ந்தோர்
பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ' - புறம்: 400:16-17

'மருந்தாகும் தீம்நீர் மலிதுறை போல
இருந்தையூர் அமர்ந்த செல்வ' - பரி.திரட்டு:1 :4-5

'மருந்தும் உடையையோ மற்றே இரப்போக்கு
இழையணி நெடுந்தேர் களிறொடு என்றும்
மழைசுரந் தன்ன ஈகை வண்மகிழ்
கழல்தொடித் தடக்கை கலிமான் நள்ளி' - அகம்: 238:11-14

'திருமருந்து விளைக்கும் நன்னாட்டுப் பொருநன்
கிள்ளி வளவன்' - புறம் : 70:9-10

(இங்கு உணவு பசிக்கு மருந்து எனப்பட்டது.)

'அல்லல் ஒருவர்க்கு அடைந்தக்கால் மற்றவர்க்கு
நல்ல கிளைகள் எனப்படுவார் - நல்ல
வினைமரபின் மற்றதனை நீக்கும் அதுவே
மனைமரம் ஆய மருந்து' - பழமொழி : 53

ஆல் - அசை

| | உவமேய முதல்வன் (கருத்தா) (குறளெண்) | உவமானப் பொருள் | உவமான விளக்கம் | உவமானச் சிறப்பு (இறைச்சி)ப் பொருள். |
|---|---|---|---|---|
| 1 | **பேரறிவாளன் செல்வம் (215)**<br>(பேரறிவுடையவன் ஆகையால் ஒப்புரவுணர்வு மிக்குடையவன்)<br>(பேரறிவுடைமையால் பொருட்பெருக்கத் திற்கும் வழிசெய் திருப்பான் என்க.)<br>(அறிவால் சிறந்தவன்). | ஊருணி நீர் | ● ஊரே உண்கின்ற நீர்நிலை.<br>● எல்லார்க்கும் பொதுவானது.<br>● குடிக்க மட்டின்றிச் சமைக்கவும் உதவுவது. | ● எக்காலத்தும், தங்கு தடையின்றிப் பயன்பெறுவது.<br>● ஊரில் உள்ள எல்லார்க்கும் மட்டின்றி, வரும் போகும் வழிப்போக்கரும் பயன் பெறுவது.<br>● ஊற்றுள்ளதாகலின் எடுக்க எடுக்கக் குறையாமல் இருப்பது.<br>● அடிக்கடி பயன்தருவது.<br>● நாட்பயனுக்கு மட்டின்றி, விழவு, நற்செயல், தீச்செயல் அனைத்துக்கும் உதவுவது.<br>● குடிக்க மட்டின்றி உணவு சமைக்கவும் உதவுவதால், குடும்பத்திற்கே உயிர்க்காப்பது. |
| 2 | **நயனுடையான் செல்வம் (216)**<br>● நடுநிலை உணர்வு உள்ளவன்.<br>● பொதுவாக மட்டுமின்றிச் சிறப்பாகவும் நோக்குபவன்.<br>● தேவைக்கு ஏற்ப அளவிட்டு ஈபவன்.<br>(செயலால் சிறந்தவன்) | பயன்மரம் - பழுத்தல் | ● பழுத்து நிற்கின்ற பயன் தரும் மரம்.<br>● அடிக்கடி நீர், எரு, காப்புச் செய்தல் முயற்சி தேவை. | ● தேவையான பொழுதெல்லாம் அன்றிப் பருவத்தால் மட்டுமே உதவுவது.<br>● முந்துபவர்க்கே முதற்பயன் தருவது.<br>● பிந்துபவர்க்கு முறை சொல்லலும் நேரலாம்.<br>● அனைவர்க்குமே அன்றி, அளவான் விளைவுக்குத் தக்கபடி பலர்க்கும் பயன்தருவது.<br>● பழவித்துகளால் அவரவரும் தத்தம் இடத்துப் பதியன் போட்டுக் கொள்ள உதவுதல் போல், பிறரையும் மூலமுதல் தந்து வளர்த்தெடுக்க உதவுவது. |

| | உவமேய முதல்வன் (கருத்தா) (குறளெண்) | உவமானப் பொருள் | உவமான விளக்கம் | உவமானச் சிறப்பு (இறைச்சி)ப் பொருள். |
|---|---|---|---|---|
| 3 | **பெருந்தகையான் செல்வம் (217)** நற்குணங்கள் உடையவன். பெருந்தன்மை உடையவன். மேனிலை உணர்வு உள்ளவன். (மனத்தால் சிறந்தவன்) | மருந்து மரத்தின் பயன். | ● மருந்து போல் முழுவதும் பயன்தரும் மரம், <br>● வேம்பு, ஆல், அத்தி, வில்வம், அரசு முதலியன. | ● மருந்து மரத்தின் விதை வேர், பட்டை, பூ, காய், கனி, நிழல், காற்று முதலிய அனைத்தும் மருந்து ஆவதுபோல், பெருந்தகையாளர்தம் பொருளால் மட்டுமன்றி, சொல்லால், செயலால் பசிப்பிணிக்கும், வறுமை நோய்க்கும், உடல்நோய்க்கும், என்றும், எப்பொழுதும் உதவுதல். <br>● எடுத்துக்கொண்டு சென்று, காத்துவைத்து எவர்க்கும் எக்காலத்தும் எவ்விடத்தும் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் உதவுவது. <br>● பெற்றார்க்கு மட்டுமின்றிப் அவர்வழிப் பிறர்க்கும் பயன்படும்படி உதவுவது. |

3) இம் மூன்று செய்யுள்களிலும் வந்த 'ஊருணி', 'பழுமரம்', 'மருந்துமரம்' என்னும் மூன்று உவமைகளைப் பற்றியும், பாவாணர் அவர் மரபுரையில் கீழ்வரும் நய விளக்கம் ஒன்றைக் கூறுவர். அக் கருத்தும் இங்கு கவனிக்கத் தக்கது. அது.

'மேற்கூறிய மூவேறு உவமங்களுள், 'ஊருணி' என்பது, எல்லார்க்கும் பயன்படும் செல்வத்தையும் 'பழுமரம்' என்பது, பலர்க்குப் பயன்படும் செல்வத்தையும், 'மருந்துமரம்' என்பது, சிலர்க்குப் பயன்படும் செல்வத்தையும் குறிக்கும் என்று கொள்ள இடமுண்டு. இங்ஙனம் பயனளவில் வேறுபடுவது, செல்வத்தின் அளவையும் ஒப்புரவாளனின் குறிக்கோளையும் பொறுத்ததாகும்.

4) ஆனால், மேற்கூறிய மூன்று உவமைகளாலும் உவமேயங்களாலும், ஆசிரியர் கூறுவந்த இறைச்சிப் பொருள்கள் இன்னும் ஆழ்ந்து சிந்திக்கத் தக்கனவும் பயன் கொளுவத் தக்கனவும் ஆம். அவை, முன் உள்ள அட்டவணையிற் பாகுபடுத்திக் காட்டப் பெற்றுள்ளதைக் கண்டு மகிழ்க.

5) முன்னைய குறள்களில் பேரறிவாளன், நயனுடையான் ஆகியவர்களிடம் ஒப்புரவுணர்வு பற்றிக் கூறியவர், இதில், பெருந்தகையானின் அறவுணர்வு பற்றிக் கூறுதலால், அவற்றின் பின் இஃது இடம் கொண்டது, என்க.

## உகஅ. இடனில் பருவத்தும் ஒப்புரவிற்(கு) ஒல்கார்
## கடனறி காட்சி யவர். - 218

பொருள்கோள் முறை:

**கடனறி காட்சியவர், இடனில் பருவத்தும்**
**ஒப்புரவிற்கு ஒல்கார்.**

**பொழிப்புரை:** ஒப்புரவு அறத்தைத் தம் கடமையாக அறிவால் உணர்ந்து கடைப்பிடிப்பவர், தாம் வறுமையுற்று இயலாத காலத்தும், அதைச் செய்வதற்கு மனம் தளர மாட்டார். (தம்மால் இயன்றவரையிலாயினும் அல்லது வேறு வகையிலாயினும் முயன்று செய்வார்.)

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **கடன்அறி காட்சியவர் :** ஒப்புரவு அறத்தைத் தம் கடமையாக அறிவால் உணர்ந்து கடைப் பிடிப்பவர்.

காட்சி - அறிவு, உணர்வு

2) **இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்:** தாம் வறுமையுற்று இயலாத காலத்தும், அதைச் செய்வதற்கு மனம் தளர மாட்டார்.

(தம்மால் இயன்ற வரையிலாயினும் அல்லது வேறு வகையிலாயினும் முயன்று அவ்வறத்தைச் செய்வார்.)

இடனில் பருவம் : இடம் இல்லாத காலம். இயலாத காலம். அஃதாவது வறுமையுற்று அவ்வறத்தைத் தொடர்ந்து செய்ய இயலாத காலம்.

ஒல்கார் : மனம் தளர மாட்டார்.

ஒல்குதல் - தளர்தல், மெலிதல், தவிர்த்தல், விட்டு நீங்குதல் முதலிய பொருள் தரும் சொல்.

3) தம்மால், ஒப்புரவு அறத்தைத் தொடர முடியாதவாறு வறுமையுற்ற காலத்தும், அதை தம்மால் இயன்ற வரையிலும் இருப்பதைக் கொண்டு செய்வார். அல்லது தம் உடைமைகளை விற்றேனும், கடன் கொண்டேனும் அவ்வறைத்தைத் தொடர்ந்து செய்வார்.

4) இக் கருத்தைச் சான்றோர் பிறரும் ஒப்பக் கூறுவர்.

**'இல்லா இடத்தும் இயன்ற அளவினால்**
**உள்ள இடம்போல் பெரிதுஉவந்து - மெல்லக்**
**கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்கு**
**அடையாவாம் ஆண்டைக் கதவு'** - ***நாலடி:91***

**'உடுக்கை யுலறி உடம்புஅழிந்தக் கண்ணும்**
**குடிப்பிறப் பாளர்தம் கொள்கையிற் குன்றார்'** - ***நாலடி:141:1-2***

**'செய்கை யழிந்து சிதல்மண்டிற் றாயினும்**
**பெய்யா ஒருசிறை பேர்இல் உடைத்தாகும்**
**எவ்வம் உழந்தக் கண்ணும் குடிப்பிறந்தார்**
**செய்வர் செயற்பா லவை'** - ***நாலடி: 147***

**'ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை**
**அங்கண்மா ஞாலம் விளக்குறூஉம் திங்கள்போல்**
**செல்லாமை செவ்வன்நேர் நிற்பினும் ஒப்புரவிற்கு**
**ஒல்கார் குடிப்பிறந் தார்'** ***நாலடி: 148***

**'செல்லா இடத்தும் குடிப்பிறந்தார் செய்வன**
**செல்லிடத்தும் செய்யார் சிறியவர்'** - ***நாலடி:149:1-2***

**'எற்றொன்றும் இல்லா இடத்தும் குடிப்பிறந்தார்**
**அற்றுத்தற் சேர்ந்தார்க்கு அசைவிடத்(து) ஊற்றாவார்**
**அற்றக் கடைத்தும் அகல்யாறு அகழ்ந்தக்கால்**
**தெற்றெனத் தண்ணீர் படும்'** - ***நாலடி:150***

**'நரம்பெழுந்து நல்கூர்ந்தார் ஆயினும் சான்றோர்**
**குரம்பெழுந்து குற்றம் கொண்டேறார் - உரங்கவறா**

உள்ளமெனும் நாரினால் கட்டி, உளவரையால்
செய்வர் செயற்பா லவை' - நாலடி: 153
'உறைப்பருங் காலத்தும் ஊற்றுநீர்க் கேணி
இறைத்துணினும் ஊராற்றும் என்பர்; கொடைக்கடனும்
சாஅயக் கண்ணும் பெரியார்போல்; மற்றையார்
ஆஅயக் கண்ணும் அரிது' - நாலடி: 184
'உறுபுனல் தந்துலகு ஊட்டி அறுமிடத்தும்
கல்லூற் றுழியூறும் ஆறேபோல், செல்வம்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணும் சிலர்க்காற்றிச்
செய்வர் செயற்பா லவை' - நாலடி : 185
'ஆற்றுப் பெருக்கற்(று) அடிசுடும்அந் நாளுமவ்வா(று)
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் - ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து' - நல்வழி: 9
'. . . தம்வீறு அழிதல்கண்டார் கொடுப்பதன்கண்
ஆற்றமுடி யாதெனினும் தாம் ஆற்றுவார்' - அறநெறி:74:2-3
'கூஉய்க் கொடுப்பதொன்(று) இல்லெனினும் சார்ந்தார்க்குத்
தூஉய்ப் பயின்றாரோ துன்பம் துடைக்கிற்பார்
வாய்ப்பத்தான் வாடியக் கண்ணும் பெருங்குதிரை
யாப்புள்வே றாகி விடும்' - பழமொழி: 162
'அடந்து வறியராய் ஆற்றாத போழ்தும்
இடங்கண்(டு) அறிவாமென் றெண்ணி யிராஅர்
மடங்கொண்ட சாயல் மயிலன்னாய்! சான்றோர்
கடன்கொண்டும் செய்வார் கடன்' -பழமொழி : 216
'நாடறியப் பட்ட பெருஞ்செல்வர் நல்கூர்ந்து
வாடிய காலத்தும் வட்குபவோ ?' - பழமொழி:278:1-2

நூலாசிரியரும், சிறந்த ஒரு செயல் எந்நிலையிலும் செய்யப்படுதல் வேண்டும் என்னும் கருத்தை நூலுள் பல்வேறு இடங்களில் வலியுறுத்துவார்.

**'ஆக்கம் இழந்தேம் என்(று) அல்லாவார் ஊக்கம்**
**ஒருவந்தம் கைத்துடை யார்' - 593**

**'ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்**
**செல்லும்வாய் நோக்கிச் செயல்'** - *673*

**'வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி**
**பண்பில் தலைப்பிரிதல் இன்று'** - *955*

**'மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்**
**கீழல்லார் கீழல் லவர்'** - *973*

**'பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்**
**அருமை உடைய செயல்'** - *975*

**'ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு**
**ஆழி எனப்படு வார்'** - *989*

*5) செல்வம் மிக்கிருந்த காலை செய்யப்பெறும் ஒப்புரவாண்மை அறத்தை விரும்பி மேற்கொள்ளும் தன்மையினார் பற்றி முன் மூன்று பாடல்களில் பேசியவர், அது குறைந்த காலத்தில் அத்தகையவர் எவ்வாறு நடந்துகொள்வர் என்று இதில் கூறுவதால், அவற்றின் பின்னர் இது வைத்தார்.*

**உகக. நயனுடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர**
**செய்யாது அமைகலா வாறு.** - **219**

பொருள்கோள் முறை: **இயல்பு**

பொழிப்புரை : *நடுநிலையான பொதுமை நலம் கருதுபவன் வறுமையுற்றான் என்பது, அவன் பிறர்க்குச் செய்து வந்த பொதுநலக் கொடைகளைத் தன்னால் செய்ய இயலாமல் மனம் வருந்துகின்ற நிலையே.*

சில விளக்கக் குறிப்புகள்:

*1)* **நயனுடையான் நல்கூர்ந்தான் ஆதல்** : *நடுநிலையான பொதுமைநலம் கருதுபவன் வறுமையுற்றான் என்பது.*

*நயனுடையான் : நடுநிலையான பொதுமை நலம் கருதுபவன்.*

*நல்கூர்ந்தான் ஆதல் : வறுமையுற்றான் என்று ஆவது.*

*- அஃதாவது வறுமைநிலை அடைந்தான் என்பது.*

*- அவன் வறுமையுறுவது பிறர் வறுமையுறுவது போல் இல்லை. அதற்கு*

வேறு பொருள் உண்டு என்று கூறி, அதனை மேலே விளக்குவார்.

2) **செயும் நீர செய்யாது அமைகலா ஆறு :** அவன் பிறர்க்குச் செய்து வந்த பொதுநலக் கொடைகளைத் தன்னால் செய்ய இயலாமல் மனம் வருந்துகின்ற நிலையே.

செயும் நீர: பிறர்க்குச் செய்து வந்த நீர்மையான செயல்களை

- அஃதாவது நீர்மையான செயல்களாகிய ஒப்புரவாண்மையை - அஃதாவது பொதுநல உதவி - கொடைகளை.

- கேட்டுச் செய்வது உதவி. கேளாமலே செய்வது கொடை.

**'தண்டாமல் ஈவது தாளாண்மை; தண்டி அடுத்தக்கால் ஈவது வண்மை'** - என்னும் ஔவையார் தனிப்பாடலை ஓர்க.

செய்யாது அமைகலாஆறு:

- தன்னால் செய்ய இயலவில்லையே என்று மனம் அமைதியற்றிருக்கின்ற நிலை.

- அமைகலா - அமைகு + அலா. அமைகு - அமைவு; அலா-அல்லாத. அமைவு - அமைதி : ஆறு - வழி, போக்கு, நிலை.

 - அமைதியில்லாதது - மனம் வருந்துகின்ற நிலை.

 **'அமைகல்லா'** **- மதுரைக் காஞ்சி:343**

 **- மலைபடு கடாம்:263**

 **'பிரிவுஅருங் காலை**
 **துறந்து அமைகல்லார் காதலர்**
 **மறந்து அமைகல்லாதென் மடங்கெழு நெஞ்சே'** **- ஐங்:457:3-4**
 **'செற்றார் கண்சாய யான் சாராது அமைகல்லேன்'** **- கலி:104:6**
 **'மறந்தும் அமைகுவர் கொல்'** **- அகம்: 223:2**
 **'இவண்நலம் தாராது அமைகுவ ரல்லர்'** **- புறம்: 351:7**
 **'நின்இன்று அமைகுவென் ஆயின்'** **- நற்:400:5**
 **'யாங்கு மறந்(து) அமைகோ யானே'** **- குறுந்:132:3**

- நடுநிலையான பொதுமை நலம் கருதுபவன், பிறர்க்குச் செய்து வந்த நீர்மையான செயல்களை அஃதாவது உதவிகளை - கொடையகைத் தான் இனிச் செய்ய முடியாத நிலை வந்துற்றதே என்று எண்ணி வருந்துகின்ற ஒரு தாழ்ச்சி நிலையே அவனது வறுமைநிலை.

- மற்று, தானும் தன் குடும்பமும் உண்ணவும் உடுக்கவும் இல்லாத கவலைநிலை யன்று.

- 'அமைதியற்றிருக்கும் நிலைமையாவது வருந்துதல். ஒப்புரவு செய்ய இயலாவாறு செல்வம் அற்ற விடத்து, பிறரை நுகர்வியாமை பற்றியே யன்றித் தான் நுகராமை பற்றி வருந்துவதில்லை யென்பதாம்' என்று இதனை விளக்குவார், மொழிஞாயிறு பாவாணர்.

'ஈட்டிய ஒண்பொருள் இல்லெனினும் ஒப்புரவு
ஆற்றும் குடிப்பிறந்த சான்றவன் - ஆற்றவும்
போற்றப் படாதாகிப் புல்லின்றி மேயினும்
ஏற்றுக்கன்(று) ஏறாய் விடும்' - பழமொழி:217

'அடுத்தொன்(று) இரந்தாற்கொன் றீந்தானை, கொண்டான்
படுத்தேழை யாமென்று போகினும் போக
அடுத்தேறல் ஐம்பாலாய்! யாவர்க்கே யானும்
கொடுத்தேழை யாயினார் இல்' - பழ : 218

'பல்நீரால் பாய்புனல் பரந்தூட்டி இறந்தபின்
இல்நீரால் அறல்வார அகல்யாறு கவின்பெற
முன்ஒன்று தமக்காற்றி முயன்றவர் இறுதிக்கண்
பின்ஒன்று பெயர்த்தாற்றும் பீடுடை யாளர்போல்' - கலி:54:2-5

'அறந்தலைப் பிரியாது ஒழுகலும் சிறந்த
கேளிர் கேடுபல ஊன்றலும் நாளும்
வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்லெனச்
செய்வினை புரிந்த நெஞ்சினர்' - அகம்:173:1-4

'நல்லார் பெரிதளியர் நல்கூர்ந்தார் என்றெண்ணிச்
செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால் - கொல்லன்
உலையூதும் தீயேபோல் உள்கனலும் கொல்லோ
தலையாய சான்றோர் மனம்' - நாலடி:298

'எத்துணை யானும் இயன்ற அளவினால்
சிற்றறஞ் செய்தார் தலைப்படுவர்' - நாலடி:272:1-2

'கொடுத்தளிக்கும் ஆண்மை யுடையவர் நல்குரவு
காண அரியன கண்' - திரிகடு.:71:3-4

'நிறைநெஞ்சு உடையானை நல்குரவு அஞ்சும்' - திரிகடு:72:1

'. . . . துளிஅஃகி
நல்குரவு ஆற்றப் பெருகினும் செய்யாரே
தொல்வரவின் தீர்ந்த தொழில்' - ஆசாரக்: 56:4-5

**'மல்கு திரைய கடற்கோட்(டு) இருப்பினும்**
**வல்லூற்(று) உவரில் கிணற்றின்கீழ்ச் சென்றுண்பார்' - நாலடி:263:1-2**

- என்று இயைபு கூறினார், பிறரும்.

3) இதில், செய்யாது அமைகலா வாறு என்று நல்கூர்ந்தான் ஆயினும் நயனுடையான் ஏதாவது செய்யவே விரும்பியிருத்தலைக் கூறியதால், இடனில் பருவத்தை யடுத்திஃது இடங்கொண்டது.

## உஉ0. ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன் விற்றுக்கோள் தக்க(து) உடைத்து. - 220

பொ:ருள்கோள் முறை: இயல்பு

பொழிப்புரை: பொதுமையறம் செய்வதால் ஒருவனுக்குப் பொருள் கேடோ அல்லது தாழ்ச்சியோ வருமென்றால், அது தன்னை விற்றுக் கொண்டாயினும் பெற்றுக் கொள்ளும் தகுதி உடையது.

சில விளக்கக் குறிப்புகள்:

1) **ஒப்புரவினால் வரும் கேடெனின்:** பொதுமையறம் செய்வதால் ஒருவனுக்குப் பொருள்கேடோ அல்லது தாழ்ச்சியோ வருமென்றால்.

- பொதுமையறம் என்னும் ஒப்புரவாண்மையைக் கடைப் பிடித்தொழுகும் ஒருவனுக்கு.

வரும் கேடு எனின்: வரும் கேடுகளாகிய பொருள். இன்மை அல்லது தாழ்ச்சியோ ஏற்படின்.

- எல்லார்க்கும் கொடுத்து உதவுகின்ற தன்மையால் ஒருவனுக்கு இருக்கின்ற பொருள் வளம் குறைவு படலாம்.

- அல்லது தன் குடும்ப நலன்கள் தாக்கம் பெறலாம்.

- அத்தகைய தாழ்ச்சிகள் ஏற்படுவது உலக இயல்பாம்.

அவ்வாறு ஏற்படின் அது தாழ்ச்சியில்லை; அதை நாமே விலை கொடுத்துப் பெற்றுக் கொள்ளலாம் என்பார் ஆசிரியர்.

2) **அஃதொருவன் விற்றுக் கோள் தக்கது உடைத்து:**

அது தன்னை விற்றுக் கொண்டாயினும், பெற்றுக் கொள்ளும் தகுதி உடையது.

*விற்றுக்கோள்: அது, - அவ்வாறான கேடு - தன்னை இன்னொருவனிடம் - விற்றுக் கொண்டாயினும்.*

*தக்கது உடைத்து: பெற்றுக் கொள்ளும் - ஏற்றுக்கொள்ளும் தகுதியை உடையது.*

*- அஃதாவது, அக்கேட்டினை இவன் தன்னை இன்னொருவனுக்கு விலைபேசி விற்றுக் கொண்டும் ஏற்றுக்கொள்ளலாம். அக்கேட்டுக்கு அத்துணைத் தகுதி உண்டு என்றவாறு.*

*- அக்கேட்டால் தனக்கு இழிவு நேராது. அவ்வாறு இழிவோ தாழ்ச்சியோ ஏற்படுமானால், அதனைத் தன்னை ஒருவனிடம் விலைபேசி விற்றுக் கொண்டு, அப்பணத்தைக் கொண்டேனும் அக்கேட்டையோ, இழிவையோ, தாழ்ச்சியையோ போக்கிக் கொள்ளலாம்.*

*- அல்லது அவற்றை விலைக்கு வாங்கிக் கொள்ளலாம். அந்த வகையில் அக்கேடு பெருமை உடையது என்றார்.*

*3) நூலாசிரியரும் ஒருவருடைய பெருமை சிறுமைகள் அவருடைய பொருள்நிலையைக் கொண்டு கணிக்கப் பெறுவதில்லை. அவ்வாறான தாழ்வு நிலைகள் அத்தகைய ஒருவருக்குப் பெருமை தருவதேயாகும் என்னும் கருத்தைப் பல வடிவங்களில், பல கோணங்களில் எடுத்துக் காட்டுவது, கவனிக்கத் தக்கது.*

**'கெடுவாக வையா(து) உலகம் நடுவாக**
**நன்றிக்கண் தங்கியான் தாழ்வு'** **- 117**

**'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்**
**கருமமே கட்டளைக் கல்'** **- 505**

**'துன்பம் உறவரினும் செய்த துணிவாற்றி**
**இன்பம் பயக்கும் வினை'** **- 669**

**'இன்மை ஒருவற்கு இளிவன்று சால்பென்னும்**
**திண்மை உண்டாகப் பெறின்'** **- 988**

**'சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி**
**வறங்கூர்ந் தனையது உடைத்து'** **- 1010**

*இவையொட்டிச் சான்றோர் பிறர் கூறும் கருத்துகளும் கவனிக்கத் தக்கன.*

**'நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்**
**இல்லையென மாட்டார் இசைந்து'** **- நல்வழி:9**

**'நல்லாறு ஒழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்**
**அல்லன செய்தற் கொருப்படார்'** **- நீதிநெறி:60:1-2**

'அட்டாலும் பால்சுவையிற் குன்றாது . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளே;சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்' - வாக்குண்டாம்:41

'சீரியர் கெட்டாலும் சீரியரே! சீரியர்மற்று
அல்லாதார் கெட்டால்அங் கென்னாகும் - சீரிய
பொன்னின் குடம் உடைந்தால் பொன்னாகும் என்னாகும்
மண்ணின் குடம் உடைந்தக் கால்' - வாக்குண்டாம்:18

'சந்தனம் மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தம் குறைபடா தாதலால் - தந்தம்
தனம் சிறியர் ஆயினும் தார்வேந்தர் கெட்டால்
மனம்சிறியர் ஆவரோ மற்று' - வாக்குண்டாம்:28

'நயவார்கண் நல்குரவு நாணின்று' - நாலடி:267:1

'எறிநீர்ப் பெருங்கடல் எய்தி யிருந்தும்
அறுநீர்ச் சிறுகிணற்(று) ஊறல்பார்த் துண்பர்
மறுமை அறியாதான் ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை' - நாலடி:275

'சிறியவர் எய்திய செல்வத்தின் மாணப்
பெரியவர் நல்குரவு நன்றே - தெரியின்
மதுமயங்கு பூங்கோதை மாணிழாய்! மோரின்
முதுநெய்தீ தாகலோ இல்' - பழமொழி:89

'சீர்த்தகு மன்னர் சிறந்தனைத்தும் கெட்டாலும்
நேர்ந்துரைத்து எள்ளார் நிலைநோக்கி' - பழமொழி:383:1-2

'கெடுவல் எனப்பட்ட கண்ணும் தனக்கோர்
வடுவல்ல செய்தலே வேண்டும் - நெடுவரை
முற்றுநீர் ஆழி வரையகத்து ஈண்டிய
கல்தேயும் தேயாது சொல்' - பழமொழி:394

'மிகப்பேர் எவ்வம் உறினும் எனைத்தும்
உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம்
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெருமயாம் உவந்துநனி பெரிதே' - புறம்:197:15-18

**'தம்நயந்து உறைவோர் தாங்கித் தாம்நயந்து**
**இன்னமர் கேளிரொடு ஏமுறக் கெழீஇ**
**நகுதல் ஆற்றார் நல்கூர்ந்தோர்'** - ***அகம்:151:1-3***
**'பாரியும் பரிசிலர் இரப்பின்**
**வாரேன் என்னான் அவர்வரை யன்னே'** - ***புறம்:108:5-6***
**'தம்மை மாறியும் புரிவது தருமம்'** - ***திருவிளை.நாட்டு:59***

*4) ஒப்புரவுணர்வால் - பொதுமையறச் செயலால் வறுமையோ தாழ்ச்சியோ பிற என்ன கேடுவந்தாலும் அஃது இழிவன்று பெருமையே; அதனால் அதனைத் தன்னை இழந்தும் பெற்றுக் கொள்ளலாம் என்று முடித்துக் கூறினார்.*

# அ-2 இல்லறவியல்

## அ-2-19 ஈகை -23

### *அதிகார முன்னுரை:*

**ஈகை விளக்கம்:**

*'ஈகை'யாவது ஈதல் - கொடுத்தல் - அதன்வழிப் பிறர்க்கு உதவுதல்.*

*அஃதாவது, இருப்போர் இல்லாதவர்க்குக் கொடுத்து உதவுதல். செல்வர் ஏழையர்க்கு உதவி செய்து வாழ்தல்.*

*முன்னதிகாரத்தில் கூறிய 'ஒப்புரவு' என்பது பெருங்கொடை. உலகப் பொதுமையறம் கருதி இயங்கும் செயல்கள், பொது அமைப்புகள், சான்றோர்கள், கல்விக் கழகங்கள், வறுமையில் வாடும் தக்கவர்கள், ஏதிலியர், உறுப்புக்குறை கொண்டு வாழற்கியலாதவர்கள், வாழ்க்கைச் சமநிலை எய்துதற்குத் துணையாக நிற்கும் ஒரு பேரறவுணர்வாகும், அது.*

*ஆனால், ஈகை என்பது அதனின் சிறிது வேறுபட்டது; அளவில் குறைந்தது. ஒப்புரவு செய்ய இயலாதவர்க்குத் தக்கது. ஒப்புரவு பெருஞ்செல்வர்க்குரியது எனின், ஈகையறம் எல்லா மக்கட்கும் உரியது, என்க.*

*இல்லாத ஏழையர்க்கும், பசித்து வருவோர்க்கும், ஏதாவது உடனடித் தேவைகளை நிறைவுசெய்யக் கேட்டவர்க்கும், தம்மை நெருங்கிவந்து உதவிகேட்கும் கிளைஞர்க்கும் கேளிர்க்கும், அண்டை அயல் வாழ்பவர்க்கும் அவ்வப்பொழுது தம்மால் இயன்ற அளவு உதவுதலே ஈகையறம் ஆகும்.*

இஃதொரு குமுகாய உணர்வு. ஒருவர்க்கொருவர் உதவியாக இருந்து, மக்கள் நலத்தை வளர்விக்கும் - நிறைவிக்கும் - ஒரு மாந்தநேய உணர்வே ஈகை. இஃதோர் அன்புணர்வு - அருளுணர்வு அடிப்படையில் நிகழ்வது.

இவ்வுதவியும் திருப்பிச் செய்யும் பான்மையற்றது. அவ்வாறு திருப்பித்தர வேண்டிய ஒருநிலை அவ்வுதவுவார்க்கு இருப்பின், ஊதியமற்ற நிலையில் அதைத் திருப்பிச் செய்யும் கடப்பாடுகூறி உதவுதல் தவறிலதாம், என்க.

அது காலத்தால் செய்த உதவியாகக் கருதப் பெறும். அதுவும் பெருமையுடையதே.

**'காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்**
**ஞாலத்தின் மாணப் பெரிது'** - **102**

என ஆசிரியர் கூறியுள்ளதை ஓர்க.

**தமிழினத்தின் ஈகைப் பண்பு:**

தமிழினத்தின் குமுகாயப் பண்பாட்டு வளர்ச்சி நிலைகளைப் பார்க்கும் பொழுது, ஈகை உணர்வு ஒரு பேரறமாகவே கருதப் பெறுவது, மிகத்தொன்மைக் காலந் தொட்டே தொடர்ந்து இருந்து வருவதை உணரலாம். இது மக்களின் நல்லியக்கத்திற்கும், குமுகாயப் பண்பமைவிற்கும், உலகப்பொதுநலத்திற்கும் மிக்க பயன்படும் ஓர் உணர்வாகும்.

மிகத்தெளிவாகவும், வெளிப்படையாகவும் மதிப்பிடுவதானால், தமிழினத்தின் மரபுவழிச் சிறந்து விளங்கும் இவ்வுணர்வு, இவ்வுலகின் வேறெவ் வினத்திலும் இந்த அளவில் வேரூன்றியிருக்கவில்லை - என்பதை, வேற்று இன மக்களின் பண்பு வரலாற்றையும், இலக்கியங்களையும் ஓரளவு உணர்ந்தவர்கள்கூட முழுமையாக ஒப்புவார்கள்.

அதுவும், இவ்வுணர்வை இந்நூலாசிரியப் பெருந்தகை ஓர்ந்து உணர்த்துவதைப் போல், வேறு எந்நூலாசிரியரும், இத்துணைத் தெளிவாகவும் அழுத்தமாகவும் உணர்த்துவதாகக் கூறவியலாது.

மக்களின் உயிர் வாழ்க்கையே பிறர்க்கு உதவுவதில்தான் சிறப்பும் பெருமையும் பெறுகிறது. அதைவிட உலக மாந்த வாழ்வில் வேறு சிறப்பில்லை என்று பிறவிக்கே ஈகையறத்தை இலக்கணப் படுத்தும் தன்மையை, இந்நூலில் தவிர, வேறு எந்த இலக்கிய அல்லது அறவியல் நூலிலும் காணற்கியலாது, என்க.

**'நல்லாறு எனினும் கொளல்தீது, மேலுலகம்**
**இல்லெனினும் ஈதலே நன்று'** - **222**

**'சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்**
**ஈதல் இயையாக் கடை'** - **230**
**'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு'** - **231**

என்பன போலும், சிறிதும் தந்நலமற்ற பொதுமைப் பேரறக் கருத்துகளை உலகின் வேறு எந்த அறநூலும் ஏன், இறையிறக்கம் என்று கூறப்பெறும் திருமறைநூல்களுங்கூட, கூறியிருப்பதாகத் தெரியவில்லை.

இந்த அளவில் இவ் வீகை அறத்திற்குப் பெருமையும் மேம்பாடும் இந்நூலுள் இவ்வதிகாரத்து மிக அகலமாகவும், வேறு சில விடங்களில் மிக ஆழமாகவும் கூறப்பெற்றுள்ளன என்பதை உணர்தல் வேண்டும். அதனை இம் முன்னுரையின் பின்புலத்துக் காண்போம். அதற்கு முன்னர், சொற்பரப்பினைத் தமிழியலின் சொல்லியல், பொருளியல் அமைப்புக் கேற்ப இங்கு உணர்ந்து கொள்வது மிகவும் இன்றியமையாதது.

**ஈகை: சொல்லும் பொருளும்:**

தமிழ்மொழியின்கண் ஈதலுக்குப் பல சொற்கள் உள்ளன - என்பதை ஒருவாறு உணரப்பெற்றிருக்கலாம்.

'ஈ', 'தா' என்பன ஓரெழுத்தொருமொழிகள். 'கொடு' என்பது ஈரெழுத்தொருமொழி. இச்சொற்களே இவ் வறப்பண்பு மிகு தொன்மைக் காலந்தொட்டுப் புழங்கி வருவதை உணர்த்தப் போதிய சான்றுகளாம்.

நம் ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியத்துள்ளும் இச் சொற்கள் பேசப்பெறுவது மட்டன்றி, இச் சொற்களைப் பண்பாட்டியல் அடிப்படையில், எங்கெங்கு எவரெவர் கூறல் தகும் என்ற இலக்கணமும் அந்நூலின்கண் வகுக்கப் பெற்றிருப்பதையும் கண்டு மகிழலாம். என்னை?

'ஈ', 'தா', 'கொடு' வெனக் கிளக்கும் மூன்றும்
**இரவின் கிளவி ஆகிடன் உடைய.** - **தொல். 927**

(ஆகிடன் - ஆகிடல் - ஆகிவருதல்)

('ஆகிவருதல் உடைய' என்றது ஏன் எனில், 'ஈச்சிறகு', 'தாவில் நன்பொன்' 'கொடுங்கோல்' என, அம் மூன்றுசொற்களும் பறவை முதலிய பிற பொருளும் உணர்த்துவதால், என்க. அவை தனியாக வரும் சிலவிடத்து மட்டும் இரத்தல் பொருளை உணர்த்தும் என்றார்.

இனி, இம் மூன்று சொற்களும் பயன்படுத்தப் பெறும் இடங்களையும் கீழ்வரும் நூற்பாக்களால் உணர்த்துவார், தொல்காப்பியர்.

**'ஈ'யென் கிளவி இழிந்தோன் கூற்றே'**

**'தா'வென் கிளவி ஒப்போன் கூற்றே'**

**'கொடு'வென் கிளவி உயர்ந்தோன் கூற்றே'**

**- தொல்: 928,929,930**

(இவற்றின் பொருள்:

சிறியோர் பெரியோரிடத்தில் ஒன்றை 'ஈக' எனல்வேண்டும்.

இருவரும் ஒப்போராயின், ஒருவர்க்கொருவர் 'தருக' எனல் வேண்டும்.

பெரியோர் சிறியோரிடத்தில் ஒன்றைக் 'கொடுக்க' எனல் வேண்டும்.)

இனி, இவ்வாறு கூறுவது மக்களிடை ஏற்றத் தாழ்வுகளைக் குறிப்பிடாதோ எனில் குறிப்பிடாதாம் என்க. என்னை? கல்வி, அகவை, பெருமை பிற தகுதி நிலைகளைக் குறித்தே இவை கூறப்பெற்றனவே யன்றி, சாதி, பொருளுடைமை முதலிய மாந்த நிலைக் கற்பிப்பு ஏற்றத்தாழ்வுகளைக் குறித்தன்று என்றுணர்க.

இனி, இச் சொற்களின் வளர்நிலை வருமாறு:

ஈ - ஈக - ஈகை - ஈதல்.

தா - தருக - தருகை - தருதல்.

கொடு - கொடுக்க - கொடை - கொடுத்தல்.

இச் சொற்களே யன்றி, வேறுசில சொற்களும் ஈகைத்தன்மையைக் குறிக்கும் என்றுணர்க. இவற்றை உள்ளடக்கிய அவ்வனைத்துச் சொற்களும் இவை:

அளித்தல், அருளல், ஆற்றுதல், இடுதல், ஈதல், ஈன்றல், கொடுத்தல், தருதல், நல்கல், பயத்தல், வழங்குதல் - ஆகியன.

எடுத்துக்காட்டுகள்:

அளித்தல் :

**'இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்**
**தான்கண் டனைத்திவ் வுலகு'** - *387*

அருளல் :

**'தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்**
**அருளாதான் செய்யும் அறம்'** - *249*

ஆற்றுதல்:

**'அற்றார்க்கொன்(று) ஆற்றாதான் செல்வம் மிகநலம்**

**பெற்றாள் தமியள்மூத் தற்று'** - 1007

**'ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை**

**வைத்திழக்கும் வன்க ணவர்'** - 228

அதுமட்டுமன்று 'இவ்வுலகில் நாம் குடும்பம் குடும்பமாகக் குலம்குலமாக, இனம் இனமாக வாழ்வதும், ஆண்பெண்ணாகச் சேர்ந்து இல்லறம் பேணுவதும்கூட, மற்றவர்களுக்கும் உதவி, நாமும் இன்பம் பெறத்தான்' என்று வாழ்வியல் நுட்பம் கூறுவார் - அவர்

**'இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**

**வேளாண்மை செய்தல் பொருட்டு'** - 81

இவ்வாறு, ஆசிரியர் ஈகைத் தொடர்பாகப் பல்வேறு இடங்களில், பல்வேறு கோணங்களில் கூறும், பல்வகையான வாழ்வியல் தழுவிய நுண்மைக் கருத்துகள் உணரத் தக்கன; உணர்ந்து கடைப் பிடிக்கத் தக்கன. அவற்றுள் சில:

**'பொருளானாம் எல்லாமென்(று) ஈயாது இவறும்**

**மருளானாம் மாணாப் பிறப்பு'** - 1002

**'ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்கொன்(று)**

**ஈதல் இயல்பிலா தான்'** - 953

**'நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும்**

**வகையென்ப வாய்மைக் குடிக்கு'** - 953

- இவ்வாறு செய்யும் ஈகையறத்தையும் கூட, ஆறறிந்து (கொடுக்கும் முறையறிந்து), அளவறிந்து, (யார்க்கும், எதற்கு, எவ்வளவு என்னும் அளவறிந்து) ஈயச் சொல்லும் ஆசிரியரின் உலகியலும், மாந்தவியல் அறிவும் உணர்ந்து வியக்கத் தக்கதும் வியக்கத் தக்கதும் ஆகும்.

**'ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்**

**போற்றி வழங்கும் நெறி'** - 477

இனி, யாவற்றுக்கும் மேலாக, அவர் அனைவரையும் ஈதல் அறஞ்செய்யப் பணித்தவர், அதற்கென ஒருவரிடம் போய்க் கேட்கும் பொழுதும் சில உளவியலையும் உலகியலையும் எச்சரித்துக் கூறுதல் மிகவும் வியக்கத் தக்கதாம் என்க.

அஃதாவது, தம்மிடம் உள்ளதைக் கனவிலும் மறைக்காதவரிடம் போய்த்தான் ஒருவர் உதவி கேட்க வேண்டும் என்று, உதவி பெற விரும்புவார்க்கு உளவியல் அறிவு புகட்டுவார்.

**'இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்**
**கனவினும் தேற்றாதார் மாட்டு'** - **1054**

இவ்வாறு கூறியவர், அப்படிப் பட்டவரிடத்தும் ஒருவர்போய் இரந்து கேட்பது இழுக்குதான். அதனால் இரவாமல் இருப்பதுதான் சிறப்பு என்றும் தன்மானமும் தன்முயற்சியும் ஊட்டுவது, மாந்தத் தன்மைக்கே மெருகு ஊட்டுவதுபோலும் சிறப்புப் பெறும் கருத்தாகும் என்க.

**'கரவாது உவந்து ஈயும் கண்ணன்னார் கண்ணும்**
**இரவாமை கோடி உறும்'** - **1062**

இக்கருத்தைப் பின்வரும், பிற்காலத்து ஒளவையாரின் பாடல் மேலும் விளக்கப் படுத்திக் கூறுதல் காண்க.

**'உண்ணீர் உண் ணீரென்(று) உபசரிப்பார் தம்மனையில்**
**உண்ணாமை கோடி பெறும்'** - **தனிப்பாடல்**

ஈகையறம் : நூற்சான்றுகள்:

இவ் வீகையறத்தை நம் கழக இலக்கியங்களும் பிற்காலச் சான்றோர்களும் மிகுவாகச் சிறப்பித்துக் கூறுதலும், இங்கு நினைவு கூர்ந்து மகிழத்தக்கது. அவற்றுள் சில எடுத்துக் காட்டுகள்:

**'அறஞ்செய விரும்பு'**
**'இயல்வது கரவேல்'**
**'ஈவது விலக்கேல்'**
**'ஐயம் இட்டு உண்'** - **ஆத்திசூடி:1,3,4,7**
**'ஈரம் உடைமை ஈகையின் அறிக'** - **முதுமொழி:12**
**'அறத்தாற்றின் ஈயாதது ஈகையன்று'** - **முதுமொழி:48**
**'இயல்வது கரத்தலின் கொடுமை இல்லை'** - **முதுமொழி:55**
**'இரப்போர்க்கு ஈதலின் எய்தும் சிறப்பில்லை'** - **முதுமொழி:60**
**'முட்டில் பெரும்பொருள் ஆக்கியக்கால் மற்றது**
**தக்குழி ஈதல் இனிது'** - **இனி.நாற்: 19:3-4**
**'ஈதற்குச் செய்க பொருளை; அறநெறி**
**சேர்தற்குச் செய்க பெருநூலை'** - **திரிகடு:90:1-2**
**'தானம் கொடுக்கும் தகைமை**
**. . . . . . . . . . . . . . .**
**நல்வினை ஆர்க்கும் கயிறு'** - **திரிகடு:23:1-4**

'ஈத்துண்பான் என்பான் இசை நடுவான்' - நான்மணி:59:1
'என்றும் முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள் கொடுப்பர் தீதற்றோர்' - நன்னெறி:1
'பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி ஆக்குபவர் பேறாம் - பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடல்நீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு' - நன்னெறி:3
'முனிவினும் நல்குவர் மூதறிஞர் உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர் - நனிவிளைவில்
காயினும் ஆகும் கதலிதான் எட்டிப்பழுத்(து)
ஆயினும் ஆமோ அறை' - நன்னெறி:28
'இன்சொல் விளைநிலனா ஈதலே வித்தாக
வன்சொல் களைகட்டு வாய்மை எருஅட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈனும். . . .' - அறநெறி:112:1-3
'வாங்கும் கவளத்து ஒருசிறிது வாய்தப்பின்
தூங்கும் களிறோ துயருறா - ஆங்கதுகொண்(டு)
ஊறும் எறும்பிங்(கு) ஒருகோடி உய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று' - நீதிநெறி :37
'கற்றா தரல்போல் கரவாது அளிப்பரேல்
உற்றார் உலகத் தவர்' - நல்வழி:29:3-4
(கற்றா - கன்று ஆ, கன்றுடைய பசு)
'ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆம்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர் - சோ(று)இடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து' - நல்வழி: 32
'நிரப்பிடும்பை மிக்கார்க்கு உதவ ஒன்றீதல்
சுரத்திடை தீரப் பெயல்' - பழமொழி:169:3-4
'படரும் பிறப்பிற்கொன் றியார் பொருளைத்
தொடரும் பற்றினால் வைத்திறப் பாரே
அடரும் பொழுதின்கண் இட்டுக் குடரொழிய
மீவேலி போக்கு பவர்' - பழமொழி:379

*'அச்சமே, ஆயுங்கால் நன்மை, அறத்தொடு*
*கச்சமில் கைம்மாறு, அருள்ஐந்தால் - மெச்சிய*
*தோகை மயிலன்ன சாயலாய் தூற்றுங்கால்*
*ஈகை வகையின் இயல்பு'* - *சிறுபஞ்ச:மிகை:1*

*(இப் பாடலில் மக்கள் தீங்கு வருமே என்னும் அச்சத்தாலும், தங்கட்கு நன்மை கிடைக்குமென்றும், அற உணர்வாலும், இதற்குக் கைம்மாறு கிடைக்குமென்று எண்ணியும், அருள் உணர்வாலும் ஆக ஐந்து காரணங்களுக்காக ஈகையறம் மேற்கொள்வதாகக் கூறப் பெறுகிறது.)*

*'மறுமையும் இம்மையும் நோக்கி ஒருவற்கு*
*உறுமாறு இசைவ கொடுத்தல் - வறுமையால்*
*ஈதல் இசையா தெனினும் இரவாமை*
*ஈதல் இரட்டி யுறும்'* - *நாலடி: 95*

*'வழங்காத செல்வரின் நல்கூர்ந்தார் உய்ந்தார்'* - *நாலடி:277:1*

*'துய்த்துக் கழியான் துறவோர்க்கொன் றீகலான்*
*வைத்துக் கழியும் மடவோனை - வைத்த*
*பொருளும் அவனை நகுமே உலகத்(து)*
*அருளும் அவனை நகும்'* - *நாலடி:273*

*'இரவலர் கன்றாக ஈவார்ஆ வாக*
*விரகிற் சுரப்பதாம் வண்மை - விரகின்றி*
*வல்லவர் ஊன்ற வடிஆபோல் வாய்வைத்துக்*
*கொல்லச் சுரப்பதாம் கீழ்'* - *நாலடி:279*

*'என்னானும் ஒன்றுதம் கையுறப் பெற்றக்கால்*
*பின்னாவ தென்று பிடித்திரா - முன்னே*
*கொடுத்தார் உயப் போவர்'* - *நாலடி:5:1-3*

*'. . . . . . வரையாது கொடுத்தலும்*
*பரிசிலர் வாழ்க்கை பரிசிலர் ஏத்த'* - *சிறுபாண்:217:8*

*'வீந்தவர் என்பவர் வீந்தவ ரேனும்*
*ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரே'* - *கம்பவேள்வி: 30*

*'மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கு கெல்லாம்*
*உண்டிகொடுத்தோர் உயிர்கொடுத் தோரே'* - *மணி:11:95-96*

*மாண்புடை யாளர், கேண்மையர், தத்தம்*
*வழிமுறை ஒழுக்கினில் அமர்ந்தோர்,*

சேண்படு நிரப்பின் எய்தினோர், புரப்போர்த்
        தீர்ந்தவர், தந்தையாய், குரவர்,
காண்தகும் உதவி புரிந்துளோர் - இனையோர்
        ஒன்பதின் மரும்உளங் களிப்ப
வேண்டுறு நிதியம் அளிப்பின், மற்று,ஒன்றே
        கோடியாம் எனமறை விளம்பும்! - காசிகாண்டம்.

'காயா மரமும் வறளாம்
        குளமும் கல்லாவும் என்ன
ஈயா மனிதரை ஏன்படைத்
        தாய், கச்சி ஏகம்பனே!' - பட்டினத்தார்

'நீரினும் சாயல் உடையவன்
நயந்தோர்க்குத் தேரீயும் வண்கை யவன்' - கலி:42:20-21

'இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையும் உடையன்' - கலி:47:5-6

'நிலந்தினக் கிடந்த நிதியமொடு அனைத்தும்
இலம்படு புலவர் ஏற்றகைந் நிறைய
. . . . . . . . . . . . . ஈகை நல்கி' - மலைபடு:575-580

'மண்ணுடை ஞாலத்து மன்னுயிர்க்கு எஞ்சாது
ஈத்து' - பதிற்:15:36

'கண்ணகன் வைப்பின் மண்வகுத்து ஈத்து' - பதிற்.பதிகம்:3-5

'துப்புத் துவர்போக பெருங்கிளை உவப்ப
ஈத்தான்று ஆனா இடனுடை வளன்' - பதிற்:32:5-6

'மழைசுரந் தன்ன ஈகை' - அகம்:238:13

'இரவன் மாக்கள் ஈகை நுவல' - புறம்:24:30

'செந்நீர்ப் பசும்பொன் வயிரியற்கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்' - புறம்9:9-10

'அமிழ்து அட்டாணாக் கமழ்குய் யடிசில்
வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை' - புறம்:10:7-8

'வல்லா ராயினும் வல்லுநர் ஆயினும்

வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை ஆகுமதி' - புறம்:27:15-17
'அதியமான் பரிசில் பெறுஉங் காலம்
நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய்யா காதே' - புறம்:101:5-8
'எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றோ வன்றே
பிறர், வறுமை நோக்கின்று அவன்கை வண்மையே' - புறம்::
'வரையா ஈகைக் குடவர் கோவே' - புறம்:17:40
'நீரின்று அமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே' - புறம்:18:18,19
'ஈயா மன்னர் நாண
வீயாது பரந்தநின் வசையில்வான் புகழே' - புறம்:168:21,22
'யார்க்கும் எளிதே தேர்ஈ தல்லே' - புறம்: 123:2
'இன்று செலினும் தருமே சிறுவரை
நின்று செலினும் தருமே . . . . .
ஈவோர் அரியஇவ் வுலகத்து
வாழ்வோர் வாழஅவன் தாள்வா ழியவே' - புறம்:171:1,2;14,15
'உண்டால் அம்ம இவ் உலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . .
புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்.
. . . . . . . . . . . . . . . . . . . . .
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே! - புறம்:182
'நிற்பாடிய வலங்கு செந்நாப்
பிறரிசை நுவலாமை
ஓம்பா தீயும் ஆற்றல் எங்கோ

**மாந்தரஞ் சேரல் இரும்பொறை ஓம்பிய நாடே' - புறம்:22:31-34**

**'ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்**

**பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்' - புறம்:2:15,16**

**'ஓர்ஐவர் ஈரைம் பதின்மர் உடன்றெழுந்த**

**போரில் பெருஞ்சோறு போற்றாது தானளித்த சேரன்' - சிலப்:29:2,3**

**'பாடுநர்க் கீத்த பல்புக ழன்னே' - புறம்: 221 :1**

**'ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்**

**ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று**

**கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன் றதனெதிர்**

**கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று' - புறம்:204:1-4**

**'அரசுவரின் தாங்கும் வல்லா ளன்னே' - புறம்:327:8**

**'ஈதல் ஆனா விலங்குதொடித் தடக்கை' - புறம்:337:5**

(ஆனா - தவிராத)

**'தனக்கென வாழாப் பிறர்க்குரிய யாளன்' - அகம்:54:13**

இவை போலும் ஈகைச் சிறப்புரைக்கும் சான்றுகள், நம் கழக இலக்கியங்களுள் நூற்றுக்கணக்கில் பரந்திலங்குகின்றன. விரிவான விளக்கங்களை அவற்றுள் கண்டறிக.

**ஈகையின் வகை:**

- இனி ஈகை யறத்தைச் செய்த அரசர்களும், பொருளுடைமைப் பெருஞ்செல்வர்களும், என்னென்ன அற உணர்வுகளிலும், மனநலம் கொண்ட பெருமித மாட்சிமைகளிலும் அதனை மேற்கொண்டார்கள் என்பதை. அவ்வீகைத் தன்மையைப் பெருமைப்படுத்திப் புலவர்கள் புகழ்ந்து கூறிய கூற்றுகளினின்று தெளிவாக அறிதற்கியலும்.

இந்நிலை, இவ்வறத்தை அவர்கள் எத்துணைப் பொதுமை நோக்கோடும் முழு விருப்பத்தோடும் மகிழ்வோடும் கரவின்றிச் செய்தார்கள் என்பதை நாம் உணர்தற்குப் பெரிதும் பயன்படுவதாகும்.

கீழே காட்டப்பெறும் எடுத்துக் காட்டுகளுள், 'ஈகை' என்னும் சொல்லுக்குத் தரப்பெற்றிருக்கும் சிறப்பு அடைச் சொற்கள் ஆழமான பொருளுடையவை. அவை, அவ்வீகையாளரைப் பெருமைப் படுத்தும் வகையிலும், அவ் வீகைத் தன்மையைச் சிறப்பிக்கும் வகையிலும் புலவர்களால் புகலப் பெற்றவை.

அவற்றை ஒரு திரட்டாகப் பார்க்கின்ற பொழுதே

நம் முன்னோர்களால் எத்துணையளவில் கடைப்பிடிக்கப் பெற்று வந்துள்ளதென்பதும், அவற்றை மேற்கொண்டவர்களின் செல்வச் செழிப்புகளை விட, அவர்களின் உள்ளச் செழிப்பு எத்துணை மேம்பாடும், பண்பாடும் கொண்டு விளங்கியுள்ள வென்பதும் நன்கு புலப்படும்.

அவற்றை விரித்துக்கூறாமல், சொல்லளவில் மட்டும் காட்டியிருப்பது, பெருக்கம் அஞ்சி என்க.

**'அளந்து கொடை அறியா ஈகை'** - **புறம்:229:26**

*(அளந்துகொடுத்தல் அறியாத ஈகை)*

**'ஆனா ஈகை அடுபோர் அண்ணல்'** - **புறம்:42:1**

*(அமையாத ஈகை - ஓய்வில்லாத ஈகை)*

**'உவரா ஈகை'** - **புறம்:201:10**

*(வெறுப்பில்லாத ஈகை)*

**'ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகை'** - **புறம்:8:4**

**'ஓம்பா ஈகை மாவேள் எவ்வி'** - **புறம்: 24:18**

**'ஓம்பா ஈகை'** - **பதிற்:42:13**

*(பொருளைப் பாதுகாவாத ஈகை)*

**'கைவள் ஈகைப் பண்ணன்'** - **புறம்:70:13**

*(கையால் வள்ளிய ஈகை)*

**'தண்டா ஈகை'** - **புறம்: 6:26**

*(தணியாத ஈகை)*

**'தவிரா ஈகைக் கவுரியர் மருக'** - **புறம்: 3:5**

**'தாழா ஈகைத் தகை'** - **புறம்:369:28**

*(தாழ்வில்லாத நிரம்பிய)*

**'தாங்கா ஈகை நெடுந்தகை'** - **புறம்:325:15**

*(அளவிலாத ஈகை)*

**'தேற்றா ஈகை'** - **புறம்: 140:9**

*(தெளிவில்லாத கொடை, ஒன்றுகேட்க அதனினும் பெரியது தருதல்)*

**'சேற்றுக் காலவயல் தென்னாறை வாணனைச்**
**சோற்றுக் கரிசிதரச் சொன்னக்கால் - வேற்றுக்**

**களிக்குமா வைத்தந்தான் கற்றவர்க்குச் செம்பொன்**

**அளிக்குமா றெவ்வாறு அவன்'** - தனிப்பாடல்

(இதில் சோற்றுக்கு அரிசிதரக் கேட்டதற்கு, அவன் களிக்கு மாவைத் தந்தான் என்று பழிப்பது போலும் புகழ்வது. களிக்குமா - ஆண்யானை - களிறு. இது வஞ்சகப் புகழ்ச்சியணி).

**'பொய்யா ஈகைக் கழல்தொடி ஆஅய்'** - புறம்:375:71

**'பொழிபெயல் வண்மை'** - கலி:57:12

**'மழை சுரந்தன்ன ஈகை'** - அகம்:238:13

**'வரையா ஈகை உரவோன் மருக'** - புறம்: 43:8

(வரையில்லாத - அளவில்லாத ஈகை)

**'வரையா ஈகைக் குடவர் கோவே'** - புறம்:17:40

**வரிசையறிதல்:**

- இனி, இத்துணை ஈகைச் சிறப்பும், அதைத் தம் பிறவிக் கடனென்று ஆற்றி மகிழ்ந்த கொழித்த பொருள் வளமும், செழித்த மன நலமும் கொண்ட வள்ளண்மை மிக்க அரசரும் பெருந்தகைச் செல்வரும் மிக்கிருந்த அக்காலத்தையே, பொருளுக்காக மட்டுமன்றித் தம் பாவன்மைக்கும் அறிவுப் புலமைக்கும் இழுக்கும் தாழ்ச்சியும் நேராத வகையில், தன்மானமும், பெருமிதமும் கொண்ட புலவர் பெருமக்களும் உடன் இருந்தமையும் இடன் நினைந்து பாராட்டுதற்கும் பெருமைப்படுதற்கும் உரியது.

அறிஞர்களுக்கும் புலவர்களுக்கும் அரசர்களும் செல்வர்களும் ஈகை அளிப்பதாலும், அவர்களைப் பாராட்டிப் பரிசுகள் கொடுப்பதாலும், அவர்களை வெறும் இரவலர்களாக மட்டும் கருதிவிடக்கூடாது என்னும் கருத்தை இந்நூலாசிரியப் பெருமானும், சான்றோர் பிறரும் எடுத்துக் கூறியிருப்பதைக் கருதுதல் வேண்டும். இதற்கு வரிசையறிதல், 'தகுதியறிதல்' என்று பெயர். ஆசிரியர் இதனைச் 'சுற்றந் தழால்' அதிகாரத்தில் இவ்வாறு கூறுவர்.

**'பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்**

**அதுநோக்கி வாழ்வார் பலர்'** - 528

இவ்வுணர்வு, ஈகையறம் மிகச் சிறந்திருந்த அக்காலத்திலேயே, நன்கு உணரப் பெற்றிருந்தது, என்பதற்கும் கழக இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. அவற்றை மிகவும் விரிக்காது, எடுத்துக்காட்டு அளவில் மட்டும் ஒரு சில பாடலடிகளைக் கீழே தருகிறோம்.

ஒருதிசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை யறிதலோ அரிதே பெரிதும்
ஈதல் எளிதே மாவண் தோன்றல்
அதுநற் கறிந்தனை யாயின்
பொதுநோக்கு ஒழிமதி புலவர் மாட்டே.. - புறம்: 121

இது, மலையமான் திருமுடிக்காரியைக் கபிலர் பாடியது.

'பரிசின் மாக்கட்கு வரிசையின் நல்கிப்
பணியியர் அத்தைநின் குடையே' - புறம்:6:16-17
'வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்' - சிறுபாண்: 217
'வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கை' - புறம்: 47: 6
'முற்றிய திருவின் மூவர் ஆயினும்
பெட்பின்று ஈதல் யாம்வேண் டலமே' - புறம்:205:1-2

(பெட்பு - விருப்பம்)

'எழுஇனி நெஞ்சம்! செல்கம் யாரோ!
பருகு வன்ன வேட்கை இல்வழி
அருகிற் கண்டும் அறியார் போல
அகம்நக வாரா முகன்அழி பரிசில்
தாளிலாளர் வேளா ரல்லர்
வருகென வேண்டும் வரிசை யோர்க்கே '
பெரிதே உலகம்; பேணுநர் பலரே! - புறம்:207:1-7
'குன்றும் மலையும் பலபின் ஒழிய
வந்தனென் பரிசில் கொண்டெனன் செலற்கென
நின்ற என்நயந்(து) அருளி ஈதுகொண்டு
ஈங்கனம் செல்க தான்என என்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணாது ஈத்த இப்பொருட்கு யான்ஓர்
வாணிகப் பரிசிலேன் அல்லேன் பேணித்
தினையனைத்து ஆயினும் இனிது, அவர்
துணையன அறிந்து நல்கினர் விடினே' - புறம்:208

(இது, அதியமான் நெடுமானஞ்சியிடம் சென்ற பெருஞ்சித்திரனாரைக் காணாது, 'இதுகொண்டு செல்க' என்று அவன் பிறர்வழி, பரிசில் கொடுத்தனுப்ப, அதனைக் கொள்ளாது, அவர் கூறியது)

**'உயர்ந்துஏந்து மருப்பின் கொல்களிறு பெறினும்**
**தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலென்; உவந்துநீ**
**இன்புற விடுதி யாயின் சிறிது**
**குன்றியும் கொள்வல் கூர்வேல் குமண !' - புறம்:159:22-25**

(உயர்ந்து ஏந்திய மருப்பு(தந்தங்)களை உடைய கொல்யானையைப் பெறினும், முகம் திரிந்து தரும் பரிசிலைக் கொள்ளேன்; மகிழ்ந்து, நீ, யான் இன்புற விரைவாகத் தந்து விடுவையாயின் சிறியதாக குன்றிமணியளவுடைய பொருளாயினும், கூரிய வேலையுடைய குமணனே, நான் பெற்றுக் கொள்வேன்.)

**'வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்**
**உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து**
**வரிசைக்கு வருந்தும் இப் பரிசில் வாழ்க்கை**
**கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி**
**தன்னறி யலன்கொல் என்னறி யலன்கொல்**
**அறிவும் புகழும் உடையோர் மாய்ந்துஎன**
**வறுந்தலை உலகமும் அன்றே அதனால்**
**எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே' - புறம்:206:2-4, 6-9,13.**

(இது அதியமான் நெடுமானஞ்சி பரிசில் நீட்டித்தானை ஔவையார் பாடியது).

**'காதம் இருபத்து நான்கொழியக் காசினியை**
**ஓதக் கடல்கொண்(டு) ஒளித்ததோ - மேதினியில்**
**கொல்லிமலைத் தேன்சொரியும் கொற்றவா நீமுனிந்தால்**
**இல்லையோ எங்கட் கிடம்' - கம்பர் பாடல்-தனியன்**

**'மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ**
**உன்னையறிந் தோதமிழை ஓதினேன் - என்னை**
**விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ உண்டோ**
**குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு' - கம்பர் பாடல்-தனியன்**

**'ஆற்றவும் கற்றார் அறிவுடையார்; அஃதுடையார்**
**நாற்றிசையும் செல்லாத நாடில்லை - அந்நா(டு)**

**வேற்றுநா டாகா; தமவேயாம்; ஆயினால்**
**ஆற்றுணா வேண்டுவ(து) இல்' - பழமொழி:55**

(ஆற்றுணா - ஆறு கண்டு உண்ணும் உணவு - கட்டுச் சோறு).

*கழக எழு வள்ளல்களும் கொடைமடமும்:*

கழகக் காலத் தமிழ வரசர்களுள் மிகப் பெரும்பாலார் ஈகையறம் செறிந்த உள்ளத்தோரே. அவருள் மிகப்பலர் அறிஞர்களை, இரவலர்களை ஆதரித்த வள்ளண்மை உடையவர்களே. இருப்பினும் அவர்கள், எழுவர் மிகவும் சிறப்புறப் பேசப் பெற்றுளர். புலவர்கள் பலரும் அவர்களை மிகவும் போற்றிப் புகழ்ந்துள்ளனர். அவர்கள் கடையெழு வள்ளல்கள் எனப் பெற்றனர். அவர்கள் அவ்வாறு கூறப்பெறுவதால் தலையெழு வள்ளல்கள், இடையெழு வள்ளல்கள், என்று எண்ணப்பெறும் வரிசையரும் - இருந்துள்ளமை விளங்கும். அவரெல்லாரையும் இங்கெடுத்துக் கூறுதல் மிகையாகலானும், அவருள்ளும் ஒரு சிலரை இந்நூலுள் தேவையிடத்து விளக்கலாம் ஆகலானும், கழக இலக்கியங்களுள் மிகுத்துக் கூறப்பெற்ற கடையெழு வள்ளல்கள் எனப்பெறும் கழக எழுவள்ளல்கள் பற்றிய பாக்களை மட்டும் அவர்தம் ஈகைச் சிறப்பு விளங்க எடுத்துக் கூறுவது பொருத்தமாம் என்க.

முதற்கண் கழக எழுவள்ளலரையும் குறிப்பிட்டுப் புகழும் இரு பாடல்கள் வருமாறு:

**பறம்பிற் கோமான் பாரியும், பிறங்குமிசைக்**
**கொல்லி யாண்ட வல்வில் ஓரியும்,**
**காரி யூர்ந்து பேரமர்க் கடந்த**
**மாரி யீகை மறப்போர் மலையனும்,**
**ஊராது ஏந்திய குதிரைக் கூர்வேல்**
**கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினியும்,**
**. . . . . . . . . . . . . . . . . . . . . . .**
**பெருங்கல் நாடன் பேகனும், திருந்துமொழி**
**மோசி பாடிய ஆயும், ஆர்வ முற்று**
**உள்ளி வருநர் உலைவுநனி தீரத்**
**தள்ளாது ஈயும் தகைசால் வண்மைக்**
**கொள்ளார் ஓட்டிய நள்ளியும் - எனவாங்கு எழுவர்' -புறம்:158:4-17**
**"வானம் வாய்த்த வளமலைக் கவாஅற்**
**கான மஞ்சைக்குக் கலிங்கம் நல்கிய**

அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகனும், சுரும்புண
நறுவீ யுறைக்கு நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரல்
பறம்பிற் கோமான் பாரியும், கறங்குமணி
வாலுளைப் புரவியொடு வையகம் அருள
ஈர நன்மொழி இரவலர்க் கீத்த
அழல்திகழ்ந் திமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்
கழல்தொடித் தடக்கைக் காரியும், நிழல்திகழ்
நீலநாகம் நல்கிய கலிங்கம்
மாமலர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த
சாவத் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
ஆர்வ நன்மொழி ஆயும், மால்வரைக்
கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி
அமிழ்துவிளை தீங்கனி ஔவைக் கீத்த
உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்
அரவக்கடல் தானை அதிகனும், கரவாது
நட்டோர் உவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை நாடன் நள்ளியும்; நளிசினை
நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்
குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த
காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . எழுவர்."

- சிறுபாண்: 84-113.

**இவர்தம் முழுப்பெயர்களும் விளக்கமும்:**

**1) பாரி:** - இவன் முந்நூறு ஊர்களையுடைய பறம்பு நாட்டிற்கும் பறம்பு மலைக்கும் உரியவன். தன் முந்நூறு ஊர்களையும் பறம்பு மலையையும் பரிசிலர்க்கே கொடுத்த பெருங்கொடை வள்ளல். 'கொடுக்கிலாதானைப்

*பாரியே என்று கூறினும்' என்று தேவாரம் பாடிய நால்வருள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி நாயனாரால் புகழப் பெற்றவன். இவன் வேள்பாரி எனப் பெற்றான். இவனைப் பாடிய புலவர் கபிலர் நன்னாகனார் முதலியோர்.*

- *வேள்பாரி கொடைமடம் பட்டவன் என்று சொல்லப் பெறுபவன்.*

- *கொண்ட மடம் என்பது 'வரையாது கொடுத்தல் ஆகும்' என்பது திவாகரம்!*

**'கொடைமடம்' என்று சொல்ப வரையாது கொடுத்த லாமே'**

- *என்பது, சூடாமணி (9-10)*

- *அஃதாவது, ஞாயிற்றொளியும், திங்கள் நிலவும் வான மழையும் போல, இன்னோர்க்கு இஃது இவ்வளவு என்று வரையறையின்றி, மாந்தர் உயிர்கட்கும், மற்று விலங்கு, பறவை, நிலத்திணை ஆகிய அனைத்து உயிர்கட்கும் தண்ணளி செய்தலாகும்.*

**'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை' - *322***

**- என்று ஆசிரியர் கூறுதலும் கருதத் தக்கது.**

**'முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்**
**தொல்லை அளித்தாரைக் கேட்டறிதும் - சொல்லின்**
**நெறிமடல் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப**
**அறிமடமும் சான்றோர்க்(கு) அணி' - பழமொழி:361**

**'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்.**
**அதனால், நமரெனக் கோல் கோடாது**
**பிறரெனக் குணங்கொல் லாது**
**ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்**
**திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்**
**வானத் தன்ன வண்மையும் மூன்றும்**
**உடையை யாகி இல்லோர் கையறக்' - புறம்:55:10-16**

- கொடுத்தலாகும்

பாரியும், ஓரறிவுடைய அஃறிணை உயிராகிய பூத்து விளங்கும் முல்லைக் கொடி, பற்றுக் கொம்பின்றித் தரையிலூர்ந்து படர்ந்து கிடந்ததைக் கொண்டு மனம் பொறாதவனாகி, அது படரத் தான் ஏறிவந்த தேரையே பற்றுக் கோடாக்கி நிலைநிறுத்தி விட்டு நடந்து சென்றான்

என்ப.

'பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பின் பாரி' - புறம்: 200:9-12

'சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்குவெள் ளருவி வீழும் சாரல்
பறம்பிற் கோமான் பாரி' - சிறுபாண்.:89-91

'ஊருடன் இரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக்கு ஈத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி' - புறம் :201 : 2-5

'பறம்பு பாடின ரதுவே அறம்பூண்டு
பாரியும் பரிசிலர் இரப்பின்
வாரேன் என்னான் அவர்வரை யன்னே' - புறம்:108 : 4-6

'ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்றும் ஒருங்கீ யும்மே' - புறம்:109:17-18

'முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்' - புறம்:110:3-4

'முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
எல்லைநீர் ஞாலத்து இசைவிளங்கத் - தொல்லை
இரவாமல் ஈத்த இறைவர்போல் நீயும்
கரவாமல் ஈகை கடன்' - புறப்.வெ. 194

**2. ஓரி:**

இவன் வல்வில் ஓரி, ஆதன் ஓரி என்னும் பெயர்களால் அழைக்கப் பெற்றான். கொல்லி மலைக்கும் அதைச் சார்ந்த நாட்டிற்கும் இவன் தலைவன். வன்பரணர், கழைதின் யானையார் என்ற புலவர்கள் இவனைப் பாடியுள்ளனர்.

'சாரல் அருவிப் பயமலைக் கிழவன்
ஓரி . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . .

**ஓங்கிருங் கொல்லிப் பொருநன்**
**ஓம்பா ஈகை விறல்வெய் யோனே!'** - புறம்: 152:11,13-32.

**'மழையணி குன்றத்துக் கிழவன் ஆளும்**
**இழையணி யானை இரப்போர்க் கீயும்**
**சுடர்விடு பசும்பொன் சூர்ப்பமை முன்கை**
**அடுபோர் ஆனா ஆதன் ஓரி**
**மாரி வண்கொடை காணிய'** - புறம் :153:1-5

3. காரி :

இவன் பெண்ணையாற்றின் கரையில் உள்ள மலாடு என்று வழங்கும் மலையமா நாட்டின் அரசன். திருக்கோவலூரிலிருந்து (இற்றைத் திருக்கோயிலூர்) அவன் நாட்டை ஆண்டான். இவன் முள்ளூர் என்னும் மலையை உடையவன். இவன் மலையன் என்றும், மலையமான் திருமுடிக் காரி என்றும் அழைக்கப் பெற்றான். கபிலர், மாறோக்கத்து நப்பசலையார், குடவாயிற் கீரத்தனார் முதலிய புலவர்கள் இவனைப் பாடியுள்ளனர்.

**'வடமீன் புரையும் கற்பின் மடமொழி**
**அரிவை தோள்அளவு அல்லதை**
**நினதென விலை,நீ, பெருமிதத் தையே!'** - புறம்:122:8-10

**இதன் பொருள்:** (இதில், கற்புசான்ற அவன் மனைவியின் தோள் தவிர, நின்னுடையது என்று சொல்ல வேறு ஒன்றும் உனக்கு உடைமையாக இல்லை (பிற பொருள்கள் அனைத்தையும் நீ இரவலர்க்கு ஈந்து பெருமை பெற்றாய்) என்று புலவர் புகழ்மொழியின் நயம் அறிந்து மகிழத் தக்கது.)

**'தொலையா நல்லிசை விளங்கும் மலையன்'** - புறம்:123:3

**'வறிது பெயர்குநர் அல்லர் நெறிகொளப்**
**பாடான் றிரங்கும் அருவிப்**
**பீடுகெழு மலையன் பாடி யோரே'** - புறம்:124:3-5

**'மாரி யீகை மறப்போர் மலையன்'** - புறம்:158:7

**'துஞ்சா முழவிற் கோவற் கோமான்**
**நெடுந்தேர்க் காரி கொடுங்கான் முன்றுறைப்**

பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல்' - அகநா:35:14-16

'கறங்குமணி, வாலுளைப் புரவியொடு
வையகம் அருள
ஈர நன்மொழி இரவலர்க் கீத்த
அழல்திகழ்ந் திமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்
கழல்தொடித் தடக்கைக் காரி' - சிறுபாண்:91-95

'ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையான்' - நற்:170:6-7

'முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி
செல்லா நல்லிசை' - அகம்:209:12-13

4) அதியமான்: இவனுடைய முழுப்பெயர் அதியமான் நெடுமானஞ்சி என்பது. இவன் நெடுமான் என்றும், அதிகமான் என்றும், எழினி என்றும் அழைக்கப்பெறுபவன். இவன் தகடூரை (இற்றைத் தருமபுரி) ஆண்டவன். இவனது மலை குதிரை மலை. இவன் நீண்டநாள் வாழச்செய்யும் கருநெல்லிக் கனியினைத் தான் அருந்தாது ஔவையார்க்கீந்து பெரும்புகழ் பெற்றவன். இவன் பெருவீரன். மழவர் எனப்பெறும் வீர இனத்திற்குத் தலைவன். இவனைப் பாடிய புலவர்கள் ஔவையார், பரணர், பெருஞ்சித்திரனார், பொன்முடியார்.

'பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீத் தனையே' - புறம்:91:8-11

'தென்னிலை மரபினின் முன்னோர் போல
ஈகையங் கழற்கால் இரும்பனம் புடையல்
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
அன்றும் பாடுநர்க் கரியை இன்றும்
பரணன் பாடினன் மற்கொள் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரணடு திகிரி யேந்திய தோளே' - புறம் :99:4,5,11-14

'ஒருநாட் செல்லலம் இருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ

**அணிபூண் அணிந்த யானை இயல்தேர்**
**அதியமான் பரிசில் பெறூஉங் காலம்**
**நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்**
**கோட்டிடை வைத்த கவளம் போலக்**
**கையகத் ததுவது பொய்யா காதே'** - *புறம்:101:1-8*

**'அலத்தல் காலை யாயினும்**
**புரத்தல் வல்லன் வாழ்கவன் தாளே'** - *புறம்:103:11-12*
**'திங்கள் அன்ன வெண்குடை**
**ஒண்ஞாயி றன்னோன் புகழ்மா யலரே'** - *புறம்:231:5-6*

- *கீழ்வரும் பாடலடிகள் அதியமான் மறைந்த பின்றை ஔவையார் பாடிய அவலச்சுவை நிரம்பியவை.*

**'இல்லா கியரோ காலை மாலை**
**அல்லா கியர்யான் வாழும் நாளே'** - *புறம்:232:1-2*

இதன்பொருள்: *(அவனையின்றிக் கழிகின்ற காலையும் மாலையும் இனி இல்லையாகுக; யான் உயிர்வாழும் நாளும் எனக்கு ஒரு பயனும் இல்லாமையால், அவையும் அல்லவாகுக.)*

**'சிறியகள் பெறினே எமக்கீயும் மன்னே**
**பெரியகள் பெறினே**
**யாம்பாடத் தான்மகிழ்ந்து உண்ணும் மன்னே**
**சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே**
**பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே**
**. . . . . . . . . . . . . . . . . . . . . . .**
**நரந்தம் நாறும் தன்கையால்**
**புலவுநாறும் என்தலை தைவரும் மன்னே**
**. . . . . . . . . . . . . . . . . . . . . . .**
**அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ**
**இரப்போர் கையுளும் போகிப்**
**புரப்போர் புன்கண் பாவை சோர**
**அஞ்சொல் உண் தேர்ச்சிப் புலவர் நாவில்**
**சென்றுவீழ்ந் தன்றவன்**
**அருநிறத்து இயங்கிய வேலே**

**ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ**
**இனிப் பாடுநரும் இல்லை**
**பாடுநர்க் கொன்று ஈகுநரும் இல்லை**
**பனித்துறைப் பொன்றை நறைக்கொள் மாமலர்**
**சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்று**
**ஈயாது வீயும் உயிர்தவப் பலவே'** - **புறம்:235**

இதன்பொருள்:

*(சிறிய அளவு கள்ளைப் பெறின் எமக்குத் தருவான். பெரிய அளவு கள்ளைப் பெறின், அதை யாம் உண்டு பாட எஞ்சியதைத் தானும் உண்டு மகிழ்வான். சோறு எல்லார்க்கும் பொதுவாகையால், சிறு அளவுடைய சோற்றினையும் மிகப் பல கலங்களுடன் அனைவருடனும் உண்பான். மிகுந்த அளவு சோற்றுடனும் மிகப் பல கலங்களுடன் அனைவருடனும் உண்பான். . . . . நரந்தம்பூ மணக்கும் கையால், புலால் நாறும் எம் தலையை அன்புடன் தடவிக் கொடுப்பான்.*

*அரிய தலைமையையுடைய பெரிய பாணரின் அகன்ற மண்டையினைத் துளைத்து உருவிக்கொண்டு, இரப்பவர் கைகளையும் தைத்து உருவி, அவனால் புரக்கப்படும் சுற்றத்தாரின் கண்களின் விழிப்பாவைகளையும் தைத்து ஒளிமழுங்கச் செய்து. அழகிய சொற்களை ஆராயும் நுண்ணிய ஆய்வறிவுடையோர் நாவின் கண் போய்த் தைத்து நின்றது, அவனுடைய அழகிய மார்பகத்தில் தைத்த வேல். எமக்குப் பற்றுக் கோடாகிய எம் இறைவன் எவ்விடத்துள்ளானோ?*

*இனிப் பாடுபவர்களும் இல்லை. பாடுபவர்களுக்கு ஒன்று ஈவாரும் இல்லை. குளிர்ச்சியுடைய நீர்த்துறையின்கண், பெரிய அளவு தேனைக் கொண்ட பெரிய பகன்றை மலர், பிறரால் சூடப் பெறாது வீணே வாடிக் கழிந்ததுபோல, பிறர்க்கு ஒன்றை ஈயாமல் மாய்ந்து போகின்ற உயிர்கள் மிகவும் பலவாம்.)*

**5) பேகன்:** இவனுடைய முழுமையான பெயர் வையாவிக் கோப்பெரும்பேகன் என்பது. மலைநாட்டை உடையவன். ஆவியர் குடியைச் சேர்ந்தவன். இவனது ஊர் நல்லூர் என்பது. இவன் காட்டின்கண் சென்றிருந்த பொழுது, மயில் ஒன்று ஆடிக் கொண்டிருந்ததைக் கண்டு, அது குளிரால் நடுங்குவதாகக் கருதி (மயில் ஆடுவது குளிரில் நடுங்குவது போல் இருக்கும்) அதன்மேல் தன் விலையுயர்ந்த, மணிகள் இழைத்த பட்டுப் போர்வையைப் போர்த்து வந்தான். அதனால் இவனையும் கொடைமடம் பட்டவனாகப் புலவர் கூறுவர். இவனைப் பரணர், கபிலர், வன்பரணர், அரிசில் கிழார்,

பெருங்குன்றூர்கிழார் ஆகிய புலவர்கள் பாடியுள்ளனர்.

**'படாஅ மஞ்ஞைக்கு ஈந்த எங்கோ**
**கடாஅ யானைக் கலிமான் பேகன்**
**எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென**
**மறுமை நோக்கின் றோவன்றே**
**பிறர்,வறுமை நோக்கின்றவன் கைவண்மையே'** - புறம்: **141:11-15**

**'கடாஅ யானைக் கழற்கால் பேகன்**
**கொடைமடம் படுதல் அல்லது**
**படைமடம் படான்பிறர் படைமயக் குறினே'** - புறம்:**142:4-6**

**'மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்**
**படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்**
**கடாஅ யானைக் கலிமான் பேக'** - புறம்:**145:1-3**

**6) ஆய் அண்டிரன் :** இவன் அரசனல்லன். வேளாண் பெருங்குடி மகன். பெருநிலக் கிழான். ஆனால், அரசரால் கொடுக்கப்பெறும். 'வேள்' என்னும் பட்டத்தைப் பெற்றவன். பெரும்வீரன் பொதியின் மலைக்குத் தலைவன். அதன் அருகில் உள்ள ஆய்குடி என்னும் ஊரினன். இவன் ஆய் என்றும், அண்டிரன் என்றும் ஆய்அண்டிரன் என்றும் அழைக்கப் பெற்றான். இவன் செல்வம் மிகுந்தவனாதலின் பெரும் வள்ளண்மை மிக்கவனாக இருந்தான். இரவலர்க்கும், புலவர்க்கும், பாணர்க்கும் வாரி வழங்கினான். அவர்களுக்கு யானைகளையும் பிறபொருள்களையும் மிகுதியாகக் கொடுத்தான் இவனுக்கு நீல நாகம் நல்கிய பட்டுடையை ஆலமரத்தின் கீழ் அமர்ந்த கடவுளுக்கு அளித்தான் என்று புலவர்களால் பாராட்டப் பெற்றவன். இவனைப் புகழ்ந்து உறையூர் ஏணிச் சேரிமுட மோசியார், துறையூர் ஓடைகிழார், குட்டுவன் கீரனூர் ஆகிய புலவர்கள் பாடியுள்ளனர். தன் சொத்தையெல்லாம் இரவலர்க்கே வரையாது ஈந்து, இறுதியில் மிகவும் வறுமைப் பட்டு மாய்ந்தான். தன் மனைவியரின் பெற்றாலிதவிரப் பிற பொருள்கள் அனைத்தையும் (மலையும், நாடும், ஊரும், செல்வமும், வீடும்) இரவலர்க்குக் கொடுத்து ஏழையாகி மறைந்தான் என்பர்.

**'கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்**
**ஆடுமகள் குறுகின் அல்லது**
**பீடுகெழு மன்னர் குறுகலோ அரிதே'** - புறம்:**128:5-7**

**இதன்பொருள்:**

(கழல் இடப்பெற்ற வீரவளையை உடைய ஆயது முகில் படியும் பொதியின் மலையை ஆடச் செல்லும் மகள் அணுகின் அல்லது

பெருமை பொருந்திய அரசர் அணுகுதல் அரிது.)

'தீஞ்சுளைப் பலவின் மாமலைக் கிழவன்
ஆஅய் அண்டிரன் அடுபோர் அண்ணல்
இரவலர்க்கு ஈத்த யானையின் கரவின்று
வானம் மீன்பல பூப்பின் ஆனாது
ஒருவழிக் கருவழி யின்றி
பெருவெள் என்னின் பிழையாது மன்னே' - புறம்: 129:4-9

இதன்பொருள்:

(இன்சுளை நிறைந்த பலா மரங்களையுடைய பெரிய மலைக்கு உரிய ஆய் அண்டிரன், கொல்லும் போரைச் செய்யும் தலைவன், இரப்போர்க்குக் கொடுத்த யானைகளின் எண்ணிக்கைக்கு, மேகம் மறைக்காத வானத்தில் பூக்கின்ற விண்மீன்களின் எண்ணிக்கையும், ஈடாகாது. வானில் ஓர் இடத்தும் கருமையில்லாதபடி வானம் முழுவதும் வெளிர்ஆகும்படி மீன்கள் பூக்குமாயின் ஒருவேளை அது பொருந்தலாம்.)

'விளங்குமணிக் கொடும்பூண் ஆஅய் நின்னாட்டு
இளம்பிடி ஒருசூல் பத்துஈ னும்மோ
நின்னுநின் மலையும் பாடி வருநர்க்கு
இன்முகம் கரவாது உவந்துநீ யளித்த
அண்ணல் யானை எண்ணின் கொங்கர்க்
குடகடல் ஒட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே' - புறம்: 130

இதன்பொருள்:

(விளங்குகின்ற மணிகளால் ஆகிய ஆரத்தை உடைய ஆயே! உன்னாட்டில் இளைய பெண்யானை ஒரு கருவில் பத்துக்குட்டிகளைப் போடுமோ? உன்னையும் உன் மலையையும் பாடி வருபவர்களுக்கு இனிய முகத்தை ஒளியாது மகிழ்ந்து நீ கொடுத்த தலைமை யானைகளை எண்ணிப்பார்ப்பின், கொங்கரை மேற்குக் கடல்வரை நீ ஓட்டினாயே, அப்பொழுது செலவிட்ட வேல்களை விட மிகுதியாகவே இருக்கும்.)

'தென்திசை ஆஅய்குடி இன்றாயின்
பிறழ்வது மன்னோஇம் மலர்தலை உலகே' - புறம்: 132:8-9

'மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்

*கேட்பின் அல்லது காண்பறி யலையே*
*காண்டல் வேண்டினை யாயின் . . . .*
*. . . . . . . . . . . . . . . . . . . . . .*
*மாரி யன்ன வண்மைத்*
*தேர்வேள் ஆயைக் காணிய சென்மே'* - *புறம்:133:1-3,6-7*

*'இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்எனும்*
*அறவிலை வணிகன் ஆய்அலன் பிறரும்*
*சான்றோர் சென்ற நெறியென*
*ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே!'* - *புறம்:134*

*'பாடுநர்க்கு அருகா ஆஅய் அண்டிரன்'* - *புறம்:240:3*
*'திண்தேர் இரவலர்க் கீத்த தண்தார்*
*அண்டிரன்'* - *புறம்: 241:1-2*
*'விருந்துஇறை நல்கும் நாடன் எங்கோன்*
*கழல்தொடி ஆஅய் அண்டிரன் போல*
*வண்மையும் உடையையோ ஞாயிறு*
*கொன்விளங் குதியால் விசும்பி னானே'* - *புறம்:374:15-18*

*(ஞாயிறே! எங்கள் ஆய் போல நீ வள்ளண்மை உடையையோ! வானில் வீணாக விளங்குகின்றாயே!)*

7. **நள்ளி :** இவன் பெயர் கண்டீரக்கோப் பெருநள்ளி, கண்டீரக்கோப் பெருநற் கிள்ளி என இருவகையாக வழங்கப் பெற்றுள்ளது. இவன் தோட்டி என்னும் மலைக்கும் அதனைச் சார்ந்த மலைநாட்டிற்கும் காட்டு நாட்டிற்கும் உரியவன். இவன் பெரும் கொடை வள்ளல். இவன் இரவலர்க்கு ஆண் யானைகளையும் பிற பொருள்களையும் வழங்கினான். இவன் பெண்டிரும் பெண்யானை (பிடி)களை வழங்கியதாகவும் கூறப்படுகிறது. இவன் வரலாறு விளக்கமாக இல்லை. இவனை வன்பரணரும் பெருந்தலைச் சாத்தனாரும் பாடியுள்ளனர்.

*'கரவாது*
*நட்டோர் உவப்ப நடைப்பரி காரம்*
*முட்டாது கொடுத்த முனைவிளங்குத் தடக்கைத்*
*துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு*
*நளிமலை நாடன் நள்ளி'* - *சிறுபாணாற்:103-107*

'நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கில் செவ்வழி பண்ணி
வரஎமர் மறந்தனர் அதுநீ
புரவுக்கடன் பூண்ட வண்மை யானே' - புறம்: 149

'புன்றலை மடப்பிடி பரிசிலாகப்
பெண்டிரும் தம்பதம் கொடுக்கும் வண்புகழ்க்
கண்டீ ரக்கோ' - புறம்:151:4-6

'ஆர்வமுற்று
உள்ளி வருநர் உலைவுநனி தீரத்
தள்ளாது ஈயும் தகைசால் வண்மைக்
கொள்ளார் ஓட்டிய நள்ளி' - புறம் :158:14-16

- இங்குக் காட்டப் பெற்ற கழக எழுவள்ளல்களின் வரலாறும், அவர்களின் தாழா ஈகைத் தகைமாண் சிறப்புகளைக் கூறும் ஒருசில பாடலடிகளும், பழம்பெருந் தமிழகத்தில் எத்துணை வளம் பெருகியிருந்த தென்பதையும், அவற்றை உடைய அறம் வளர் நெஞ்சின் மறந்திகழ் வேந்தரும் வேளிரும் எத்துணையளவு ஈகையறத்துச் சிறந்து விளங்கித் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராகத் திகழ்ந்தனர் என்பதையும் ஒருவாறு உணர்த்தின.

ஈகை இயலாதார்: இனி, ஈகையறத்தைச் செய்ய விரும்பியும் தமக்குற்ற ஏலாமையால் பொருள் நலிவு கொண்டவர் உலகமும் அன்றிருந்தது என்பதையும் அறிதல் வேண்டும். நல்கூர்ந்தார்க்கு அறங்கூர்தல் இல்லையாகுதல் இயல்பே என்க. எனவே அது தொடர்பான சில கருத்துகளையும் இவ்விடத்து நினைவு கூர்தல் இருவேறு உலகத்து இயற்கை நிலையை நன்கு விளங்கிக் கொள்ள உதவும் என்க.

'இருள்படு நெஞ்சத்து இடும்பை தீர்க்கும்
அருள்நன்கு உடையர் ஆயினும் ஈதல்
பொருளில் லோர்க்(கு)அஃது இயையாது' - அகம்:335:1-3

'இல்லாதான் ஒல்லாப்பொருள் இலார்க்கு ஈந்தறியான்'
- சிறுபஞ்:3:3

'ஈதல் தீது என்பிலார்க்கு' - சிறுபஞ்ச:59:1

'பிச்சை எனக்கை அகலேந்திக்

*கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண்டு அறியாதார்'* - *சீவக:2929:3-4*

**'கொடுக்கும் பொருள் இல்லான் வள்ளண்மை இன்னா'**

- **இன்னா:39:1**

**'ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்'** - **குறுந்:63:1**

**'செய்வினை மருங்கில் எய்தல் அல்லதை**
**உடையோர் ஈதலும் இல்லோர் இரத்தலும்**
**கடவ தன்மையில் கையற வுடைத்து'** -**புறம்:38:13-15**

**'இன்னா, பொருளில்லார் வண்மை பரிவு'** - **இன்னா:11-4**

**'ஈத்த வகையால் உவவார்க்கு ஈப்பு இன்னா'** - **இன்னா:21:1**

**'இடும்பை உடையார் கொடைஇன்னா'** - **இன்னா:6:3**

**'இல்லார்க்கொன்(று)**
**ஈயாது ஒழிந்தகன்ற காலையும் . . . . .**
**நோயே உரனுடை யார்க்கு'** - **திரிகடு:44:3-4**

- *ஆக, இதுகாறும் கூறிய வற்றால், 'ஈகையறம்' மக்கள் உயிர் வாழ்க்கைக்கே பெருமை வாய்ந்ததென்பதும், அதுவே உலகப் பொதுமைச் சமநிலைக்கு அடிப்படையான நல்லுணர்வு என்பதும், அவ்வறவுணர்வு தமிழினத்தில் தொன்று தொட்டே தோன்றி வளர்ந்து பெருகிய பண்பாடு என்பதும், அதுவும் கற்றார்க்கும் வறுமையுற்றார்க்கும் ஏதிலர்க்கும் ஏழையர்க்கும், இயலாப் பிறர்க்கும் அவரவர் தகுதி, வரிசை தேவையறிந்து செயல்படுதல் வேண்டும் என்பதும், அத்தகைய வள்ளலர் நந்தமிழகத்தே பலர் வாழ்ந்திருந்தனர் என்பதும், அவ்வறம் செய்யவியலாத ஏழையரும் உள்ளனர் என்பதும் பல்வகையானும் உணர்த்தப் பெற்றன.*

*இனி, இவ்வறவுணர்வு அறிவியல் வளர்ச்சி பெற்று வரும் இக்காலத்துப் படிப்படியே குன்றிக் குறைந்து தேய்ந்து மறைந்து வருதல் மிகப்பெரிதும் வருந்தத் தக்கதாம் என்க. ஒருவருக்கொருவர் உதவிக்கொள்ளும் நல்லுணர்வாகிய இவ்வீகையறப் பண்பு மக்கள் மனத்துள் மறைந்து விடின், அறவுணர்வு இருண்டு விடுமோ என்னும் அச்சம் சான்றோர்க்கு ஏற்படுவது இயற்கை என்க. இவ்வறம் மேம்பட்டுச் செழிப்பதற்கு இங்குக் கூறப்பெற்ற கொழுமைக் கருத்துகளை பயன்படுதல் வேண்டும்.*

- *ஒப்புரவுணர்வு பெருங்கடல், பேராறுகள் போன்றதெனின், ஈகைவுணர்வு, ஏரி, குளம், குண்டு, குழி, கிணறு, ஊற்று போன்ற நீர்நிலைகளை ஒத்தது, என்க. எனவே, அதனையடுத்து இவ்வதிகாரம் வைக்கப்பெற்றது.*

## உ௨க. வறியார்க்(கு)ஒன்று ஈவதே ஈகைமற் றெல்லாம் குறியெதிர்ப்பை நீர(து) உடைத்து. - 221

பொருள்கோள் முறை: இயல்பு

பொழிப்புரை: *வறுமை உடையவர்க்குத் தம்மால் இயன்ற ஒன்றைத் தருவதே ஈகை ஆகும். மற்றக் கொடையெல்லாம் பெற்றவர் திருப்பிச் செலுத்தும் குறித்த எதிர்ப்பை உடையதாகும்.*

சிலவிளக்கக் குறிப்புகள்:

1) **வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை :** *வறுமை உடையவர்க்குத் தம்மால் இயன்ற ஒன்றைத் தருவதே ஈகை ஆகும்.*

*வறியார்: வறுமை உடையவர்.*

*வறுமை - இல்லாமை.*

*பொருள் இல்லாமை.*

*நுகர்வு இல்லாமை.*

- *ஒன்று. தம்மால் இயன்ற ஒன்று. - இதற்குப் பலரும், 'அவர் வேண்டியது ஒன்றை' என்றே பொருள் கூறுவர். - ஒன்றும் இல்லாத ஏழை எதை வேண்டினும் தருவது என்பது எல்லார்க்கும் இயல்வதன்று.*

- *வறியவன் என்பவன் தம்மினும் இல்லாதவன். அவனுக்குக் கொடுப்பவன் எல்லாவற்றாலும் நிறைந்தவன் என்று எதிர்ப்பாக்க இயலாது. இருந்து கொடுப்பின் தவறில்லை. கொடுப்பவனிடம் இல்லாத ஒன்றை வறியவன் கேட்பின் அவனால் தர இயலாதன்றோ. எனவே இயன்ற - தன்னால் முடிந்த ஒன்றை அவனுக்குத் தருவதே இயல்வதும், உலகியலும் ஆகும் என்க. அந்த அளவு செய்தலே அறமாகும். இயலாத ஒன்றைச் செய்ய முடியாமல் மறுத்தலைவிட அல்லது இல்லை என்று கூறுவதைவிட, இருக்கின்ற ஒன்றைத் தருவதே சாலும் என்க. என்னை? ஓர் ஏழை, மற்றொருவனிடம் உணவுப் பொருள்கள் வாங்க ஒரு தொகை கேட்பின், அத்தொகை முழுவதும் தன்னிடம் இல்லாத ஒருவன், அவன் கேட்பதில் அரைப்பங்கோ காற்பங்கோ தர இயலுமெனின் அதைத் தருவதே சிறப்பாம். அல்லது தன்னிடம் தொகை இல்லாத நிலையில், தன் பயன்படுத்தத்திற்கு வைத்திருக்கும் உணவுப் பொருள்களைத் தருவதிலும் குற்றமில்லை யென்க.*

- *எவ்வாறானும் ஒருவனுக்கு இயன்றதைத்தான், கேட்பவனுக்குத் தர முடியுமே தவிர, அவன் விரும்பியதைத் தருவது அவனினும் பல*

மடங்கு உயர்ந்த செல்வனாலேயே தர இயலும். இங்குக் கூறுவது அது போலும் சிறப்புக் கொடையாக இருத்தல் இயலாது. பொதுவான மக்களிடம் இயல்பாக இருக்க வேண்டிய ஈகையுணர்வே இங்குச் சுட்டப் பெறுவதால், தம்மால் இயன்றது என்னும் பொருளே பொருந்துவதாகும் என்க.

ஈவதே ஈகை: தருவதே ஈகையாகும். இவ்விடத்துப் பாவாணர் காட்டும் 'ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே' என்னும் தொல்காப்பிய நூற்பாக்கருத்து பொருந்தாது; வறியவன்.

**2) மற்றெல்லாம் குறியெதிர்ப்பை நீரது உடைத்து :**

மற்றக் கொடையெல்லாம் திருப்பிச் செலுத்தும் குறித்த எதிர்ப்பை உடையதாகும்.

குறியெதிர்ப்பை: திருப்பிச் செலுத்தும் குறித்த எதிர்ப்பை.

- இச்சொல்லுக்குப் பரிமேலழகர், 'அளவு குறித்து வாங்கி அவ் வாங்கிய வாறே எதிர் கொடுப்பது' என்று பொருள் தருவார்.

பாவாணரும், 'அளவு குறித்துக் கொடுத்து அவ்வளவில் திரும்பப் பெறும் கடன்' என்றே விரிப்பர்.

- அவர்கள் கூறுவது 'கடனே'யன்றி ஈகையன்று. ஒப்புப் பேசிக் கொடுத்து வாங்குவது, கடன்.
- இவ்விடத்தில் குறியெதிர்ப்பை யென்பது வாங்கியதை அவ்வாறே திரும்பப்பெறும் நோக்கத்தில் கொடுப்பது என்னும் பொருளுடையதன்று.
- நூலாசிரியர், 'மற்றெல்லாம்' என்று குறிப்பிடுவது, 'மற்ற ஈகையெல்லாம்' என்று பொருளாகுமே தவிர 'கொடுத்து வாங்கும்' பொருளை அப்படியே தருவது என்னும் பொருளைத் தராது.
- எனவே 'கொடுத்த பொருளைக் கொடுத்த அளவிலேயே திரும்பப் பெறும் நோக்கத்தை உணர்த்தும் சொல்லாக இங்கு அது பயன்படுத்தப் பெறவில்லை' என்பதை உணரவேண்டும்.
- மற்றெல்லாம் 'என்னும் சொல்லுக்கு' மற்ற ஈகையெல்லாம் என்றே பொருள் கொள்ள வேண்டியிருப்பதால் அவ்வாறு பொருந்தாது. எனவே,'குறியெதிர்ப்பை நீரது' என்றால்; 'ஏதோ ஒரு வகையில் திருப்பிச் செலுத்தும் எதிர்பார்ப்புத் தன்மை' என்றுதான், இவ்விடத்தில் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

- அவ்வாறு திருப்பிச் செலுத்தப் பெறுவது, காலத்தாலும் இடத்தாலும் அதே பொருளாகவும் இருக்கலாம்; அல்லது செயல் உதவியாகக் கூட இருக்கலாம்; இந்த நிலையே ஆசிரியரால் இங்குச் சுட்டப் பெறுவது என்பது தெளிக.

- வறுமையில் உள்ள ஒருவன், தான் பிழைத்துக் கொள்வதற்கு என ஒரு தொழில் முதலீட்டை எதிர்பார்க்கிறான் என்று அறிந்து, ஒருவன் அவனுக்கு ஒரு தொகை கொடுத்து அவனை அத்தொழில் தொடங்கச் செய்கிறான். அவன் அம்முதலீடு கொண்டு உழைத்துச் செல்வன் ஆகிறான். ஆனபின், தான் வாங்கிய அத்தொகையைப் பெற்றவனிடம் அவ்வளவிலேயோ அல்லது அதற்குக் கூடுதல் சேர்த்தோ திருப்பிச் செலுத்த வருகிறான். முன்னர் இவனுக்கு தொகை கொடுத்து உதவியவன், அதைப் பெற்றுக் கொள்வான் எனில் அஃது ஈகையன்று. பெற்றுக் கொள்ள விரும்பிலன் எனில் அஃது ஈகையாகும். அவ்வாறும் நிகழலாம்.

- இஃதிவ்வாறன்றித் தொகை பெற்றவன், தான் பெற்றதற்கும் மேலாகத் தனக்கு உதவியவனுக்கு வேறு ஒரு பொருளைக் கொடுப்பதோ அல்லது செயலுதவி செய்வதோ, அதனை அவன் பெறுவதோ கூட ஈகையன்று.

- அவ்வாறு அவன் எதிர்ப்பார்த்துக் கொடுத்திருப்பின் அதுதான் 'குறியெதிர்ப்பை நீரதுடைத்து' ஆகும். 'குறியெதிர்ப்பைக்கு இன்னொரு பொருள், 'கைம்மாறு' என்றும் பொருள் கொள்ளலாம். அவ்வாறு கொண்டால் அச் சொல்லுக்குப் பொருள் ஏதோ, ஒருவகையில் திருப்பிச் செலுத்தும் எதிர்பார்ப்பு' என்பதேயாகும்.

- இந்தச் சொல் கழக இலக்கியங்களுள் வேறு இடங்களில் பயன்படுத்தப் பெற்றிருப்பதும், ஏறத்தாழ இதே பொருளை வழங்குவதும் நுணித்து உணரலாகும்.

**'உயிர்க்குறி யெதிர்ப்பைப் பெயலருங் குறைத்தே' - நற்:93:12**

**'நெடுங்குறி யெதிர்ப்பை நல்கியோர்க்கும்' - புறம்:193:4**

**'கூற்றும் குறியெதிர்ப்பைக் கொள்ளும் தகைமைத்தே' -முத்தொள்:26:3**

3) ஆசிரியர் ஈகை அல்லது கொடை அல்லது உதவுதல் என்று குறிப்பிடும் இடங்களில், 'தக்கார்க்கு' என்று இரண்டு இடங்களிலும் 'அற்றார்க்கு' என்று ஓரிடத்திலும் குறித்துள்ளார்.

**'தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு**
**வேளாண்மை செய்தல் பொருட்டு' - 212**

**'ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்(கு) ஒன்று**
**ஈதல் இயல்பிலா தான்' - 1006**

**'அற்றார்க்கொன்(று) ஆற்றாதான் செல்வம் மிகநலம்**
**பெற்றாள் தமியள்மூத் தற்று'** - 1007

என்பவை அவை. இவற்றுள் முதலிரண்டு இடங்களிலும் வறுமையுடையவர்களையுங்கூடத் 'தக்கார்' என்னும் சொல் குறிக்கும்.

'அற்றார்' என்னும் சொல் 'பொருளற்ற ஏழை'யையும், வேறு 'துணையற்றார்' என்னும் பொருள்களையுங் குறிக்கும்.

- ஆனால், 'ஈகை' என்னும் செயலுக்கு இலக்கணம் குறிக்கும் இவ்விடத்தில் மட்டும், அவர், 'வறியார்க்கு' என்னும் சொல்லைப் பெய்தது, 'ஏழையர்க்குச் செய்வதுதான் ஈகை' என்று தெளிவுறுத்தவே ஆகும், என்க.

**'ஆற்றுதல் என்ப தொன்று அலந்தவர்க்கு உதவுதல்'** - கலி:133:6

**'பயன்நோக்கா(து) ஆற்றவும் பாத்தறிவு ஒன்றின்றி**
**இசைநோக்கிச் செய்கின்றார் ஈகை**
**. . . . . . . . . . . . . . . . . .**
**கூலிக்குச் செய்துண்ணும் ஆறு'** - பழமொழி:40:1,2,4

**'ஏற்றகை மாற்றாமை என்னானும் தாம்வரையாது**
**ஆற்றாதார்க்கு ஈவதாம் ஆண்கடன் - ஆற்றின்**
**மலிகடல் தண்சேர்ப்ப! மாறீவார்க்கு ஈதல்**
**பொலிகடன் என்னும் பெயர்த்து'** - நாலடி: 98

**'இம்மை செய்தது மறுமைக் காம்எனும்**
**அறவிலை வணிகன் ஆய்அலன்'** - புறம்:134:1-2

**'ஆற்றுநர்க்கு அளிப்போர் அறவிலை பகர்வோர்**
**ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்**
**மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை'** - மணி:11:92-94

**'வைப்பானே வள்ளல் வழங்குவான் வாணிகன்'** - சிறுபஞ்ச:30

**'இம்மையாற் செய்ததை இம்மையே யாம்போலும்**
**உம்மையே யாம் என்பர் ஓரார்காண்'** - திணைமாலை:123

**'தொடுத்த வறுமையும் பயனும் தூக்கி வழங்குநர்போல்'** - திருவிளை. வாதவூ: 3

**'ஆற்றா மாக்கட்கு ஆற்றுந் துணையாகி'** - மணிமே:17:64

**'சிறுநன்றி இன்றிவர்க்குயாம் செய்தக்கால் நாளைப்**

**பெறுநன்றி மன்னும் பெரிதென்று - உறுநன்றி**
**தான்அவாய்ச் செய்வதூஉம் தானமன்று என்பதுவே**
**வான்அவாம் உள்ளத் தவர்'** **- யாப்.விரு:4.மேற்.**

'என்றார் பிறரும்.

4) இத் தொடக்கச் செய்யுளின் கண் ஈகையறத்திற்குரிய தெளிவான விளக்கம் கூறப்பெற்றது.'

## உஉஉ. நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று. - 222

**பொருள்கோள் முறை:** இயல்பு

**பொழிப்புரை:** அறவழிச் செயல்களுக்காகவே என்றாலும்கூடப் பிறரிடமிருந்து பொருள் பெறுவது தீமை தரும். மேலுலகம் இல்லை என்றாலும் பிறர்க்கு ஈவதே நல்லது.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **நல்லாறு எனினும் கொளல் தீது:** அறவழிச் செயலுக்காகவே என்றாலுங்கூட, பிறரிடமிருந்து பொருள் பெறுவது தீமை தரும்.

நல்ஆறு - நல்லாறு - அறவழியான செயல்கள்.

- இதனை 'வீட்டுலகிற்கான நல்லநெறி' என்பார் பரிமேலழகர். 'வீட்டுலகிற்கான' என்பது மதவழிப் பொருள்கோள் மயக்குடையது.
- பாவாணரும் பிறர் சிலரும் இதை வழிமொழிவது இழுக்கு.
- மணக்குடவர், 'நன்மை பயக்கும் நெறி' என்றது ஒருவாறு பொருந்துவது.
- பொதுமையறம் செய்வார் மக்கள் நலத்துக்கான செயல்களைச் செய்ய, சிலபொழுது பிறரிடமிருந்து நன்கொடைகள் பெறுவது வழக்கம். ஆனால் இவற்றையும் கூடத் தன் முயற்சியால் வந்த பொருளைக் கொண்டு செய்வதே நல்லது என்பது ஆசிரியர் கருத்து. என்னை?

**'தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு**
**வேளாண்மை செய்தல் பொருட்டு'** **- 212**

- என்றாராகலின்.

எனினும் கொளல் தீது: என்றாலும்கூடப் பிறரிடமிருந்து பொருள் பெறுவது தீமைதரும்.

- கொளல் என்றல், தாமாக வருவதைக் குறிக்கும்.
- அதைக் கொள்வதே தீது என்றதால் கேட்டுப் பெறுவது அதனினும் தீது என்று குறிப்பு உணர்த்தினார் என்க.
- தீது - தீமை - என்றது, கொடுக்கப்பெறும் பொருள் தவறாக ஈட்டியதாகவும் இருக்கலாம் ஆதலால் அறச்செயலுக்கே இழுக்கு ஏற்படலாம் என்றவாறு.
- அரசுப் பதவியில் உள்ளவர்கள் இவ்வாறு ஈட்டுகின்ற நன்கொடைகள் எவ்வாறான ஈட்டத்திலிருந்தும், கட்டாயப் படுத்தப் பெற்றும், அச்சத்தாலும் கொடுக்கப் பெறுபவை என்று எண்ணிப் பார்த்தால் தீமை விளங்கும். இத்தீமை ஆட்சி இயக்கத்திற்குப் போய் மக்கட்குக் கேடாக முடிகிறது என்பதையும் உய்த்துணர்க.
- இதுபோன்றதே தனிநிலைக் கொடைகள் திரட்டுவதும் அல்லது பெறுவதும் என்க.
- இது தொடர்பாக ஆசிரியர் வேறு இடங்களிலும் கூறுவார்.

**'இன்றி யமையாச் சிறப்பின வாயினும்**
**குன்ற வருப விடல்'** - ***961***

**'ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு**
**இரவின் இளிவந்த தில்'** - ***1066***

- இக்கூற்றுகளால் அறச் செயல்கள்கூடத் தன் முயற்சியால் செய்யப்படவேண்டுமே தவிர, இரந்து பெறுதலோ, அல்லது ஏற்றுச் செய்தலோ கூடா என்றார் என்க.

**'ஏற்பது இகழ்ச்சி'** - **ஆத்திசூடி:8**

**'என்பெறினும் கொள்ளற்க, கொள்ளார் கைமேல்பட'** - **நான்மணி:1:2**

**'அறம்செய் பவற்கும் அறவுழி நோக்கித்**
**திறந்தெரிந்து செய்தக்கால் செல்வுழி நன்றாம்'** - **பழமொழி:159:1-2**

**'நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்**
**அல்லது செய்தல் ஓம்புமின்'** - **புறம்:195:6-7**

**'கண்ணிற் சிறந்தார் தம்மிடத்தும்**
**காழ்த்த மானம் கெடநாவால்**

**பண்ணாற் குரிய அறம்குறித்தும்**
**படர்ந்தொன்(று) இரவார் பெருமையினால்'** - **விநாயக.அரசி:154**

**'கரவாத திண்ணன்பின் கண்ணன்னார் கண்ணும்**
**இரவாது வாழ்வதாம் வாழ்க்கை - இரவின்**
**உள்ளுங்கால் உள்ளம் உருகுமால் என்கொலோ**
**கொள்ளுங்கால் கொள்வர் குறிப்பு'** - **நாலடி:305**

**'. . . . . . . . . . . . . வறுமையால்**
**ஈதல் இசையாது எனினும் இரவாமை**
**ஈதல் இரட்டி யுறும்'** - **நாலடி:95**

2) **மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று:**

*மேலுலகம் இல்லையென்றாலும் பிறர்க்கு ஈவதே நல்லது.*

*மேலுலகம்: மேலே இருப்பதாகக் கருதிக் கொண்டிருக்கும் விண்ணுலகம். அஃதாவது துறக்க (மோட்ச) உலகம்.*

- *இதுபற்றி முன்னரே பல விடங்களிலும் விளக்கப் பெற்றுள்ளது.*
- *புத்தேளிர் வாழும் உலகு (58), அகல் விசும்பு உளார் (25), அவர்களின் தலைவன் இந்திரன் (25) என்பவெல்லாம் அவ்வுலகத் தொடர்பான செய்திகளே.*
- *'மேலுலகம்' என்னும் சொல் இந்நூலுள் இங்கு ஒரே இடத்தில் மட்டுந்தான் பயிலப் பெற்றுள்ளது.*
- *இச்சொல் பிற கழக இலக்கியங்கள் எங்கணும் பயிலப் பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. இடைக்கால இலக்கியமான 'ஏலாதி' என்னும் நூலில் மட்டுமே 'மேலுலகம்' ஓரிடத்தில் வந்துள்ளது.*

*அது,*

**'ஊறுபா டில்லா உயர்தவம் தான்புரியின்**
**ஏறுமாம் 'மேலுலகம்' ஓர்ந்து'** - **ஏலாதி:65:4**

- *இது தவிர, 'மேலோர் உலகம்' என்னும் இணைச் சொற்களைப் புறநானூற்றில் ஈரிடங்களில் காண முடிகிறது.*

*அவை,*

**'மேலோர் உலகம் எய்தினன்'** - புறம் **229:22**

**'காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப**

**மேலோர் உலகம் எய்தினன்'** - புறம்:**240:6**

- இவை தவிர,

'மேல்நிலை உலகம்' என்று 'சிலப்பதிகார'த்திலும் (28-138, 30-124) கூறப் பெறுகிறது.

- இவையன்றித் தேவர், தேவர் உலகம், அமரர், இந்திரன், இந்திரர், இந்திரதிருவன், வானோர், வானுறை மகளிர், வான்தேவர், வான்பதி, வானகத்தார், வானகக் கடவுளர், வானர மகளிர், வானவர், வானவ மகளிர், வானவன், வான வாழ்க்கையர், வானோர், விசும்பிற்கோன் (இந்திரன்), விண்ணவர்கோன், விண்ணவர் தலைவன், விண்ணோர், அமரர், அமரர்க்கரசன், அமரர் கோன், அமராபதி, புத்தேள் உலகம், புத்தேள் நாடு, புத்தேளிர் கோட்டம் - என்றெல்லாம் பலவாறாகத் தொல்காப்பியம் முதல், கழக இலக்கியங்களான பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலெல்லாம் பேசப் பெறுகின்றன.

- திருக்குறளிலும் அமரர் (121) தேவர்(1073), அவ்வுலகம் (247), அகல் விசும்புளார் கோமான் - இந்திரன் (25), புத்தேளிர் வாழும் உலகு (58), புத்தேள் உலகம் (213, 234, 290), புத்தேள் நாடு(966,1323) இருள் சேர்ந்த இன்னா உலகம் (நிரயம், நரகம்) (243) அளறு (நிரயம், நரகம்) (255, 835, 919), வானோர்க்கு உயர்ந்த உலகம் (346) தாமரைக்கண்ணான் உலகு (1103) - என்றெல்லாம் சொற்கள் வருகின்றன.

- இச்சொற்களும் சொற்களுக்கான பொருள்களும் திருக்குறளுக்கு மாசு கற்பிப்பனவாகக் கருதிக்கொண்டு இற்றை நூலறிபுலவோர் சிலரும், உரையாசிரியர் சிலரும், அறிவியல் புலவோர் சிலரும், இச்சொற்களுக்கெல்லாம். அவரவர் மனமும் அறிவும் சென்ற வாறெல்லாம் ஆளுக்கொரு விளக்கமாகச் சொல்லிக் கொண்டுள்ளனர். இவை அறிவியலுக்கும் மெய்யறிவியலுக்கும் வரலாற்றியலுக்கும் பொருத்தமான போக்குகள் அல்ல.

- திருவள்ளுவராகிய இந்நூலாசிரியர் இற்றைக்கு ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்திருந்தவர் என்பது வரலாற்றாசிரியர் பலராலும் ஒப்புக் கொள்ளப் பெற்ற செய்தியாகும்.

- ஆரியமும், வேதவியல் கருத்துகளும் அவர்காலத்துக்கு ஏறத்தாழ ஐநூறு முதல் ஆயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே தமிழகத்தும், தமிழர்களிடையேயும் கால்கொள்ளவும் மனங்கொள்ளவும் நூல்பயில்வு

கொள்ளவும். தொடங்கி விட்டன என்பதும் மறைக்க, மறுக்க முடியாத வரலாற்று நிகழ்வுகளாம், என்க.

- அவ்வாரியவில் கருத்துகளையெல்லாம் பொய்யும், புனைவும், கற்பனையும், ஏமாற்றும், மூடநம்பிக்கைகளும் கொண்டவை என்று கருதியும் ஆய்ந்தும் விலக்கியும், ஏற்கனவே மெய்யறிவியலும், பேரா இயற்கையாம்(370) பேரிறைமைப் பேருண்மையை நுண்ணிதின் உய்த்துணர்ந்து, தேர்ந்து தெளிந்த கொள்கையாகத் தமிழர்களிடத்துக் காழ்த்து வளர்ந்து விளங்கி நின்ற தமிழியல் கொள்கைகளை நிலைநாட்டியும் எழுதப் பெற்றதே இவ்வருந்திறல் பெருநூல் என்றுணர்க.

- இருப்பினும், அற்றை ஆரியப் பூசல்களால் கருத்திழந்து கலங்கி நின்ற மக்களிடை ஒரு சில உண்மைகளை அவர்கள் பாங்கிலேயே சென்று விளக்குவான் வேண்டியே மேலுலகக் கொள்கையையும் அதைச் சார்ந்த சில கருத்துகளையும் மிகுதேவையான இடங்களில் மட்டும் நூலாசிரியப் பெருமான் மேலோட்டமாக வைத்துப் பேசுவார்.

- அந்நிலையால் அவரின் காழ்த்துப் புலர்ந்து பொலிவுற்றுத் திகழும் அவரின் பேரறிவுக்கோ, நுண்மாண் நுழைபுலம் மிக்க அவரின் இந்நூற் படைப்பிற்கோ வந்துற்ற இழுக்கு ஏதுமில்லை என்க. உலகியலும் மாந்தவியலும் மனவியலும் நுண்ணிதின் உணர்ந்த திண்ணியராய் அவர் எண்ணியீன்ற இவ்வரும் பெரும் நூலுக்கு என்றும் எவரும் மருவும் மாசும் கற்பித்து விட முடியாதென்க.

- எனவே, இவ்விடத்து அம் 'மேலுலகம்' என்னும் சொல்லை ஓர் இன்றியமைத் தேவைபற்றிப் பயன்படுத்தியுள்ளார் என்று உணர்ந்து கொள்க.

- அது வேதவியலில் சிற்சில விடங்களிலும் கதைகளிலும், ஈகைக்குரியர் அல்லாராகச் சிலர் குறிக்கப் பெற்று, அவர்கட்கு ஈதல் செய்யக்கூடாதென்றும், அவர்கட்கு ஈந்தால் அறப்பயன் விளையாது என்றும், எனவே அவர்கள் துறக்கம் (மேலுலகம் - விண்ணுலகம்) புகுதல் இயலாதென்றும் மனு முதலிய 'தர்ம' நூல்களுள் கூறப்பெற்றுள்ளன.

- எடுத்துக்காட்டாகக் கீழ்வரும் காசிகாண்டச் செய்யுளைக் காண்க.

**'முகனெதிர் ஒன்றும் பிரியின்மற் றொன்றும்**
**மொழிபவர் விழைவுறு தூதர்,**
**அகன்றகேள் வியிலார் அருமருத்துவர்கள்**
**அரும்பொருள் கவருநர் தூர்த்தர்,**

**புகலருந் தீமை புரிபவர் மல்லர்**
**செருக்கினர் புன்தொழில் தீயோர்**
**இகழ்தரும் இனையோர் ஒன்பது பெயர்க்கும்**
**ஈந்திடல் பழுதென இசைப்பார்'** **- காசிகாண்டம்.**

- அதைத் தகர்ப்பான் வேண்டி 'மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று' என்று அழுத்திச் சொல்ல வேண்டிய தேவை நூலாசிரியர்க்கு, அக்காலச் சூழ்நிலையில் வேண்டுவதாயிற் றென்க.

- மற்று, 'மேலுலகம்' என்பதைச் சிலர் 'புகழுலகம்' 'சான்றோர் உலகம்' என்றெல்லாம் கூறுவது, பொருத்தமில்லை என்று கூறிவிடுக்க. அதற்கு அவர் பெய்துள்ள சொற்களாக மேலே எடுத்துக் காட்டப் பெற்றுள்ளனவே சான்றாம் என்க.

- இல்லெனினும் ஈதலே நன்று: (மேற்கூறப்பெற்ற மேலுலகம் புகுதல்) இல்லையெனச் சில நூல்கள் அல்லது பிறர் கூறினாலும், ஈதலறம் செய்வதுதான் நல்லது.

- நன்று - என்றது. நல்ல பயன்களைத் தரும் எனல் வேண்டி.

- இங்கு, 'எனினும் என்பது இருவழியும் அங்ஙனம் கூறுவாரின்மை விளக்கி நின்றது' என்பார், பரிமேலழகர்.

- அதனினும், 'நிகழ்வருமை கூறி, ஒரோவொருகால் வேற்றுநூல் ஆசிரியர்கள் அவ்வாறு கூறினும்' என்று நிகழ்வு ஐயப் பொருள் கொள்ள வேண்டும்' என்று கூறுதலே பொருத்தம் என்க.

3) இஃது, ஈகை எவ்வகையானும் சிறப்பிழப்பதில்லை என்னும் உறுதி கூறுதலால், முன்னதன் பின்னர் இயைபுகொண்ட தென்க.

## உ௨௩. இலனென்னும் எவ்வம் வரையாமை ஈதல்
## குலனுடையான் கண்ணே உள. - 223

**பொருள்கோள் முறை:** இயல்பு

**பொழிப்புரை:** 'நான் இல்லாத ஏழையாக உள்ளேன்' என்று தன்னிடம் உதவிக்கு வந்தவன் தன் துன்ப நிலையைக் கூறாத முன்பே குறிப்பறிந்தும், அவன் மற்றும் இதுபோல் இன்னொருவரிடம் போய் இரந்து கேளாதவாறும், அவனுக்குக் கொடுத்து உதவுதல், நல்ல குடிமரபில் வந்தவனிடம் உள்ள குணமாகும்.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல் :** 'நான் இல்லாத ஏழையாக உள்ளேன்' என்று தன்னிடம் உதவிக்கு வந்தவன், தன் துன்ப நிலையைக் கூறாத முன்பே குறிப்பறிந்தும், அவன் மற்றும் இதுபோல் இன்னொருவரிடம் போய் இரந்து கேளாத வாறும் அவனுக்குக் கொடுத்து உதவுதல்.

இலன் என்னும் எவ்வம்: இல்லாதவன் எனும் துன்பம்.

எவ்வம் : துன்பம், இழிவு.

**'நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்**
**துன்பங்கள் சென்று படும்'** - **1045**

**'இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்**
**உள்ளுள் உவப்ப துடைத்து'** - **1057**

**'இன்மை இடும்பை'** - **1063**

**'இரப்பு இடும்பையாளன்'** - **நாலடி:282:3**

**'ஈயாய் எனக்கு' என்று இரப்பானேல் அந்நிலையே**
**மாயா நோய் மாற்றிவிடின்'** - **நாலடி:307:2-3**

**'எளியர் இவரென்று இகழ்ந்துரையார்'** - **இனியவை:30**

**'அகனமர்ந்து ஈதல்'** - **93**

உரையாமை ஈதல்: தன்னிடம் உதவிக்கு வந்தவன், தன் துன்ப நிலையைக் கூறாத முன்பே குறிப்பறிந்தும், அவன் மற்றும் இதுபோல் இன்னொருவரிடம் போய் இரந்து கேளாத வாறும் அவனுக்குக் கொடுத்து உதவுதல்.

- இதற்கு உரையாசிரியர்கள் சிலர் இன்னொரு வகையாகவும் பொருள் உரைப்பர்.

- அஃதாவது, 'கொடுப்பவர் நிறைவாகக் கொடாமல், குறைவாகக் கொடுப்பின், பெற்றவர், 'அவரும் இல்லாதவர் போல் இருக்கிறது' என்று பிறரிடம் போய் இழிவாகச் சொல்லாவாறு ஈதல் வேண்டும்' என்பது.

- இவ்விடத்து 'எவ்வம்' என்பது இழிவைக் குறிக்கும்.

- எனவே இத்தொடர்க்கு மூன்று பொருள்கள் பெற வாய்ப்புண்டு. அவை:

1) இரப்பவன் 'தான் இல்லாதவன்' என்று தன் துன்பத்தைக் கூறுமுன் கொடுத்தல்.

2) தன்னிடத்து இரந்தவன் மீண்டும் பிறனிடம் போய் 'தான் இல்லாதவன்' என்று கூறாதபடி கொடுத்தல்.

3) கொடுப்பவன் குறைவாகக் கொடுப்பதைப் பெற்றவன் பிறரிடம் போய் 'அவனும் இல்லலாதவன் போல் இருக்கிறது' என்று இழிவாகக் கூறாதபடி கொடுத்தல்.

- இம் மூன்றுரைகளுள், முதலிரண்டும் மிகப் பொருந்துவன. எனவே அவ்விரண்டையும் ஒன்றாக்கி இங்குத் தரப் பெற்றது. மூன்றாம் நிலை உரை ஒருவாறு பொருந்துவதால், அதனையும் துணையுரையாகக் கொள்வதால் பிழையில்லையாம் என்க.

2) **குலனுடையான் கண்ணே உள :** நல்ல குடிமரபில் வந்தவனிடம் உள்ள குணமாகும்.

- இது தொடர்பாக, ஆசிரியர் பிறவிடங்களிலும் பிற கோணங்களிலும் கூறுவனவும் இங்கு இணைத்துக் கருதத் தக்கனவாம் என்க. அவை:

**'கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்**
**மாறாநீர் வையக்கு அணி'** - 701

**'குறிப்பில் குறிப்புணா வாயின் உறுப்பினுள்**
**என்ன பயத்தவோ கண்'** - 705

**'நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும்**
**வகையென்ப வாய்மைக் குடிக்கு'** - 953

**'கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்னின்று**
**இரப்பும்ஓர் ஏளர் உடைத்து'** - 1053

**'அருத்தியின் 'இலன்'என் னாமுன்**
**அளித்தலும், இலன் என்று அப்பால்**
**உரைத்தில னாகச் சால**
**உதவலும், ஏற்கின் றானும்**
**வருத்துற(வு) இலனென் னாமை**
**வழங்கிட, வரைவில் செல்வம்**
**பொருத்தலும் ஒன்றின் ஒன்று**
**புகழ்மிக விளங்கி நிற்கும்'** - விநாயக புராணம்

**'கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்'** - நாலடி:91:4
**'உரையாமை முன்னுணரும் ஒண்மை உடையார்'** - நாலடி:292

**'மிகப்பேர் எவ்வம் உறினும் எனைத்தும்**
**உணர்ச்சி யில்லோர் உடைமை உள்ளோம்' - புறம்:197:15-16**

**'செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம்**
**பெருமான் முகம்பார்த்த பின்னர் - ஒருநாளும்**
**பூதலத்தோர் தம்மைப் பொருள்நசையால் பாராவாம்**
**காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்' - பழம்பாடல்**

*3) முன் குறளில், 'மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று' என்று கூறியவர், ஈதலுக்கு மேலும் ஒரு நுட்பச் சிறப்பு இதில் கூறியதால், இதனை அதன் பின் வைத்தார், என்க.*

## உஉச. இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர் இன்முகம் காணும் அளவு. - 224

பொருள்கோள் முறை:

**இரந்தவர் இன்முகம் காணும் அளவு**
**இரக்கப் படுதல் இன்னாது.**

பொழிப்புரை: *தன்னிடத்து ஒரு பொருளைக் கேட்டுப் பெற வந்தவரின் முகம் மலர்ச்சி அடையும் அளவுக்கு அவர்மேல் இரக்கப் பட்டுக் கொடுப்பதும் துன்பம் தருவதே.*

சில விளக்கக் குறிப்புகள்:

*1) இரந்தவர் இன்முகம் காணும் அளவு: தன்னிடத்து ஒருபொருளைக் கேட்டுப் பெற வந்தவரின் முகம் மலர்ச்சி அடையும் அளவுக்கு,*

*இன்முகம் - இனிய முகம். தேவைக்கேற்ற அளவு பெற்ற நிலையால் முகம் மலர்ச்சி அடைதல்.*

*காணும் அளவு: அவ்வாறு முகம் மலர்ச்சி அடையும் அளவுக்கு.*

*- முகம் மலர்ச்சி அடைதல் - தேவை கிடைத்ததே' என்று மனம் நிறைவடைதல்.*

*மனம் நிறைவடைந்ததை முகம் மலர்ச்சி அடைவதன்வழி அறிதல், இயலும் என்க. என்னை?*

**'முகத்தினும் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்**
**காயினும் தான்முந் துறும்' - 707**

**'முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி**
**உற்றது உணர்வார்ப் பெறின்'** - **708**

2) **இரக்கப் படுதல் இன்னாது** : இரக்கப்பட்டுக் கொடுப்பதும் துன்பம் தருவதே.

இரக்கப்படுதல் இன்னாதென்றது, வேண்டியவர் தேவைக்கும், அவர் முக மலர்ச்சி அடையுமாறும் ஈதல், தன் உடைமை முழுவதும் தீர்க்குமாறு இருப்பின் கொடுப்போன் அடைவது துன்பமே என்க.

இவ்விடத்துப் பரிமேலழகர் 'எல்லாப் பொருளும் ஈதல் வேண்டும் என்பது பெறப்பட்டது' என்பார்.

- இஃது, அத்துணைச் சரியன்று. ஆசிரியர் கருத்தும் அதுவன்று.

- 'கரும்பு சுவையுள்ள தென்று வேருடன் பிடுங்குவதா?' 'கீரையைத் தழையரியாது வேருடன் பிடுங்குவதா?' 'தனக்கு மிஞ்சித்தான் தான தருமம்' 'வித்துக் குற்றி உண்பதா?' என்னும் வழக்குப் பழமொழிகளை ஓர்க.

- தன்னை இழக்கின்ற அளவுக்கு ஈகை செய்வது கூடாது என்பதே ஆசிரியர் கருத்தாம் என்க. என்னை?

**'ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்**
**போற்றி வழங்கும் நெறி'** - **477**
**'உளவரை தூக்காத ஒப்புர வாண்மை**
**வளவரை வல்லைக் கெடும்'** - **480**

- என்பார் ஆகலின்.

**'ஈத்த வகையால் உவவாதார்க்கு ஈப்பு இன்னா'** - **இன்னா:21:1**

- என்றார், பிறரும்.

3) இதில், 'இரக்கப்படுதலும்' 'அளவும்' என்று வந்திருத்தல் வேண்டும். இரண்டு 'உம்'மைகளும் செய்யுள் திரிபால் தொக்கி நின்றன.

4) சென்ற குறளில் கூறப்பெற்ற குலனுடையான் கண் உள்ள ஈதற் குணமும் அளவிறந்து செல்லுதல் ஈவோனுக்குத் துன்பம் தருவதாகும் என்று எச்சரிக்கையாக இது கூறியதால், அதன் பின்னர் இது வைக்கப் பெற்றது.

## உஉரு. ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை மாற்றுவார் ஆற்றலின் பின். - 225

பொருள்கோள் முறை: இயல்பு

பொழிப்புரை: *தவம் இயற்றுவாரது ஆற்றல் தம் பசியைப் பொறுத்துக் கொள்வதே ஆகும். அது, தன் பசியையும், தன்னை நாடி வந்தார் பசியையும் உணவிட்டுத் தீர்ப்பாரது ஈகையாற்றலுக்குப் பின்னதே ஆகும்.*

சில விளக்கக் குறிப்புகள்:

1) **ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல்** : *தவம் இயற்றுவாரது ஆற்றல் தம் பசியைப் பொறுத்துக் கொள்வதே ஆகும்.*

*ஆற்றுவார்: தவம் செய்பவர். 'ஆற்றுதல்' என்னும் சொல்லும், 'ஆற்றுவார்' என்னும் சொல்லும் இந்நூலுள் பல விடங்களில் பல பொருள்களில் பயன்படுத்தப் பெறுகின்றன.*

- *அவை, செய்தல், செய்பவர், செய்யும் திறனுள்ளவர், வல்லவர், ஆற்றலுடையவர் பொறுத்துக்குக் கொள்பவர் என்னும் பொருள்களில் வந்துள்ளன.*
- *இவ்வோரிடத்தில் மட்டுந்தான் 'ஆற்றுவார்' 'என்னும் சொல் 'தவம் செய்பவர்' என்னும் பொருளில் வந்துள்ளது. அப்பொருள் கொள்ளஙம துணையாயிருப்பது, 'பசிஆற்றல்' என்னும் இணைச்சொல்.*
- *பரிமேலழகர், மணக்குடவர், பரிதியார் காலிங்கர், பாவாணர் அனைவரும் 'தவம் செய்பவர்' என்றே பொருள் கொண்டனர்.*
- *வேறு சிலர் வேறு வகையாகப் பொருள் கொண்டுள்ளனர். அது பொருந்தாது, என்க.*

*ஆற்றல் பசியாற்றல்: அவர்களது ஆற்றல் பசியைப் பொறுத்துக் கொள்வதே ஆகும்.*

- *தவம் செய்பவர் பிறர்போல் உண்ணுதல் செய்யாது, பெரும்பாலும் உண்ணா நோன்பிகளாக இருப்பதால், அவர்கள் பசியைப் பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் உடையவர்களாக இருப்பர். என்னை?*

**'உண்ணாது நோற்பார் பெரியர்'** - **160**

**'உற்ற நோய் நோன்றல்'** - **261**

- *என்று வருவன உண்ணாமையையும் பசிபொறுத்தலையும் குறித்தன.*

- எனவே, 'ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல்' என்னும் தொடர்க்குத் 'தவம் இயற்றுவார் ஆற்றல் பசியைப் பொறுத்துக் கொள்வதே ஆகும்' என்று பொருள் கொள்வதே சிறந்ததும் பொருந்துவதுமாம் என்க.

- இத்தொடர் போல் ஆசிரியர் வேறு இரண்டு இடங்களிலும் அமைத்துள்ளதும் இங்குக் கவனிக்கத் தக்கது.

**'ஆற்றுவார் ஆற்றல் இகழாமை'** - *891*

**'ஆற்றுவார் ஆற்றல் பணிதல்'** - *985*

- ஆனால், அவ்விரண்டு இடங்களிலும், 'ஆற்றுவார்' என்னும் சொல் 'செயல் முடிக்கும் திறனுடையவர்' என்றே பொருள் பட்டு நிற்கும்.

- ஏனெனில், அச்சொல் 'தவம் செய்பவ'ரைக் குறிக்குமாறு இயைபான வேறு துணைப்பொருள் தரும் சொல்லோ, சொற்களோ இல்லையாகலான், என்க.

*2)* **அப்பசியை மாற்றுவார் ஆற்றலின் பின்:**

அவ் வாற்றலானது, தன் பசியையும் தன்னை நாடி வந்தார் பசியையும் உணவிட்டுத் தீர்ப்பாரது ஈகையாற்றலுக்குப் பின்னதே ஆகும்.

- அப்பசியை மாற்றுவார் : அப்பசியை உணவு இட்டுத் தீர்ப்பார். - இல்லாமல் செய்வார்.

- பசியை மாற்றுவது உணவாகலின், உணவிடல் வருவிக்கப் பெற்றது.

- பசிநோய்' என்றும் 'பிணி' என்றும் பலவாறாகக் கூறப்பெற்றது முன்னரே விளக்கப் பெற்றது. (குறள் எண்.217 இன் விளக்கவுரை) காண்க.

- எனவே, பசியே ஏனைய துன்பங்கள் அனைத்தினும் கொடுமையான தாகலின் அதைத் தீர்ப்பது அல்லது ஆற்றுவதே பேரறமாகக் கொள்ளப்படும். அதற்கு உதவுபவனே பேரறவாணனாக மதிக்கப் பெறுவான். என்னை?

**'நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே!**
**உண்டிமுதற்றே உணவின் பிண்டம்!**
**உணவெனப் படுவது நிலத்தொடு நீரே!'** - *புறம்:18:18-21*

**'மக்கள் யாக்கை உணவின் பிண்டம்'** - *மணி:10:90*

**'மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே'** - *மணி:10:90*

- என்றார் ஆகலின்.

- எனவே, பண்டை அரசரும் அறவாணரும், ஏழையர்க்கும் இரந்தார்க்கும் புலவோர்க்கும் பசி களைதலையே தங்களின் வாணாட் பேரறமாகக் கொண்டு ஒழுகினர் என்க.

*'வயிரிய மாக்கள் கடும்பசி களைய'* - பதிற்:23:6

*'பசியுடை ஒக்கலை ஒரீஇய*
*இசைமேந் தோன்றல்'* - பதிற்:64:19-20

*'விசிபிணி முடிவின் குட்டுவன் காப்பப்*
*பசியென அறியாப் பணையில் இருக்கை'* - அகம்:91:14-15

*'கடும்பின் கடும்பசி களையுநர்'* - புறம்:668:2

*'மெய்யது புரவலர் இன்மையில் பசியே'* - புறம்:69:2

*'கசிவுற்றவென்ன பல்களையொடு*
*பசியலைக்கும் பகையொன்று என்கோ'* - புறம்:136:8-9

*'இரும்பேர் ஒக்கலொடு தின்மனத் தருதலின்*
*அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி'* - புறம்:150:13-14

*'ஈத்த நின்புகழ் ஏத்தித் தொக்கவென்*
*பசிதினத் திரங்கிய ஒக்கலும் உவப்ப'* - புறம்:159:20-21

*'பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை*
*அவிழ்புகு அறியா தாகலின் வாடிய*
*நெறிகொள் வரிக்குடல் குளிப்பத் தண்ணெனக்*
*குய்கொள் கொழுந்துவை நெய்யுடை அடிசில்*
*மதிசேர் நாண்முன் போல நவின்ற*
*சிறுபொ லன்கலஞ் சுற்ற விரீஇக்*
*கேடின் றாகப் பாடுநர் கடும்பென*
*அரிதுபெறு பொலங்கலன் எளிதினின் வீசி*
*நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன்'* - புறம்:160:4-12

*'கடும்பின் கடும்பசி தீர யாழநின்*
*நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்'* - புறம்:163:3-4

*'வாடுபசி யருத்திய பழிதீர் ஆற்றல்'* - புறம்:227:7

*'கடும்பசி கலக்கிய இடும்பைகூர் நெஞ்சம்'* - புறம்:230:9

*'பதடி நின்ற பசிநாட் கண்ணே*
*கோடைக் காலத்துக் கொடுநிழல் ஆகி'* - புறம்:237:2-3

*'நீனிறச் சிதாஅர் களைந்து*
*வெளியது உடீஇஎன் பசிகளைந் தோனே'* - புறம்:385:6-7

*'வானறி யலவென் பாடுபசி போக்கல்'* - புறம்:390:27

- இனி, 'தவம்' என்பது 'தன் உயிர்தான் அறப் பெறுதல்' ஆகிய ஒரு முயற்சி. - 268

- தவத்திற்கு விளக்கம் கொடுக்கையில் பரிமேலழகர், தமக்குற்ற இயல்புப் படி, 'அநித்தமாய் மூவகைத் துன்பத்ததாய் உயிரின் வேறாய உடற்கு வருத்தம் வரும் என்று ஒழியாது தவத்தினைச் செய்ய, பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களான் அநாதியாகத் துன்பம் எய்தி வருகின்ற உயிர், ஞானம் பிறந்து, வீடு பெறும் ஆகலின் தவம் செய்வார்' என்பார்.

- 266 குறள் விளக்கம்.

- அஃதாவது, தவம் செய்பவர் தம் உயிர் மீண்டும் பிறப்பு இறப்புகளால் துன்பம் எய்தக் கூடாது என்னும் நோக்கத்தில், தம்முயிர்க்கு மட்டும் நன்மை தேடவும், தாம் மட்டும் உய்ந்து போகவும் ஆன தந்நல முயற்சியில் மட்டும் ஈடுபடுவார். அவர் மற்றவர்களைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படுவதிலர். பொதுநலம் என்கிற உணர்வே அவர்க்கிருப்பதில்லை. தாமுண்டு, தம் உயிருண்டு, உடலுண்டு என்றும், அவற்றை ஈடேற்றிக் கொள்வதே தம் கடமை என்றும், தம்மைப் பற்றியே எண்ணம் உடையவராகித் தம் நலத்துக்குரிய செயல்களிலேயே ஈடுபடுவார். என்னை?

**'தவம் செய்வார் தம் கருமம் செய்வார்'** **- 260**

என்றார், ஆசிரியரும்.

- இவ்வாறாகத் தவம் செய்வார் தந்நலத்திற்காகத் தமக்குற்ற கருமத்தையே செய்து கொண்டிருக்கையில், 'தானம்' அஃதாவது, ஈகையறம் செய்வார். தமக்குற்ற உலகியற் கடமைகளையும் செய்து கொண்டு பிறர்க்குற்ற பசிக் கொடுமையையும், வறுமை நோயையும் போக்குகின்ற முயற்சியில் 'தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்' (அகம்:54) (மணி:5:73)

**'பிறர்க்கு அறமுயலும் பெரியோன்' ஆக,** **- மணி:11:63**

**'தன்னுயிர்க் கிரங்கா பிறவுயிர் ஓம்பும்**
**மன்னுயிர்ப் புதல் வனாக'** **- மணி:25:116-117**

'தனக்கென்று ஒன்றானும் உள்ளான்(நினையான்)
**பிறர்க்கே உறுதிக்கு உழந்தான்'** **- குண்டல.கடவுள்**

**'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்'** **- புறம்:183:1**

வாழ்கின்ற மக்கள் நலன் கருதுபவனாக, பொதுமையறமும், பொதுநலமும் பேணி,

**'இருள்படு நெஞ்சத்து இடும்பை தீர்க்கும்**
**அருள் நன்கு உடையனாக'** **- அகம்:335:1-3**

**'தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு**
**வேளாண்மை செய்தல் பொருட்டு'** - **212**

- ஆகவே, இறுதிவரை உறுதிமாறாது வாழ்ந்து பெரும்புகழ்பெறுகிறான்.

**'வழியராய் நட்டார்க்கு மாதவம் செய்வாற்'** - **பழ:13:3**
**தத்தமக்கு கொண்ட குறியோ மனம் ஒத்துச்**
**சமத்தனாய் நின்றொழுகும் சால்பு தவமே'** - **பழ:95:1,3**
**'உடம்புஒழிய வேண்டுமேல் உயர்தவம்; மற்றீண்டு**
**இடம்பொழிய வேண்டுமேல் ஈகை'** - **சிறுபஞ்ச:4:1-2**
**'தவம் எளிது; தானம் அரிது'** - **ஏலாதி:30:1**

- மேலும், 'தவம்' செய்வதாகக் கூறிக்கொள்பவனிடத்தில் தான் 'கூடாவொழுக்கம்' என்னும் கரவொழுக்கம் - மறைவொழுக்கம்-உள்ளதாக ஆசிரியர் கருதுவார்.

*(தவம்' அதிகாரத்தை அடுத்துக் 'கூடாஒழுக்கம்' அதிகாரம் வைத்திருப்பதை ஊன்றி உணர்க; நுண்ணிதின் அறிக.)*

- 'தவ'முயற்சி ஒழுங்காகப் பழுதின்றிப் படிறின்றிக் கரவின்றிச் செய்யப் பெற்றால் செய்பவனுக்காகிலும் நன்மை கிடைக்கும். இல்லெனில் தீமையே வரும்.

**'தவம் மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து**
**வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று'** - **274**
**'நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து**
**வாழ்வாரின் வன்கணார் இல்'** - **276**

- என்றும், இன்னும் பலவாறும் ஆசிரியர் கூறுவது, தவ முயற்சியுள் நிகழும் அல்லது நிகழ்த்தப் பெறும் இழுக்குகளையும், ஒழுக்கக் கேடுகளையும் பற்றியே என்க.

**'இம்மைத் தவமும் அறமும் எனஇரண்டும்**
**தம்மை உடையார் அவற்றைச் சலம்ஒழுகல்**
**இம்மைப் பழிஏயும்; அன்றி மறுமையும்**
**தம்மைத்தாம் ஆர்க்கும் கயிறு'** - **பழமொழி:346**

- என்றார், பிறரும்.

மேலும், காட்டில் சென்று தவம் செய்து, தன் பொருட்டான முயற்சியினும், இல்லறத்தின்கண் நின்று 'ஈதல்' அறம் செய்து, உலகவுயிர்களுக்கு நலஞ்செய்து வாழ்தலே தக்கது; உயர்ந்தது; என்பது ஆசிரியர் கருத்தாம் என்க.

**'அறத்தால் வருவதே இன்பம்; மற்றெல்லாம்**

**புறத்த புகழும் இல்'** - 39

**'அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்**

**போஒய்ப் பெறுவ தெவன்'** - 46

**'இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**

**முயல்வாருள் எல்லாம் தலை'** - 47

**(முயல்வார் - தவமுயற்சி உடையவர்)**

**'ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை**

**நோற்பாரின் நோன்மை உடைத்து'** - 48

(நோற்பார் - தவம் செய்பவர்)

'பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி

**வேள்வி தலைப்படா தார்'** - 88

(பற்றற்றார் - தவம் செய்யும் துறவியர்)

**'துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்**

**இன்னாச்சொல் நோற்கிற் பவர்'** - 159

**'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**

**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை'** - 322

**'வேண்டின் உண்டாகத் துறக்க; துறந்தபின்**

**ஈண்டுஇயற் பால பல'** - 342

- எனவே, மேற்கண்ட கருத்துகளின் அடிப்படையில் பெறப்படும் மேலான உண்மையே, தனக்கென முயலும் தவத்தினாரைவிடப், பிறர்க்கென முயலும் ஈகையறம் செய்வார் மேலானவர் என்பதே, என்க.

- 'அப்பசியை மாற்றுவார் ஆற்றலின் பின்' என்பது போலவே வேறு சில இடங்களிலும் ஆசிரியர் தவம் நோற்கும் துறவியரைவிட உயர்ந்தவராக - சிறந்தவராகச் சிலரைச் சுட்டுவர்.

**'உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்**

**இன்னாச்சொல் நோற்பாரின் பின்'** - 160

**'மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு**

**தானம்செய் வாரின் தலை'** - 295

- இவற்றுடன் மேலே கூறிய 47, 48, 159 - ஆகிய வாய்மை உரைகளும் தவம் மேற்கொள்பவரைப் பின்தள்ளியே பேசுவதைக் காண்க.

- இஃதிவ்வாறிக்க, பரிமேலழகர் உரைக்கு 'தெளிபொருள் விளக்கம்' எழுதிய புலவர் கோ. வடிவேலு (1904) அவர்கள் பரிமேலழகரினும் மேற்சென்றாராக, ஒரு பொருந்தாப் புனைவழக்கைக் கூறி அளவையாடுதலும் இங்குக் கவனித்து மறுக்கத் தக்கதாம் என்க.

- பரிமேலழகர், இவ் வொப்பீட்டளவையை விளக்கும் பொழுது,

'தாமும் பசித்துப் பிறரையும் அப்பசி தீர்க்க வொட்டாத தவத்தினரது வல்லமையிலும், தாமும் பசியாது, பிறரையும் அப்பசி தீர்ப்பவராகிய இல்லறத்தாரது வல்லமை நல்லது என்பதாம்' - என்பார்.

- இவருக்கும் காலத்தால் முற்பட்ட உரையாசிரியர்களாகிய, மணக்குடவர், 'பெரியாரது பெருமையாவது, பசியைப் பொறுத்தல்; அதுவும் பெரியதாவது, பிறர் பசியைத் தீர்ப்பாரது பெருமைக்குப் பின்பு என்றவாறு' என்று கூறி, 'இது, தவம் பண்ணுவாரினும் தானம் பண்ணுவார் வலியுடையார் என்றது' என்று முடிப்பர்.

- இனி, பரிதியார்,

'ஆற்றுவார் பசி ஆற்றலே பெரிது; அவன் சருகு பொசித்துத் தவம் பண்ணுவாரிலும் பெரியனாம். எப்படி என்றால், சருகு பொசிப்பார் ஒருவரையும் பசியாற்றமாட்டார்; தன் ஆத்துமாவையும் ஒறுப்பார்; ஆகையால் இவனுக்கு அவர்கள் சரியல்லர் என்றவாறு' - என்பார்.

- இனி, காலிங்கர்,

'தவம்' மானம் முதலாகிய அனைத்துக் காரணங்களையும் தாம் இயற்றுகின்ற அறநெறிக்கு வழுவுதலுண்டாகாமே அவற்றின் மதங்களை ஆற்றி ஒழுகுவாருடைய ஆற்றலின் மிக்க தவமாவது யாதோ எனில், பசியை ஆற்றலாகின்ற பெருந்தவமானது வறியவர் வந்தால் அப்பசிப் பிணிக்கு மருந்தாகிய அமுதம் கொடுத்து மற்றதனை ஒழிப்பாரது புண்ணியத்திற்குப் பின் என்றவாறு' - என்பார்.

- ஈங்கு இவ்வாறு இத்தனையரும் கூறிய கூற்றுக்குப் பின்னரும், இயல்பான தம் வேதவியற் கோட்பாட்டினை ஏதோ தாந்தாம் உயர்த்திப் பிடிக்கக் கடமைப் பட்டவர்போல, அவ் வடிவேற் புலவர், துறவியர்க்குத் துணை நிற்பாராகிக் கீழ்வருமாறு அல் விளக்கம் கூறியிருப்பது வியப்பை அளிக்கிறது. அது,

- 'துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத், திறந்தாரை யெண்ணிக் கொண்டற்று' என்றும், 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்றும், 'தவஞ்செய்வார் தங்கருமம் செய்வார்' என்றும், துறவறத்தாரை உயர்த்திக் கூறி, 'துறந்தார்க்கு துப்புரவு வேண்டி மறந்தார் கொன் மற்றையவர்கள்

தவம்' என்று, இல்லறத்தாரை இழித்துக் கூறிய நாயனார், இக்குறளில் இல்லறத்தாரை உயர்த்திக் கூறிய தென்னெனின்,

**'ஏறடர்த்து வின்முருக்கி**
**எவ்வுலகும் கைக்கொண்டு,**
**மாறடர்த்த வாழி**
**வலவனைக் - காறொதற்**
**கெஞ்சினார் இல்லெனினும்**
**மாய னிகனெடுமால்**
**வஞ்சியா னீர்நாட்டார் மண்'**

என்னும் செய்யுளில், ஒருவகைக் குணம் பற்றிச் சோழனைத் திருமாலுக்கு மேம்பட்டவன் என்று சொன்னாலும், அச்சோழன் எங்ஙனம் காவற்கடவுளாய திருமாலுக்கு உயர்ந்தவன் ஆகானோ அங்ஙனமே, பிறரது பசியைப் போக்கும் நிமித்தம் பற்றி இல்லறத்தாரைத் துறவறத்தார்க்கு மேம்பட்டவரென்று சொன்னாலும், அவர் 'ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும், வேண்டிய வேண்டியாங் கெய்தலும், தன்னுயிர் தானறப் பெறலும், கூற்றங்குதித்தலு முடைய துறவறத்தார்க்கு மேம்பட்டவராகார் என்க' என்பதாம்.

- துறவியரை உயர்த்தியும், இல்லறத்தாரைத் தாழ்த்தியும், நூலாசிரியப் பேராசானையே திரித்துக் காட்டும் தேவை, ஆரியப் பார்ப்பனர்க்கும் இல்லாதவாறு, வடிவேலர்க்கு ஏன் வந்துற்றதோ, அறியலம். அதற்கவர் அறிவு முட்டுப்பாடே காரணம் ஆயினும் ஆகலாம், என்க.

3) தான் பொருள் நிலையில் தாழ்ச்சியுறுதலும் கருதாதவாறு, இரக்கப்படும் பெருமை சான்றவர், தவஞ்செய்வாரையும் விட உயர்ந்தவர் என்னும் கருத்துப்பட இது கூறியதால், முன்னதன் பின்னர் இதனை இறுத்தினார் என்க.

**உ உ சு. அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்**
**பெற்றான் பொருள்வைப் புழி. - 226**

பொருள்கோள் முறை:

**அற்றார் அழிபசி தீர்த்தல்; அஃது**
**பொருள் பெற்றான் ஒருவன் வைப்புழி.**

**பொழிப்புரை:** உண்ணுதற்கு ஏதுமற்றவரின் உயிர்அழிக்கும் பசியைத் தீர்த்து உதவுக. அவ்வறச் செயலே, செல்வம் பெற்றவன் ஒருவன் தன் பொருளைச் சேமித்து வைக்கும் இடமாகும்.

**சில விளக்கக் குறிப்புகள்:**

*1)* ***அற்றார் அழிபசி தீர்த்தல் :*** *உண்ணுதற்கு ஏதுமற்றவரின் உயிர்அழிக்கும் பசியைத் தீர்த்து உதவுக.*

*அற்றார் அழிபசி: உண்ணுதற்கு ஏதுமற்றவர் உயிர் அழிக்கும் பசியை.*

*- 'அழிபசி' என்பது அடுத்து வந்ததால், 'அற்றார்' என்பதற்கு உண்ணுதற்கு ஏதுமற்றவர் என்று கொள்ள வேண்டியதாயிற்று.*

*அழிபசி: உயிர் அழிக்கின்ற பசி. கொடும்பசி - வினைத்தொகை.*

*- முன்னரே ஆசிரியர், 'உடற்றும்(வருத்தும்)பசி' -13 என்றார். மற்றும், 'ஊறு(மிகுந்த)பசி' -734 என்பார்.(இதன் மேல் விளக்கம் 217-ஆம் குறள் விளக்கத்துள் காண்க.) - உயிரையும் மற்ற உயிர்ப்பொருள்களையும் பசி அழிப்பதால் 'அழிபசி' என்றார்.*

**'மானம் குலம்கல்வி வண்மை அறிவுடைமை**
**தானம் தவம் உயர்ச்சி தாளாண்மை - தேனின்**
**கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்**
**பசிவந் திடப்பறந்து போம்' - நல்வழி:26**

**'குடிப்பிறப் பழிக்கும்; விழுப்பம் கொல்லும்;**
**பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்;**
**நாண்அணி களையும்; மாணெழில் சிதைக்கும்;**
**பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்;**
**பசிப்பிணி என்னும் பாவி' - மணி:11:76-80**

*- என்றார், ஆகலின்.*

*தீர்த்தல்: தீர்த்து உதவுக. தீர்க்க. - 'தல்' ஈற்று வியங்கோள் வினைமுற்று.*

*- பசி மாந்த உயிர்களை அழிப்பதால் அதைத் தீர்த்தலே தலையாய அறம் என்பது முன்னுரைக்கப் பெற்றது.*

*2)* **அஃது, பொருள் பெற்றான் ஒருவன் வைப்புழி :**

**அஃது :** *அப்பசியைத் தீர்த்த அறச் செயலானது.*

**பொருள் பெற்றான் ஒருவன் :** *செல்வம் பெற்றவன் ஒருவன்.*

*பெற்றான்: வரப்பெற்றான். தன் முயற்சியால் பொருள் வரப்பெற்றான்.*

**வைப்பு உழி :** வைப்புழி. பொருளைச் சேமித்து வைக்கும் இடம்.

**உழி :** இடம்.

**'இழுக்கல் உடையுழி'** **- 415**

- செல்வம் பெற்றவன் ஒருவன் அதைச் சேமித்து வைப்பதற்குரிய இடமாக, அற்றார் அழிபசி தீர்த்த செயலைக் கருதுதல் வேண்டும் என்றார் என்க.

- அறம் செய்வான் ஒருவனுக்கு அவ்வறமே அனைத்துக்கும் பாதுகாப்பாக வந்து அமையும் என்று முன்னருங் கூறினார்.

**'அன்றறிவாம் என்னா(து) அறஞ்செய்க; மற்றுஅது**
**பொன்றுங்கால் பொன்றாத் துணை'** **- 36**

என்றார் என்க.

- அக்குறள் விளக்கத்தின்கண் அறம் எவ்வாறு ஒருவனுக்குப் பொன்றுங்கால் பொன்றாத் துணையாய் வந்து நிற்கும் என்பது விளக்கப் பெற்றது.

- அதேபோல், அற்றார்க்கு அழிபசி தீர்த்தானுக்கு, அவன் இறுதிநிலையில், அவனிடத்து நன்றிபெற்றவர் அனைவரும், அவன் ஈகையுணர்வு கேட்டார் பலரும், அவனுக்கு எல்லா நிலையிலும் துணையாக வந்து நின்று இயங்குவர் என்க. அக்கால் அவன் முன்பு இரவலர் பொருட்டாகச் செலவிட்ட பொருள் நிலைக்கு மேலாக அவனுக்கு உதவிகள் வந்து சேரும் என்பதுணர்த்தவே அவன் பொருளைச் சேமித்து வைக்கும் இடமாக, அவன்பால் உதவி பெற்றானாக் கூறினார் என்க. என்னை?

**'இனைத்துணைத்(து) என்பதொன் றில்லை விருந்தின்**
**துணைத்துணை வேள்விப் பயன்'** **- 87**

**'தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பயன்தெரி வார்'** **- 104**

**'எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்**
**விழுமம் துடைத்தவர் நட்பு'** **- 107**

**'கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய**
**சுற்றத்தால் சுற்றப் படும்'** **- 525**

**'நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்**
**பண்புபா ராட்டும் உலகு'** **- 994**

என்பார், ஆகலின்.

இதனைப் பிறநூல் ஆசிரியரும் ஒப்புவர்.

நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்' - வாக்குண்டாம்:1
'அறத்தின் ஈட்டிய ஒண்பொருள் அறவோன்
திறத்து வழிப்படூஉம் செய்கை போல' - மணிமே:உலக:3-4
'வைத்ததனை வைப்பு என்று உணரற்க; தாமதனைத்
துய்த்து வழங்கி இருபாலும் - அத்தகத்
தக்குழி நோக்கி அறஞ்செய்க; அஃதன்றோ
வைப்பினில் எய்ப்புஎன் பது' - பழமொழி:37
'சிறந்து நுகர்ந்துஒழுகும் செல்வம் உடையவர்
அறம்செய்து அருளுடையர் ஆதல் . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . அதுவே
சுமையொடு மேல்வைப்பா மாறு' - பழமொழி:215
'முன்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார்
பின்பெரிய செல்வம் பெறலாமோ ? - வைப்போடு
இகலிப் பொருள்செய்ய எண்ணியக்கால் என்னாம் ?
முதலிலார்க்(கு) ஊதியம் இல்' - பழமொழி:312
'உண்ணாது வைக்கும் பெரும்பொருள் வைப்பு இன்னா'
- இன்னா 16:1
'பெற்றி கருமம் பிழையாமல் செய்குறின்
பற்றின்கண் நில்லாது அறஞ்செய்க - மற்றுஅது
பொன்றாப் புகழ்நிறுத்திப் போய்ப்பிறந்த ஊர்நாடிக்
கன்றுடைத் தாய்போல் வரும்' - அறநெறி:61
'அவருக் கென்ன கொடுத்து வைத்தவர்' - சொலவடை

3) இதில், 'பொருள் வைப்புழி' என்னும் சொற்களுக்குப் பாவாணர், 'அறச்செயலால் ஒருவன் தான் தேடிய செல்வத்தை மறுமையில் தனக்குப் பயன்படுமாறு சேமித்து வைக்கும் ஏம வைப்பகத்தைப்(Savings Bank) பெற்றானாவன்' என்று மறுமைப் பொருள் கூறுவது வேண்டாதது. பொருளற்றது. பரிமேலழகரே இயல்பாயிருக்க, பாவாணர் மறுமை கூறியது வியப்பும் வீணுமாகும்.

*4) சென்ற குறளில் பசிக்கு உணவிடுவார் உயர்வைக் கூறியவர் இதில், அத்தகையவரின் அறப்பயனைக் கூறியதால், அதன்பின் இது வைக்கப் பெற்றது.*

**உஉஎ. பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்**
**தீப்பிணி தீண்டல் அரிது. - 227**

பொருள்கோள் முறை: **இயல்பு**

பொழிப்புரை: *என்றும் தனக்குக் கிடைக்கும் உணவைப் பிறர்க்கும் பகிர்ந்து கொடுத்து உண்ணும் பண்பு தழுவியனைப் பசி என்னும் தீய பிணி அண்டுவதில்லை.*

சில விளக்கக் குறிப்புகள்:

*1)* **பாத்துஊண் மரீஇயவனை :** *என்றும் தனக்குக் கிடைக்கும் உணவைப் பிறர்க்கும் பகிர்ந்து கொடுத்து பண்பு தழுவியவனை.*

*பாத்து ஊண்: பகிரப் பெற்ற உணவு.*

*உணவைப் பகுத்து உண்ணுதல்.*

**'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்'** ***- 322***

*என்பார் ஆசிரியர்.*

*பகுத்து - பாத்து*

*- இடைக்குறைந்து நீண்டது.*

*பாத்து - பாத்தி - வரம்பிடப் பெற்ற நிலம்.*

**'பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின்'** ***- 44***

**'தம்மில் இருந்து தமது பாத்து உண்டற்றால்'** ***-1107***

*மரீஇயவனை: மருவியவனை,*

*தழுவியவனை - பழகியவனை.*

*- பண்பு தழுவியவனை.*

*- பகுத்துண்ணுதல் ஒரு பண்பாதலின் 'பண்பு தழுவியவனை' எனவாயிற்று.*

**'பாத்துண்பான் ஏத்துண்பான் பாடு'** ***- ஏலாதி:44:4***

**'பஞ்சப் பொழுதில் பாத்துண்பான். . . .**

**. . . . . . . . . . . . . . . . . . . .**

எண்பதின் மேலும் வாழ்வான்' -சிறுபஞ்ச:77:1-4

' தீதிகந்து
ஒல்வது பாத்துண்ணும் ஒருவனும் . . . .
செல்வர் எனப்படு வார்' - திரிகடு:70:2-4

' . . . . . . . . . . பாத்துண்ணாத்
தன்மை யிலாளர் அயலிருப்பும் . . .
நன்மை பயத்தல் இல' - திரிகடு: 10:3-4

'. . . . . பாத்துண்டு ஆங்கு
இல்லறம் முட்டாது இயற்றலும்
. . . . . . . . . . . . . . . . .
கேள்வியுள் எல்லாம் தலை' - திரிகடு:31:2,4

' . . . . . . . . பாத்துண்ணும்
நல்லறி வாண்மை தலைப்படலும் . . . . .
தொல்லறி வாளர் தொழில்' - திரிகடு:40:2-4

'பாத்துணல் இல்லார் உழைச்சென்(று) உணல் இன்னா'
- இன்னா:21:2

'பற்றிலனாய்ப் பல்லுயிர்க்கும் பாத்துற்றுப் பாங்கறிதல்
வெற்றவேல் வேந்தர்க்(கு) இனிது' - இனி.நா.35:3-4

'பயன்நோக்காது ஆற்றவும் பாத்தறிவு ஒன்றின்றி
இசைநோக்கி ஈகின்றார் ஈகை - வயமாப்போல்
ஆலித்துப் பாயும் அலைகடல் தண்சேர்ப்ப
கூலிக்குச் செய்துண்ணும் ஆறு' - பழமொழி:40

' பாத்துண்மின் யாதும்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து' - நாலடி:92:3-4

'நட்டார்க்கும் நள்ளா தவர்க்கும் உளவரையால்
அட்டது பாத்துண்டல் அட்டுண்டல் - அட்டது
அடைத்திருந்து உண்டொழுகும் ஆவதில் மாக்கட்கு
அடைத்தவாம் ஆண்டைக் கதவு' - நாலடி:271

'அமர்துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்
மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய
ஊழி உய்த்த உரவோர் உம்பல்' - பதிற்று: 22:9-11

**'இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்**
**கருகென விழையாத தாவில் நெஞ்சத்துப்**
**பகுத்தூண் தொகுத்த ஆண்மை**
**பிறர்க்கென வாழ்திநீ'** - **பதிற்று:38:15-18**

*2)* ***பசியென்னும் தீப்பிணி தீண்டல் அரிது** : பசி என்னும் தீய பிணி அண்டுவதில்லை.*

*- முன் குறளில் 'அழிபசி' என்றவர் இதில் அதனைத் 'தீப்பிணி' என்றார்.*

*தீப்பிணி: தீய பிணி. உடலை எரிக்கும் தன்மையுள்ள தீப் போன்ற பிணி.*

*- மேலும் பசி உடலைத் தீய்த்து உள்ளத்தைத் தீய்த்து அறிவையும் தீய்க்குமாகலின் தீப்பிணி என்பது பொருந்துவதாகும்.*

*- எல்லாரும் கூடி ஒருங்கிருந்து பகிர்ந்து உண்ணும் பண்பு வழக்கம் உள்ள ஒருவன், பசித்திருக்கையில் அவ்வெல்லாருமே கூடி அவனை ஆதரித்து, அவன் வறுமையைப் போக்க உதவுவார்களாகையால், அவனைப் பசிப்பிணி தீண்டல் அரிது என்றார்.*

*- இதேபோல், 'விருந்தோம்பல்' அதிகாரத்தும் 'நாளும் விருந்தோம்புவான் வாழ்க்கை வறுமையால் வாடுவது இல்லை' என்னும் பொருள்படுமாறு,*

**'வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை**
**பருவந்து பாழ்படுதல் இன்று'** - **83**

*(பருவரல் - துன்பம் - வறுமைத்துன்பம்)*

*- என்று கூறினார். இதன் விளக்கம் அங்குக் காண்க.*

*- இனி, இவைபோலும், சில நல்லுணர்வுகளைக் கொண்டவர்களைத் துன்பம் வந்து நெருங்குவதில்லை என்பதை வேறு சில இடங்களிலும் ஆசிரியர் உணர்த்துவார். அவை:*

**'வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு**
**யாண்டும் இடும்பை இல'** - **4**

**'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்'** - **341**

**'எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை**
**அதிர வருவதோர் நோய்'** - **429**

**'இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்**
**துன்பம் உறுதல் இலன்'** - **628**

**'இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்**
**துன்பம் உறுதல் இலன்'** **- 629**

*3) முன்னைய குறளில் கூறப்பெற்ற 'அற்றார் அழிபசிதீர்த்தல்' என்னும் அருளாண்மைக்கு ஒருமேல் விளக்கமாகிய 'பாத்தூண் மருவதலையும்', 'பொருள்வைப்புழி' என்னும் சேமிப்புக்கான ஒரு மேல் விளக்கமாகிய 'தீப்பிணி தீண்டல் அரிது' என்பதனையும் இதில் கூறுவதால், அதன் பின்னர் இஃது அடி கொண்டது.*

## உஉஅ. ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை
## வைத்திழக்கும் வன்க ணவர். - 228

பொருள்கோள் முறை:

**தாம் உடைமை வைத்து இழக்கும் வன்கணவர்,**
**ஈத்து உவக்கும் இன்பம் அறியார் கொல்.**

**பொழிப்புரை:** *தாம் அரிதின் முயன்று ஈட்டிய பொருளைக் காத்து வைத்துப் பின்னர் யாதாம் ஒரு வழியில், அதனை ஒருசேர இழக்கும் கொடிய மனம் படைத்தவர்கள், பிறர்க்கும் அதை ஈந்து அதனால் வரும் இன்பத்தை அறியாதவர்களோ ?*

சில விளக்கக் குறிப்புகள் :

*1)* **தாம் உடைமை வைத்திழக்கும் வன்கண் அவர்:**

*தாம் அரிதின் முயன்று ஈட்டிய பொருளைக் காத்து வைத்துப் பின்னர் யாதாம் ஒரு வழியில் அதனை ஒருசேர இழக்கும் கொடிய மனம் படைத்தவர்கள்.*

**தாம் உடைமை :** *தாம் ஈட்டிய உடைமை. தாம் அரிதின் முயன்று ஈட்டிய பொருள்.*

*- உடைமை யாகும் பொருள்தாமே அரிதின் முயன்று ஈட்டியதாதல் வேண்டும்.*

*வைத்து இழக்கும் : காத்து வைத்துப் பின் யாதாம் ஒரு வழியில் அதனை ஒருசேர இழக்கும்.*

*- வைக்கப்பெற்ற பொருளை இழத்தற்குப் பல வழிகளும் உண்டாகையால், அவற்றுள் ஏதோ ஒரு வழியில் இழத்தல் வேண்டும் என்க.*

- தம் உடைமை வைத்து இழக்கும் என்றதால் 'ஒருசேர' என்று கூற வேண்டியதாயிற்று. தம் உடைமைப் பொருளை வைத்து இழப்பது பற்றி ஆசிரியர் பல இடங்களிலும் கூறுவார்.

'கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடிஉண் டாயினும் இல்' - 1005

'ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்கொன்(று)
ஈதல் இயல்பிலா தான்' - 1006

'அன்பொரீஇத் தற்செற்று அறம்நோக்கா(து) ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்' - 1009

'கரவுள்ளம் உள்ளதூஉம் இன்றிக் கெடும்' - 1069

- சான்றோர் பிறரும் அவ்வாறு உரைப்பர்:

'வழங்கலும் துய்த்தலும் தேற்றாதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம். . . . .
. . . . . . . . . . . . . . . . . . .
நாய்பெற்ற தெங்கம் பழம்' - பழமொழி:151

(தெங்கம் பழம் - தேங்காய்)

'படரும் பிறப்பிற்கொன் றீயார் பொருளைத்
தொடரும்தம் பற்றினால் வைத்திறப் பாரே
அடரும் பொழுதின்கண் இட்டுக் குடரொழிய
மீவேலி போக்கு பவர்' - பழமொழி:379

'ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்' - கொன்றை:4

'வள்ளண்மை இல்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலும் நனிநல்ல - கொன்னே
அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று
பலரால் இகழப் படான்' - நீதிநெறி: 66

'பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைக்கும்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் - கூடுவிட்டிங்கு
ஆவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்' - நல்வழி:22

'இன்னல் தரும்பொருளை ஈட்டுதலும் துன்பமே
பின்னதனைப் பேணுதலும் துன்பமே - அன்னது
அழித்தலும் துன்பமே அந்தோ பிறர்பால்

இழத்தலும் துன்பமே ஆம்' - நீதிவெண்பா:46

'பெரிதணியர் ஆயினும் பீடிலார் செல்வம்
கருதும் கடப்பாட்ட தன்று' - நாலடி:261:3-4

'வெண்மை உடையார் விழுச்செல்வம் எய்தியக்கால்
வண்மையும் அன்ன தகைத்து' - நாலடி:269:3-4

'துய்த்துக் கழியான் துறவோர்க்கொன் றீகலான்
வைத்துக் கழியும் மடவோனை - வைத்த
பொருளும் அவனை நகுமே உலகத்து
அருளும் அவனை நகும்' - நாலடி:273

'கொடுத்தலும் துய்த்தலும் தேற்றா இழுக்குடை
உள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம் - இல்லத்து
உருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்துள்
ஏதிலான் துய்க்கப் படும்' - நாலடி:274

'ஈட்டலும் துன்பம்மற் றீட்டிய ஒண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம் - காத்தல்
குறைபடில் துன்பம் கெடில்துன்பம் துன்புக்கு
உறைபதி மற்றைப் பொருள்' - நாலடி:280

'. . . . . . . . இல்லார்க்கொன்(று)
ஈயாது ஒழிந்தகன்ற காலையும் . . .
நோயே உரனுடை யார்க்கு' - திரிகடு:44:3-4

'வைத்தப் பொருளைத் தான்நுகரான்;
வழங்கான்; இருந்தும் செத்தானே!
செத்த பின்னர் என்செய்வான் ?
தீயார் கொள்வர். ஈட்டுதலான்
மெத்தம் வருத்த மேயன்றி
வேறொன் றில்லை யாதலினால்
பொத்தும் வெறுக்கை நன்றியறம்
புசித்து வழங்க லேயாகும்!' - விநா.அரசி:148

'இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல்
பரந்து வெளிப்படாது ஆகி
வருந்துக தில்லஆய் ஓம்பிய நலனே' - அகம்:276:12-15

**'பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்**
**சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்று**
**ஈயாது வீயும் உயிர்தவப் பலவே'** **- புறம்:235:18-20**

வன்கண்அவர்: வன்கண்மை படைத்தவர்கள், அவர்கள்.

- வன்கண்மை - வீரத்தைக் குறிக்கும் சொல், இங்குக் கொடுமையைக் குறித்தது. கொடிய மனம் உடையவர்கள்.
- தான் அரிதின் ஈட்டிய பொருளைப் பிறர்க்கு ஈயாத கொடிய உள்ளம் படைத்தவர்கள்.

2) **ஈத்து உவக்கும் இன்பம் அறியார் கொல்:** பிறர்க்கும் அதை ஈந்து அதனால் வரும் இன்பத்தை அறியாதவர்களோ?

- ஈத்து உவக்கும் இன்பம்: தான் அரிதின் ஈட்டிய பொருளைத் தேவையான பிறர்க்கு ஈவதும், அதனால் அவர்தம் துன்பம் நீங்கி இன்பம் பெறுவதும் கொடுப்போனுக்கு இன்பம் தருவதாம்.
- இது கொடுத்தலால் வரும் இன்பம். 'ஈகை இன்பம்' என்றார்.
- அறியார் கொல்: இத்தகைய இன்பத்தை அக் கொடிய உள்ளம் உடையவர்கள் அறியாமற் போனார்களோ? என்று இரங்குவாராயினர்.
- ஒரு பெருளைத் தான் நுகர்வதால் ஏற்படும் இன்பத்தைவிட அதைப் பிறர்க்கும் கொடுத்து நுகரும் இன்பம் கூடுதலானது.
- அதனை நாமும் உண்ணாமல் பிறர்க்கும் கொடுக்காமல் வைத்து இழப்பது மிகு துன்பம் என்பதறிக. என்னை?

**'அறத்தான் வருவதே இன்பம்'** **- 39**

**'ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்கொன்று**
**ஈதல் இயல்பிலா தான்'** **- 1006**

- என்றார் இவரும்.

**'உண்ணாது வைக்கும் பெரும்பொருள் வைப்பு இன்னா'**
**- இன்னா: 16:1**

**'ஈதல் இன்பம் வெஃகி மேவரச்**
**செய்பொருள் திறவர் ஆகி'** **- கலி:69:15-16**

**'இட்டுப்பார் உணவைப் பின் உண்டவர்கள்**
**இன்புற்(று) இடுக்கையிலே**
**தொட்டுப்பார் உன்மனத்தை தோன்றுமின்பம்'** **-குடும்ப விளக்கு**

**'செல்வத்துப் பயனே ஈதல்'** - **புறம்:189:7**

**'மல்லல்மா ஞாலத்து வாழ்பவருள் எல்லாம்**
**செல்வர் எனினும் கொடாதவர் நல்கடர்ந்தார்'** - **நாலடி:296:1-2**

**'திருமகன் பெற்றெனச் செம்பொற் குன்றெனப்**
**பெருநல நிதிதலை திறந்து பீடுடை**
**இருநிலத் திரவலர்க் கார்த்தி இன்னணம்**
**செருநிலம் பயப்புறச் செல்வன் செல்லுமே'** - **சீவக:331**

*- என்றார் பிறரும்.*

3) *ஈகையறம் பேணுபவன் பிறர் நன்மைக்கென மட்டும் அன்றித் தன்னுடைய உயிரின்பத்திற்காகவும் அதைச் செய்தல் வேண்டும் என்னும் சிறந்த கருத்தை, மனவியலடிப்படையில், இதில் எடுத்துக் கூறினார். அந்த இன்பத்தை உணராதவன், தான் அரிதின் பெற்ற பொருள் ஈட்டத்தைப் பேணி வைத்திருந்து, இறுதியில் இழந்துபோகும் துன்பத்தைப் பெறுவது வருந்தத் தக்கதே என்றார்.*

4) *முன்னைய குறளில் பாத்தூண் மரீஇயவனைத் தீப்பிணி தீண்டாது என்று கூறியவர், இதில், அத்துடன் அவன் ஈதலின்பமும் பெறுவான் என்றதால், அதன் பின்னர் இஃது அடைவு கொண்டது, என்க.*

## உஉகூ. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய தாமே தமியர் உணல். - 229

பொருள்கோள் முறை:

**நிரப்பிய தாமே தமியர் உணல்,**
**இரத்தலின் மன்ற இன்னாது.**

பொழிப்புரை: *தாம் தேடித் திரட்டி நிரப்பிய பொருளைத் தாமே தமியராக உண்பது, தனக்கில்லை என்று இரந்து உண்பதை விட உறுதியாகக் கொடியது.*

சில விளக்கக் குறிப்புகள்:

1) **நிரப்பிய தாமே தமியர் உணல் :** *தாம் தேடித்திரட்டி நிரப்பிய பொருளைத் தாமே தமியராக உண்பது.*

*நிரப்பிய: தாம் தேடித் திரட்டி நிரப்பிய பொருளை.*

*தாமே தமியர்: தாமே தமியராக. தாமே தமியர் என்பதால், தானும் தன்*

குடும்பமும் என்றும் கூறலாகும்.

- பிறர்கின்றித் தாமே தமித்து.

உணல்: உண்பது.

உண்பது என்று மட்டும் கூறியிருந்தாலும் நுகர்ச்சி அனைத்தையும் சுட்டுவதாகும்.

- நிரப்பிய என்பதற்குத் 'தாம் ஈட்டக் கருதிய பொருட்குறையை நிரப்ப வேண்டி' - என்றும் பொருளுரைப்பார்.

**'இரப்பவர்க்(கு) ஈயக் குறைபடும் என்றெண்ணிக்**
**கரப்பவர் கண்டறியார் கொல்லோ - பரப்பில்**
**துறைத்தோணி நின்றுலாம் தூங்குநீர்ச் சேர்ப்ப**
**இறைத்தோறும் ஊறும் கிணறு'** - **பழமொழி:344**

- ஆனால், இதனைப் பெயரெச்சமாகக் கொண்டு, 'நிரப்பிய பொருள்' என்று கொள்வதே பொருத்த முடைத்தென்க.

- உலகின் எந்த நுகர்ச்சியையும் தமியராக நுகர்வதில் நிறைவும் இல்லை; இன்பமும் இல்லை என்க. உணவு நிலையும் அத்தகையதே.

- இது அனைத்துப் பொருட்பயனையும் சுட்டதால், தமித்து உண்ணுதல் கொடியது என்றார், என்னை?

**'உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா**
**மடமை'** - **89**

**'ஏமுற் றவரின் ஏழை தமியனாய்ப்**
**பல்லார் பகைகொள் பவன்'** - **873**

**'அற்றார்க்கொன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்**
**பெற்றாள் தமியள்மூத் தற்று'** - **1007**

- என்றார், என்க.

**'தமியர் ஆக இனியர் கொல்லோ'** - **குறுந்:1172:4**

**'அஞ்சுவரு நெறியிடைத் தமியர் செல்மார்**
**நெஞ்சு உண மொழிப மன்னே'** - **அகம்:157:9-10**

**'இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்'** - **பதிற்று:38:15**

**'. . . . . . . .சில்பதம் கொழித்துத்**
**தாம் அட்டு உண்டு தமியர் ஆகி'** - **அகம்:216:14**

**'அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்**

**தமியர் உண்டலும் இலரே'** - **புறம்:182:2-3**

**'மருந்தே ஆயினும் விருந்தோடு உண்க'** - **கொன்றை:70**

**'ஐயம் இட்டு உண்'** - **ஆத்திசூடி:9**

**'உண்டிக்கு அழகு விருந்தோடு உண்டல்'** - **வெற்றி:10**

- என்றார் பிறரும்.

2) **இரத்தலின் மன்ற இன்னாது** : இரந்து உண்பதைவிட உறுதியாகக் கொடியது.

- **இரத்தலின் இன்னாது** : இரத்தலைவிடக் கொடியது.

- இரத்தல் கொடியது; ஈட்டியது தாமே உண்ணுதல் அதனினும் கொடியது, என்றார்.

- மன்ற - உறுதியாக. உறுதிப்பொருளாக உணர்த்தும் ஓர் இடைச் சொல்.

**'விளிந்தாரின் வேறல்லர் மன்ற'** - **143**

**'பல சொல்லக் காமுறுவர் மன்ற'** - **649**

**'கொடுத்தும் கொளல் வேண்டும் மன்ற'** - **867**

**'உயிர்ப்ப உளரல்லர் மன்ற'** - **880**

**'மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற'** - **1136**

- இரத்தல் துன்பம் தருவது எனினும் ஒருவன் இல்லாமையால்தான் இரக்கின்றான். அவன் இருந்தால் இரக்க மாட்டான்.

- இன்னும், இரந்ததை அவன் பெறுவானானால் இரந்ததால் அவனுக்கு இன்பமே விளையும், என்னை?

**'இன்பம் ஒருவற்கு இரத்தல், இரந்தவை**
**துன்பம் உறாஅ வரின்'** - **1052**

**'கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்நின்று**
**இரப்பும் ஓர் ஏஎர் உடைத்து'** - **1053**

(ஏஎர்- அழகு, சிறப்பு)

**'இன்மை ஒருவற்கு இளிவன்று'** - **988**

இல்லாமையே ஒருவனுக்கு இழிவு ஆகாது; அதனால் இருப்பாரிடத்தும் கரவாது ஈவாரிடத்தும் இரப்பதும் இழிவன்று; கொடுமையும் அன்று.

மேலும், இகழாது, இழிவு கூறாது, ஈபவரைக் கண்டு இரத்தல் இரந்தவர்க்கு மகிழ்வையும் தருவதாகும்.

**'இகழ்ந்(து) எள்ளா(து) ஈவாரைக் காணின் மகிழ்ந்(து) உள்ளம்**
**உள்ளுள் உவப்பது உடைத்து'** - **1057**

- ஆனால், 'இரக்க வேண்டுமே' என்பது தான், இல்லாமைக்குத் துன்பம்.

**'இன்மை இடும்பை; இரந்துதீர் வாம் என்னும்**
**வன்மையின் வன்பாட்டது இல்'** -1063

மேலும், கேட்டபொழுது, வைத்திருப்பவன் மறைத்து இல்லை என்று சொல்வதும் அவனுக்குத் துன்பமே.

**'இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்**
**பார்தாக்கப் பக்கு விடும்'** -1068

- இருப்பினும், இத்துணைத் துன்ப நிலைகள் நேர்ந்தாலும், அவை வேண்டியவை கிடைத்த பின் மறைந்து விடும்; இன்பமே தோன்றும்.

- ஆனால், செல்வம் உடையவன் பிறர்க்கு வழங்காமல் அதனால் தானும் மகிழாமல், 'அச்செல்வம் எங்குத் தான் கையை விட்டுப் போய்விடுமே' என்று வருந்திக் கொண்டிருக்கின்றானே, அதுதான் அந்த இரப்பவன் பெறும் துன்பத்தைவிட இன்னாதது; கொடியது; மிகுந்த துன்பம் தருவது, என்றார்.

**'வள்ளன்மை இல்லாதான் செல்வத்தின் மற்றையோன்**
**நல்குரவே போலும் நனிநல்ல'** - நீதிநெறி:66:1-2
**'சிறியவர் எய்திய செல்வத்தின் மாணப்**
**பெரியவர் நல்குரவு நன்றே'** - பழமொழி:70
**'வழங்காத செல்வரின் நல்கூர்ந்தார் உய்ந்தார்'** - நாலடி:277:1
**'நவையஞ்சி**
**ஈத்துண்ணார் செல்வமும் நல்கூர்ந்தா ரின்னலமும்**
**பூத்தலில் பூவாமை நன்று'** -நீதிநெறி:5:3-4

- என்றார் பிறரும்.

3) ஈத்துவக்கும் இன்பத்தை உணராதவராகித் தாமுடைமை வைத்திழக்கும் வன்கணவர் தன்மை முன் குறளில் கூறியவர், இதில் தாமே தமியராக உண்பர் தன்மையைக் கூறியதால், அதனை இது தொடர்ந்தது, என்க.

## உ௩0. சாதலின் இன்னாத(து) இல்லை இனிததூஉம்
## ஈதல் இயையாக் கடை. - 230

**பொருள்கோள் முறை:**

**சாதலின் இன்னாதது இல்லை; அதூஉம்**
**ஈதல் இயையாக்கடை இனிது.**

**பொழிப்புரை:** *சாவதைவிடத் துன்பமானது உலகில் வேறு இல்லை. அந்தச் சாவும்கூட, ஈகை மனம் கொண்டவனுக்கு, வறியவர்க்கு ஒன்று ஈயமுடியாத பொழுது இனியது.*

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) ***சாதலின் இன்னாதது இல்லை:*** *சாவதைவிடத் துன்பமானது உலகில் வேறு இல்லை.*

*சாதல்: உயிர் உடலை விட்டுப் பிரிதல்.*

*இன்னாதது: துன்பமானது; கொடியது.*

- *சாதலைவிடக் கொடியது உலகில் இல்லை என்பது வழக்குரை.*
- *ஆனால், சிலர் சாதல் துன்பமிலை என்பர்.*
- *அஃதாவது நோய் நொடியால் சாவதே துன்பமானது. அவையின்றித் திடுமென - சாவது துன்பமில்லை என்பர்.*
- *ஆசிரியரும் அதை ஒப்புவர். என்னை?*

**'குடம்பை தனித்து ஒழியப் புள்பறந் தற்றே**
**உடம்போ(டு) உயிரிடை நட்பு'** - ***338***

**'உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு'** - ***339***

- *மேலும் ஒருவர் ஒரு கொள்கையின் பொருட்டோ, அல்லது போரிலோ இறப்பதை வீரச்சாவு என்று புகழ்வர். அத்தகைய சாவு விரும்பி வரவேற்கத் தக்கது என்பார் ஆசிரியர்.*

**'சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்**
**கழல்யாப்புக் காரிகை நீர்த்து'** - ***777***

**'உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்**
**செறினும்சீர் குன்றல் இலர்'** - ***778***

**'இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே**
**பிழைத்தது ஒறுக்கிற் பவர்'** - ***779***

- *இவை ஆசிரியர் படைத்த சாதலுக்கு அஞ்சா வீர மறவர்தம் கூற்று.*
- *இவர் போல் வேறு மறவர் சிலரும் சான்றோர் பிறரால் காட்டப் பெறுவர்.*

**'போரெனில் புகலும் புனைகழல் மறவர்'** - **புறம்:31:9**

புட்பகைக்கு

*ஏவான் ஆகலின் சாவேம் யாமென*

*நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப'* - புறம்:68:11-13

*'புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்*

*உலகுடன் பெறினும் கொள்ளலர்'* - புறம்:182:5-6

*'உலகுகைப்படும் எனினும் அது ஒழிபவர்,*

*உடல்எமக் கொருசுமை எனமுனிபவர்*

*உயிரை விற்றுறு புகழ்கொள உழல்பவர்*

*ஒருவர் ஒப்பவர் படைஞர்கள் மிடையவே'* - கலிங்கத்:11:42

- *இனி, பழி, கரிசு(பாவம்), மானம், இவற்றுக்காக உயிர் கொடுப்பவரும் உளர்.*

*'மருந்தோமற்(று) ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை*

*பீடழிய வந்த விடத்து'* - 968

*'மயிர்நீர்ப்பின் வாழாக் கவரிமா அன்னார்*

*உயிர்நீப்பர் மானம் வரின்'* - 969

*'இளிவரின் வாழாத மானம் உடையார்*

*ஒளிதொழுது ஏத்தும் உலகு'* - 970

*'பாவமும் ஏனைப் பழியும் படவருப*

*சாயினும் சான்றவர் செய்கலார் - சாதல்*

*ஒருநாள் ஒருபொழுதைத் துன்பம் அவைபோல்*

*அருநவை ஆற்றுதல் இன்று'* - நாலடி:295

- *இனி, இவற்றுக்கே யன்றி, உயிரொன்றிய காதலரும், சாதலுக்கு அஞ்சுவதில்லை என்பதும் தெரிகிறது.*

*'வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்*

*அதற்கன்னள் நீங்கும் இடத்து'* -1124

*'செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்*

*வல்வரவு வாழ்வார்க்கு உரை'* -1151

*'நாடல் சான்றோர் நம்புதல் பழியெனின்*

*பாடுஇல கலுழும் கண்ணொடு சாஅய்ச்*

*சாதலும் இனிதே காதலம் தோழி'* - நற்:327:1-3

*'. . . . . . . . . . . . . . . ஈங்கோ*

*சாதல் அஞ்சேன்; அஞ்சுவல் சாவின்*

**பிறப்புப் பிறிது ஆகுவது ஆயின்'** **- நற்:397:7-8**

**' . . . . . . . . . . . . . யாக்கைக்கு**

**உயிர்இயைந் தன்ன நட்பின், அவ்வுயிர்**

**வாழ்தல் அன்ன காதல்**

**சாதல் அன்ன பிரிவுஅரி யோளே'** **- அகம்:329:11-14**

- இனி, இத்தனைக்கும் மேலாகக் கூறப்பெறுவதுதான், ஈதல் இயையாத பொழுது, சாதலும் இனியது, பெருமையது, புகழ்பெறுவது, உலக நலத்துக்கு எடுத்துக் காட்டாக இருப்பது, என்க.

2) **அதூஉம் ஈதல் இயையாக்கடை இனிது:** அந்தச சாவும்கூட ஈகை மனம் கொண்டவனுக்கு, வறியவர்க்கு ஒன்று ஈய முடியாத பொழுது இனியது.

அதூஉம்: அதுவும். இன்னிசை அளபெடை.

இயையாக் கடை: இயையாத - முடியாதபொழுது. கடை - இடத்து என்றும் பொருள்படும்.

இனிது: இனியது, சிறந்தது.

- அந்தச் சாதலும், ஈகை மனம் கொண்டவனுக்கு அவ் வீதல் இயையாத பொழுது இனியதாகும்.

- இவ்விடத்து உரையாசிரியர்கள் நுட்பமான ஒரு பொருளை வெளிப்படுத்தாமல் விட்டிருப்பது கவனிக்கத் தக்கது.

- அஃது, இந்த உணர்வு, அஃதாவது ஈதல் இயையாத விடத்துச் சாதல் இனியது என்ற அளவில் எல்லார்க்கும் பொதுவானதுபோல் உரைதந்திருக்கின்றனர்.

- ஆனால், அவ்வுணர்வு பொதுவாக எல்லார்க்கும் இருக்கின்ற உணர்வன்று. அந்த ஈகையுணர்வு மிகுந்து தோன்றும் உள்ளம் உடையவர்களுக்கே, அவ்வாளுமை உணர்வு இருக்கும்.

- எனவேதான், 'ஈகை மனம் கொண்டவர்க்கு' என்று சிறப்பித்துச் சொல்ல வேண்டுவதாயிற்று, என்க.

- மேலும் ஆசிரியர், சாதலும் இனிமை தருவதாக, சிறந்த செயலாக, அவம் நீக்கும் செயலாக இருக்கின்ற பிற நிலைகளையும் நூலுள் சுட்டியுள்ளதும் இவ்விடத்துக் கவனிக்கத் தக்கது. அவை:

**'புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலில் சாதல்**

**அறங்கூறும் ஆக்கம் தரும்'** **- 183**

**'தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது**

**இன்னுயிர் நீக்கும் வினை'** - 327

**'புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு**

**இரந்துகோள் தக்கது உடைத்து'** - 780

- *ஈதல் இயையாத பொழுது, சாதலுறும் உணர்வைச் சான்றோர் பிறரும் சுட்டுவர்.*

**'செருஅது, ஈதல் இரந்தார்க்கு ஒன்று ஆற்றாது வாழ்தலின்**

**சாதலும் கூடுமாம் மற்று'** - கலி:61:11-12

- *ஈதல் இயையாத நிலையில் உயிர்விடவும் துணிந்த பேராளன் ஒருவனின் வரலாறு இலக்கியத்துள் உண்டு.*

- *அவன் குமணன். முதிர மலைக்குத் தலைவன். கழக எழுவள்ளலர்க்குப் பிந்திய காலத்தவன் (புறம்:158) அவன் தம்பி இளங்குமணன் (அவன் பெயர் அமணன் என்று கூறுப) என்பானால் நாடு கொள்ளப்பட்டுக் குமணன் காடுபற்றிக் கரந்து வாழ்ந்திருந்தான். அக்கால் அவன் தம்பி, தன் தமையன் தலைக்கு விலைவைத்துக் கொணரக் கோரியிருந்தான். அக்கால் புலவர் பெருந்தலைச் சாத்தனார் என்பார், காட்டில் மறைந்திருந்த குமணனைக் கண்டு, தம் வறுமை கூறி வருந்தினர். அக்கால், தம்பி தன் தலைக்கு விலைவைத்துக் கூறியிருந்த செய்தி கூறித் தன் 'தலையினைக் கொடுபோய்த் தம்பி கை கொடுத்ததன் விலையினைப் பெற்று நும் வறுமை தவிர்க்க' என்று கூறித் தன் இடைவாள் எடுத்துக் கொடுத்தனனாக, அது பெற்ற புலவர் அவ்வாளினைக் கொடுபோய்த் தம்பிக்குக் காட்டி, நிலைகூறித் தன் தமையனையழைத்து வந்து அரசமர்த்தக் கூறவும், அவனும் அவ்வாறே செய்தனன், என்ப.*

- *அப்புலவர், குமணன் வாள் கொடுப்பக் கொண்டுவந்து இளங்குமணற்குக் காட்டிப் பாடிய பாடல் அடிகள், அவன் ஈகை இயலாப் பொழுதில் உயிர் விடுக்கத் துணிந்த நிகழ்வைக் கூறுதல் காண்க.*

**'கேடில் நல்லிசை வயமான் தோன்றலைப்**

**பாடி நின்றனன் ஆகக் கொன்னே**

**பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்**

**நாடிழந் ததனினும் நனியின் னாதென**

**வாள்தந் தனனே தலையெனக் கீயத்**

**தன்னிற் சிறந்தது பிறிதொன்று இன்மையின்'** -புறம்:165:8-13

3) *இஃது, ஈகைச் சிறப்பின் எல்லையாக, அஃதியையாப் பொழுதில் சாதல் இனிதென முடித்துக் கூறியதால், முடிவில் நிலை பெற்றது, என்க.*

# அ-2 இல்லறவியல்

## அ-2-20 புகழ் -24

### அதிகார முன்னுரை

**'புகழ்'** எனப்பெறுவது புகழப்பெறுதல்.

புகழப் பெறுதலாவது, ஒருவர் அறிவுத்திறனும் உரனும், மனநலனும் வளனும், செயலருமையும் பெருமையும், வாழ்வுத் தாகமும் ஈகமும்(தியாகமும்) ஆகிய இவற்றை நினைந்து போற்றுதல்.

இவற்றுள், ஒன்றோ இரண்டோ அல்லது முக்கூறுகளுமோ ஒருவரிடத்து இயல்பின் அமைதலைப் பொறுத்தது, புகழ்ப் பெருமையும் என்க.

அவற்றுள், அறிவுத்திறனாவது,

- 'செறிந்து நிற்கும் விளங்கிய அறிவான், பிற உலக வினைகள் நீங்கி, முனைந்து நின்று, முன்னறியாதன் உய்த்துணர்ந்து, பின்னறிவார் உணர்வுகொள, உற்றதும் உறுவதும் உறப்போவதும் முற்றறியும் திறன், என்க.
- 'அறிவுரனாவது, அவ்வறிவை அவ்வழி அறிய முயல்கையில் உரத்துநிற்கும் வல்லுணர்வு' என்க.
- 'மனநலனாவது, மாசறத் தோன்றி, மருளறத் துலங்கி, காசற விளங்கி, கரவற இலங்கிப் பேசலும் செயலும் பிறிது பிறிதின்றி உறுவதும் உற்றதும் ஒன்றேயாமென, ஆசற அகன்று நிற்கும் அழிவுறா உளநிலை' என்க.

- 'மனவளனாவது, புறவுலகத் தாங்ககங்களால் அசைவுறாது கொழுவிய அன்பும், கெழுவிய கேண்மையும், தழுவிய சுற்றமும். சூழ இடந்தந்து, வழுவற விளங்கும் வான்போலும், செழுமையின் விளையும் வயல் போலும், ஆக்கம் கருதும் விழுமிய உணர்வுடைமை' என்க.

- 'செயலருமையாவது, செயற்கரிய முயன்று செய்தல்', என்க.

- 'செயற்பெருமையாவது, செய்தவற்றால் அனைத்து மக்கட்கும் பெரிதும் நன்மையுடைமை' என்க.

- 'வாழ்வுத் தாகமாவது, தாம் வாழுங்காலம் முழுவதும் அறிவும், மனமும், உடலும் இவ்வுலக இயக்கத்து மேற்கொண்ட நோக்கத்தில் தவிப்புற நிற்றல்' என்க.

- 'வாழ்வு ஈகமாவது, அதற்கென மெய்வருத்தலும் உயிர் துறத்தலுமாம்' என்க.

- இனி, 'புகழ்' என்பது தானிறந்த காலத்து உளதாம் உரை - என்பார் உரையாசிரியர் பதுமனார், தம் நாலடியார் உரையுள். (நாலடி.:9:1)

- 'புகழ்' - 'புகல்' (புகுதல் அல்லது புகலுதல் - சொல்லுதல்) என்னும் சொற்பொருளடியாகப் பிறந்த சிறப்புச் சொல்.)

(இச் சொல் விளக்கம் முன்னரே (5,39) கூறப் பெற்றுள்ளது.)

- 'புகழ்' எனும் சொற்பொருளைக் குறிக்கும் சொற்கள் சிற்சிறிது வேறுபாட்டுடன் தமிழில் எட்டுச் சொற்கள் சொல் வழக்கிலும் நூல் வழக்கிலும் இருக்கின்றன. அவை: விளம்பரம், பெயர், சீர், சீர்த்தி, கீர்த்தி, இசை, புகழ், ஒளி ஆவன.

- அவையும் அவற்றின் பொருள் வேறுபாடுகளும்:

1) **விளம்பரம்: வழக்கு:** விளம்பரம் பெறுதல், விளம்பரம் ஆதல்.

விளக்கம்: இஃது, ஏதோ ஒருவகையில் தன் பொது ஈடுபாட்டையும், திறனையும் பொதுமக்களிடம் கவர்ச்சியாக விளம்பரப் படுத்துதல். விளம்பரம் பெறுவது புகழ் ஆகாது, இது தமக்குள்ள சிறு தகுதியைப் பேரளவாக மிகைப் படுத்தித் தம் வாய்ப்பு வசதிகளைக் கொண்டு, பொது மக்களிடம் தம் பெருமையைத் திணிப்பதாகும். கழகக் காலத்தில் இவ்வுத்தி அரசக் கட்டளைக்கும், கோயில் அறிவுப்புகளுக்கும் பயன்படுத்தப் பெற்றது. இக்காலத்தில் இதுபெரும் புகழ் உத்தியாகப் பயன்படுத்தப் பெறுகிறது. இதனால், தகுதியற்றவர்களும் பெரும் தகுதியும் திறமையும் உள்ளவர்களாகக் கருதப் பெறும் தவறு நேர்கிறது.

எடுத்துக்காட்டுகள்:

| | |
|---|---|
| 'வேள்வியின் அழகியல் விளம்புவோர்' | - பரி:19:43 |
| 'விளம்புவர்' | - மணி:30:243 |
| 'வியம்பினன்' | - சிலப்:11:193 |
| 'இகல் என்னும் எவ்வநோய் நீக்கின் தவலில்லாத் தாவில் விளக்கம் தரும்' | - 853 |

(விளக்கம் - புகழ்)

2) **பெயர்: வழக்கு:** பெயர் பெறுதல், பெயரெடுத்தல், பெயர் விளங்குதல்.

விளக்கம்: இது, பெயரை மட்டும் மக்கள் அறிந்திருத்தல். ஏதோ ஒரு செயலையோ, கருத்தையோ, பெருமையையோ அடிப்படையாகக் கொண்டு, அத்தகையவர்கள் தம் பெயரை மட்டுமோ அல்லது ஊரையுமோ அறியச் செய்தல்

(எ-டு) மாமல்லபுரம், ஊசி தொட்ட ஏரி, வினைதீர்த்தான் மடம், படியளந்தான் வாய்க்கால் - முதலியன.

கழகக் காலத்தில் பெயர்பெற்ற நகர்கள், ஊர்கள், மலைகள், குடிகள், கொடையாளிகள், அரசர் இருந்தனர்.

போரில் வீரச்சாவு எய்தியவர்தம் பெயரும் சிறப்பும் எழுதிய நடுகற்கள் வைக்கும் பழக்கமும் இருந்தது.

- திருக்குறளில் பெயர்ப் பெருமைக்கு எடுத்துக்காட்டுகள் இல்லை. கழக நூல்களுள் உண்டு. அவற்றுள் சில:

| | |
|---|---|
| 'அடுபோர்ச் செழியன் பெரும் பெயர்க் கூடல்' | - நற்:39:10 |
| 'பெரும்பெயர்த் தந்தை நீடுபுகழ் நெடுநகர்' | - நற்:162:7 |
| 'பொலிக நின் பெயரே' | - நற்:198:12 |
| 'நின்பெயர் வாழியரோ' | - பதிற்:18:12 |
| 'தம் பெயர் போகிய ஒன்னார் தேயம்' | - பதிற்:88:4 |
| 'பெற்ற பெரும்பெயர் பலர்கை இரீஇய கொற்றத் திருவின் உரவோர் உம்பல்' | - பதிற்:90:23 |
| 'பெயர்பெற்ற மால்வரை உடைத்து' | - பரி:5:9 |
| 'பெரும்பெயர் முருக' | - பரி:5:50 |
| 'இருங்குன்று என்னும் பெயர் பரந்ததுவே' | - பரி:15:35 |
| 'பெரும் பெயர் மீளி' | - கலி:17:21 |

*'செல்வன் பெரும்பெயர் ஏத்தி'* - *அகம்:98:18*

*'பெரும்பெயர்க் கரிகால் வெல்போர்ச் செழியன்'* - *அகம்:141:22-23*

*'பெரும்பெயர் வழுதி'* -*அகம்:215:7; புறம்:3:13*

*'பெரும்பெயர்ப் பறம்பே'* - *புறம்:113:7*

*'பெயரேத்தி வாயார நின்னிசை நம்பி'* - *புறம்:136:17*

*'பெரும்பெயர்ச் சாத்தன்'* - *புறம்:178:15*

*'வாழ்கவெனப் பெயர் பெற்றோர்'* - *புறம்:377:9*

*'அறப் பெயர்ச் சாத்தன்'* - *புறம்:395:21*

*'பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்*
*பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்'* - *அகம்:67:9-10;*
- *அகம்:131:10-11*

*'பெரும்பெயர்த் தழும்பன்'* - *அகம்:227:17*

*'. . . . . . . . . . . . . . . . . . . . . ஓங்கும்*
*உயர்குடியில் பிறப்பின் என்னாம் பெயர்பொறிக்கும்*
*பேராண்மை இல்லாக் கடை'* - *நாலடி:199:3-4*

*'அரும்பெறல் கற்பின் அயிராணி அன்ன*
*பெரும் பெயர்ப் பெண்டிர்'* - *நாலடி:381:1-2*

*'பெயர்குறி செய்தார்'* - *திணைமொழி:26:3*

3) ***சீர்:*** *வழக்கு: சீர் பெற்றவன்; பெருஞ்சீர் உடையவன்.*

*விளக்கம்: சீர் - சிறப்பு, அழகு, ஒழுங்கு, புகழ், செல்வம் முதலிய.*

- இருப்பினும் பேரளவில் புகழ்க்காக இது பயன்படுத்தப் பெறுகிறது.

- இந்நூலுள் ஆசிரியர் 'சீர்' என்னும் சொல்லைப் புகழ் என்னும் பொருளில் பயன்படுத்தியுள்ள இடங்கள்:

***'சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்***
***வறுமை தருவதொன் றில்'*** - ***934***

***'சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு***
***பேராண்மை வேண்டு பவர்'*** - ***962***

***'இறப்பே புரிந்து தொழிற்கும் சிறப்புந்தான்***
***சீரல் லவர்கண் படின்'*** - ***977***

- கழக இலக்கியங்களுள் வரும் காட்டுகள் சில:

| | |
|---|---|
| **'சீர்கெழு வியன் நகர்'** | **- நற்:339:6** |
| **'தொய்யா விழுச்சீர் வளங்கெழு வையை'** | **- பரி:17:44** |
| **'நின்சீர் நிரந்து ஏந்திய குன்று'** | **- பரி:18:5** |
| **'ஆனாச் சீர்க் கூடல்'** | **- கலி:30:11** |
| **'வாடாச் சீர்த் தென்னவன்'** | **- கலி:104:4** |
| **'விழவுடை விழுச்சீர் வேங்கடம்'** | **- அகம்:61:13** |
| **'பெருஞ்சீர் அன்னி'** | **- அகம்:145:10** |
| **'சீர் கெழு வியன் நகர்'** | **- அகம்:219:1** |
| **'சீர் மிகு பாடலி'** | **- அகம்:265:5** |

*4) **சீர்த்தி:** வழக்கு: சீர்த்தி பெறுதல், சீர்த்தி உடையவன்.*

*விளக்கம்: 'சீர்' என்னும் பகுதியடியாக விரிந்தது. சீர்த்தி - புகழ், மிகுபுகழ்.*

*- இச்சொல் இந்நூலுள் இல்லை. கழக இலக்கியங்களுள்ளும் பெரும்பாலும் 'சீர்' என்னும் சொல்லே மிகுதியாக பயன்படுத்தப் பெறுதலும், 'சீர்த்தி' குறைவாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளதும், இது பிந்தித் தோன்றிய வழக்காக இருக்கலாம் என்று கருதவும் இடமுண்டு. ஆனால் தொல்காப்பியத்துள் இதன்வழக்கு உண்டு.*

*- கழகப் பயன்படுத்தங்கள்:*

| | |
|---|---|
| **'வலம்படு சீர்த்தி ஒருங்குடன் இயைந்து'** | **- பதிற்று:41:24** |
| **'அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை'** | **- புறம்:15:18** |
| **'. . . . . . . . . . . . . . . . உயர்சீர்த்தி<br>ஆலமர் செல்வன் அணிசால் மகன் விழாக்<br>கால்கோல்'** | **- கலி:83:13-115** |
| **'சீர்த்தி மிகுபுகழ்'** | **- தொல்:796** |
| **'சிறந்த சீர்த்தி மண்ணுமங் கலமும்'** | **- தொல்:1087:9** |

*5) **கீர்த்தி: வழக்கு:** அவன் கீர்த்தியுடையவன்.*

*விளக்கம்: 'சீர்த்தி'யே தலைதிரிந்து 'கீர்த்தி' என்று வழங்குகிறது.*

*- இச்சொல் கழநூல்களுள் இல்லை.*

*- மிகவும் பிற்கால வழக்கு. பிற்காலச் சமய நூல்களுள்ளும் 'இதிகாச' பாவியங்களாகிய 'கம்பஇராமாயணம்', 'வில்லிபாரதம்' முதலிய நூல்களுள்ளும் வழங்குகிறது.*

- 'ச'கரத் தொடக்கம் 'க'கரத் தொடக்கமாக மாறித் திரவிட மொழிகளில் வழங்கும். அதேபோல் 'க'கரமும் 'ச'கரமாக அம்மொழிகளில் மாறும்.
- செம்பு - கெம்பு;(தெலு) சேரலம் - கேரளம் (மலை) கை - செய் (தெலு)
- எனவே, கீர்த்தி என்பது சீர்த்தியின் திரவிடத் திரிபு.
- இருப்பினும் தமிழ் வழக்காக வழங்கி வருகிறது.
- இன்னும் 'கீர்த்தி' என்பது சமற் கிருதத்தில் 'கியாதி' என்றும் இடைத் திரிபுற்றும் வழங்குகிறது.
- 'கியாதி' எனினும் புகழே.
- எனவே, 'கீர்த்தி' என்னும் சொற்கு நூல் வழக்குக் காட்டப் பெறவில்லை.

'மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரிது' உலகவழக்கு.

'நேர்த்தி யுள்ளவன் கீர்த்தி பெறுவான்' - சொலவடை

6) இசை: வழக்கு: இசை பெற்றவன்; இசைபட வாழ்ந்தான்.

விளக்கம்: இசை - பெரும்புகழ்; இசையொடு பாடப்பெறும் புகழ். பெரும்பாலும் சமய குரவர்களின் புகழும் கடவுளர்களின் பெருமையும் பண்ணொடு இசைக்கப் பெறுதலின் இசை, புகழாயிற்று.

- கடவுளர் இலக்கியமாகிய 'பரிபாடல்' பாக்கள் இசை வகுத்துப் பாடப் பெற்றன. அவற்றுக்குப் பண்குறிப்பும் தரப்பெற்றுள்ளன.
- பெரும்பாலும் சமயத்தலைவர்களின் புகழும் உலகெங்கும் அனைத்து மொழிகளிலும் இசை வடிவிலேயே உள்ளதும் கருதத் தக்கது.
- இந்நூலுள்ளும் இசை என்னும் சொல் வரும் ஆறு இடங்களிலும் புகழ் என்னும் பொருளிலேயே வருகின்றது.

| | |
|---|---|
| **'இசைபட வாழ்தல்'** | **- 231** |
| **'இசையென்னும் எச்சம்'** | **- 238** |
| **'இசையிலா யாக்கை'** | **- 239** |
| **'இசையொழிய வாழ்வாரே'** | **- 240** |
| **'சுழலும் இசை வேண்டி'** | **- 777** |
| **'இசை வேண்டா ஆடவர்'** | **- 1003** |

- இனி, கழக நூல்கள் சிலவற்றுள் வரும் எடுத்துக் காட்டுகள்:

| | |
|---|---|
| **'இசைநலங் கிள்ளி'** | **- நற்:141:9** |
| **'பேரிசை முள்ளூர்'** | **- நற்:170:6** |

'இசைபட வாழ்பவர் செல்வம் போல' - நற்:217:1
'பேரிசை இமயம்' -குறுந்:158:4
'கெடாஅ நல்லிசை நிலைஇச்' - பதிற்று:11:23, பதிற்று:14:21
'நெடியோன் அன்ன நல்லிசை' - பதிற்று:15:39
'ஒடுங்கா நல்லிசை' - பதிற்று:பதி:3:9
'வான்தோய் நல்லிசை' - பதிற்று:37:6
'இசைமேந் தோன்றல்' - பதிற்று:64:20
'நிலவரை நிறீஇய நல்லிசை' - பதிற்று:80:16
'அருந்திறல் ஒள்ளிசைப் பெருஞ்சேரல் இரும்பொறை' - பதிற்று:8:10
'அசையா நல்லிசை நிலந்தரு திருவின் நெடியோய்!'
- பதிற்று:82:15,16
'நல்லிசைக் கபிலன்' - பதிற்று:85:13
'இசைகெட்டான் இறுதிபோல்' - கலி:10:3
'தொல்லிசை நட்டகுடி' - கலி:104:5
'ஞாலம் நாறும் நலங்கெழு நல்லிசை' - அகம்:181:15
'செல்லா நல்லிசை நிறுத்த வல்வில் ஓரி' - அகம்:209:13
'இம்மை உலகத்து இசை விளங்கி' - அகம்:66:1
'வெல்போர்ச் சோழன் இடையாற்று அன்ன நல்லிசை' -அகம்:141:23
'செல்லா நல்லிசை பசும்பூண் பாண்டியன்' - அகம்:231:12
'தொய்யா நல்லிசை. .. உதியஞ்சேரல்' - அகம்:233:7-8
'பேரிசை எருமை நல்நாடு' - அகம்:253:19
'கெடலரு நல்லிசை உறந்தை' - அகம்:369:14
'தறுகணாளர் நல்லிசை நிறுமார்' - அகம்:269:5
'செல்லா நல்லிசைப் பொலம் பூண் திரையன்' - அகம்:340:6
'கெடாஅ நல்லிசைத் தென்னன்' - அகம்:342:10
'பொய்யா நல்லிசை மாவண் புல்லி' - அகம்:359:12
'நல்லிசை தம்வயின் நிறுமார் வல்வேல்
வான வரம்பன்' - அகம்:389:15-16
'. . . . . . . . . . . . . சினைஇ
ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்' - அகம்:396:16-18

'நல்லிசை நிறுத்தல் வேண்டி' - புறம்:18:16
'நல்லிசை வேட்டம் வேண்டி' - புறம்:37:5
'தோலா நல்லிசை நால்வருள்ளும்' - புறம்:56:10
'கிள்ளி வளவன் நல்லிசை' - புறம்:70:10
'இசை விளங்கு கவிகை நெடியோய்' - புறம்:102:6
'தொலையா நல்லிசை விளங்கு மலையன்' - புறம்:123:3
'பரந்திசை நிற்கப் பாடினன்' - புறம்:126:13

'மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பி னல்லது காண்பறி யலையே!
காண்டல் வேண்டினை யாயின் . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . .
மாரி யன்ன வண்மைத்
தேர்வேள் ஆயைக் காணிய சென்மே' - புறம்:133:1-3; 6-7

'புகழ்சால் சிறப்பின் நல்லிசை யுள்ளி' - புறம்:135:9

'மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக' - புறம்:145:1-3

'இவண் விளங்கு சிறப்பின் இனியதேர்க் குமண
இசைமேந் தோன்றிய வண்மையொடு
பகைமேம் படுகநீ ஏந்திய வேலே' - புறம்:158:26-28

'கேடில் நல்லிசை வயமான் தோன்றல்' - புறம்:165:8
'பரந்துபடு நல்லிசை எய்தி' - புறம்:213:9

'கெடுவில் நல்லிசை சூடி
நடுகல் ஆயினன் புரவலன் எனவே' - புறம்:221:12-13

'புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை' - புறம்:228:7
'சேண்விளங்கு நல்லிசை நிறீஇ' - புறம்:282:10
'ஈத்தோன் எந்தை இசைதன தாக' - புறம்:386:9
'என்றீத் தனனே இசைசால் நெடுந்தகை' - புறம்:389:6
'விளங்கித் தோன்றுக அவன் கலங்கா நல்லிசை' - புறம்:396:8
'மாயா நல்லிசைக் கிள்ளி வளவன்' - புறம்:399:12
'இல்லாதார்க்கு யாதொன்றும் ஈகலார். . . . .

. . . . . . . . . . . . . . . . . . இசைபட வாழார்;
முனியார்கொல் தாம்வாழும் நாள்' - நாலடி:338
'தொலையா நல்லிசை உலகமொடு நிற்ப' - மலைபடு:70
'இந்நிலத்து, மன்னுதல் வேண்டின் இசைநடுக' - நான்மணி:15:1-2
'இப்பால் உலகத்து இசைநிறீஇ' - நான்மணி:27:4

7) புகழ்: வழக்கு: புகழ்பெற்றவன்: புகழுடையவன்.

விளக்கம்: புகழ் - புகழப் பெறுதல். இதன் விளக்கம் முன்பே தரப்பெற்றுள்ளது.

- ஒருவன் மாந்தனாய்ப் பிறந்து ஏதோ ஒருவகையில் புகழ்பெறாதவனாய் மாய்ந்து போதல், வெற்று வாழ்க்கை எனப் பெற்றது.

- பொதுவான ஒருவன்கூட, தான் வாழ்கின்ற இடத்தைச் சுற்றிக் குறைந்தது. பத்துக் கற்கள் அளவிலாகிலும் புகழ் பெறுதல் சிறப்பு என்று கருதப்பெற்றது. ஒருவன் எவ்வளவுக் கெவ்வளவு மிக ஆழமாகவும் அகலமாகவும் புகழ் பெறுகின்றானோ, அவ்வளவின் அவன் சிறப்புடையவனாகக் கருதப் பெறுவான்.

- ஒவ்வொருவருக்கும் இரண்டு வாழ்க்கை: ஒன்று ஊன் உடம்பில் வாழும் வாழ்க்கை; இன்னொன்று அவன் மறைந்த பின் புகழுடம்பில் வாழ்வது - என்று கீழுள்ள 'சூளாமணி'ப் பாடல் கூறுகிறது.

'ஒருவன(து) இரண்டு யாக்கை,
ஊன்பயில் நரம்பின் யாத்த
உருவமும் புகழும் என்றாங்கு !
அவற்றினூழ் காத்து வந்த
மருவிய உருவம் இங்கே
மறைந்து போம்! மற்ற யாக்கை
திருவமர்ந்(து) உலகம் ஏத்தச்
சிறந்துபின் நிற்கும் அன்றே !' - சூளா. சீயவதை:204

'பொன்றும் இவ்வுட லின்பொருட்(டு)
என்றும் நிற்கும் இரும்புகழ்
இன்றி நீர்கழிந் தீர்களாற்
குன்றின் மேற்குடை வேந்திர்காள் !' - சூளா.அரசியல்:226

- சிற்றுயிர்களான பறவை, விலங்கினங்களும் இவ்வுலகிற் பிறந்து, உயிரொடு உண்டு, உலாவி, இனம் பெருக்கி இறுதியில் மடிகின்றன.

- ஆறறிவுள்ள மாந்தனும் அவ்வாறே

**'ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்**
**பொன்றாது நிற்பதொன்(று) இல்'** - **233**

- என்பார், ஆசிரியர்.

- மேலும், அவர் புகழ்பற்றிக் கூறுபவற்றையும், சான்றோர் பிறர் கூறியவற்றையும், புகழ் விளக்கச் சொற்களுடன் மட்டுமே கீழே காண்க.

- இந்நூலுள் குறிப்பிடப் பெறுபவை.

**'பொருள் சேர் புகழ்'** - **5**
**'புறத்த புகழும் இல'** - **39**
**'புகழ் புரிந்த இல்லிலோர்'** - **59**
**'பொன்றுந் துணையும் புகழ்'** - **156**
**'ஈவார் மேல் நிற்கும் புகழ்'** - **232**
**'உயர்ந்த புகழ்'** - **233**
**'நீள் புகழ்'** - **234**
**'தோன்றிற் புகழொடு தோன்றுக'** - **236**
**'புகழ்பட வாழாதார்'** - **237**
**'பொய்யாமை அன்ன புகழில்லை'** - **296**
**'எல்லாப் புகழும் தரும்'** - **457**
**'பொச்சாப்புக் கொல்லும் புகழை'** - **532**
**'பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை'** - **533**
**'புகழொடு நன்றி பயவா வினை'** - **652**
**'புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும்'** - **538**
**'புகழ் இன்றால் புத்தேள் நாட்டு'** - **966**
**'மீக் கூறுதல்'** (புகழ்ந்து கூறுதல்) - **386**

- பிற கழக இலக்கியங்களின் புகழ்:

**'அடு புகழ்'** - **அகம்:214:7**
**'அடுதலில் புகழ்'** - **புறம்:39:7**
**'அலர்ந்த புகழ்'** - **பரி.:4: 14**
**'ஆய் புகழ்'** - **ஏலாதி க.வா:1**

| | |
|---|---|
| 'இரும் புகழ்' | - சூளா.அரசியல்:226 |
| 'ஈதலில் புகழ்' | - புறம்:39:4 |
| 'ஈந்த புகழ்' | - திரிகடு:41:1 |
| 'எய்திய புகழ்' | - புறம்:359:18 |
| 'ஏய்க்கும் புகழ்' (பொருந்திய) | - திணைமாலை:129:3 |
| 'ஓங்கு ப்கழ்' | - நாலடி:9:1 |
| 'ஓங்கிய பலர் புகழ்' | - பரி:4:24 |
| 'குன்றாப் புகழ்' | - நாலடி:272:3 |
| 'கெடல் அரும் பல்புகழ்' | - பதிற்:48:3 |
| 'கெடாஅப் புகழ்' | - கார்:32:2 |
| 'கேடில் விழுப்புகழ்' | - அகம்:86:7 |
| 'கோடாப் புகழ்' | - திணைமாலை:129:3 |
| 'சென்ற புகழ்' | - ஏலாதி: 26:4 |
| 'சேண் விளங்கு புகழ்' | - புறம்:10:11 |
| 'சேறல் புகழ்' | - பழ:19:2 |
| 'ஞாலம் அறிந்த புகழ்' | - ஏலாதி:26:4 |
| 'தேயா விழுப் புகழ்' | - கலி:103:76 |
| 'தொல் புகழ்' | - அகம்:256:16 |
| 'நிறுத்த புகழ்' | - புறம்:174:16 |
| 'நின்ற புகழ்' | - திரிகடு:30:4 |
| 'நின்று நிலைஇப் புகழ்' | - பரி.திரட்டு:9:2 |
| 'பல் புகழ்' | - பதிற்.பதி: 4:4 |
| 'பாடு புகழ்' | - புறம்:383:17 |
| 'பாடல் சான்ற புகழ்' | - பரி:17:22 |
| 'புகழ் வரம்பு இகந்தோய்' | - பரி:15:70 |
| 'புலவர் புகழ்' | - அகம்:354:8 |
| 'புலம் புகழ்' | - கலி:52:12 |
| 'புலத்தொடு அளவிய புகழ்' | - பரி.திரட்டு:1:38 |
| 'புலவர் பாடும் புகழ்' | - புறம்:27:7 |
| 'பொச்சாப்பு இலாத புகழ்' | - கார்:7:3 |
| 'மன்னு புகழ்' | - கார்:8:1 |

| | |
|---|---|
| 'மன்னிய பெரும் புகழ்' | - பதிற்:2:1 |
| 'மலி புகழ்' | - புறம்:71:9 |
| 'மண் நாணப் புகழ்' | - புறம்:166:23 |
| 'மறப் புகழ்' | - புறம்:290:6 |
| 'மாண் புகழ்' | - அகம்:222:12 |
| 'மாயாப் புகழ்' | - புறம்:21:12 |
| 'மாயாப் பல் புகழ்' | - பதிற்:90:10 |
| 'மிகப் புகழ்' | - புறம்:66:7 |
| 'மிக்க மிகு புகழ்' | - ஐந்.ஐம்.:48:3 |
| 'முறைமை நின் புகழ்' | - புறம்:39:10 |
| 'மைந்துமலி பெரும்புகழ்' | - பதிற்:22:16 |
| 'வண் புகழ்' | - புறம்:151:5, பதிற்:31:22 |
| 'வான் புகழ்' | - புறம்:168:22 |
| 'வாய்மொழி வாயர் நின் புகழ் ஏத்த' | - பதிற்:37:2 |
| 'விளங்கு புகழ்' | - அகம்:375:11 |
| 'விண்பொரு புகழ்' | - புறம்:11:6 |
| 'விறல் புகழ்' | - பரி.திரட்டு:1:19 |
| 'வீயா விழுப்புகழ்' | - அகம்:135:11 |
| 'வெல் புகழ்' | - கலி:26:12 |
| 'வையம் விளங்கு புகழ்' | - பதிற்:46:13, பரி.திரட்டு:10:2 |

8) **ஒளி: வழக்கு:** ஒளியுடையவன், ஒளிபெற்றவன், புகழொளி.

**விளக்கம்:** ஒளி - சுடர், புகழ், சிறந்த அறிவு, மெய்யறிவு.

பலரும் வாழ்த்தி வணங்கத் தக்க ஒளியுடைமை. பெரும்பாலும் சமயத் தலைவர்களுக்கே இப்பெருமை தரப் பெறுகிறது. மகாவீரர், புத்தர், இயேசு, நபி, குருநானக்கு போலும் சமய முதல்வர்களும், இறையடியார்கள் சிலரும், திருவள்ளுவர், திருமூலர், போல் மெய்ந்நூலாசிரியர்கள் சிலரும் ஒளியுடையவர்களாகக் கருதப் பெற்று மக்கள் வணங்கத் தக்கவர்களாக உள்ளனர்.

- இருப்பினும், புகழுடைமையும் மெய்யறிவுடைமையும், அறிவுடைமையும் கூட ஒளியாகக் கருதப் பெறுகின்றன.

- மேலும், ஒளி என்பதற்கு,

**'தானுளதாகிய காலத்து விளங்குதல்'**

- என்பர் உரையாசிரியர் பதுமனார். (நாலடி:9) பரிமேலழகரோ,

'ஒளி - தாம் உள காலத்து எல்லாராலும் நன்கு மதிக்கப் படுதல்'(குறள்: 653) என்றும்,

'ஒளி - உறங்கா நிற்கவும் தாம் உலகம் காக்கின்ற அவர் (அரசர்) கடவுள் தன்மை' (குறள்:698). என்றும், இருவகையான விளக்கம் தருவார்.

- மேலும், அவர் 'ஞானம்'(மெய்யுணர்வு) (267) என்றும், 'புகழ்'(810, 970) என்றும் கூறி, வேறு இடங்களில் (921, 939) ஒன்றும் விளக்காமலும் விடுவார்.

- பதுமனாரும், பரிமேலழகரும் கூறிய முந்துரைக்கு,

**'மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை**
**உளனென வெரூஉம் ஓர்ஒளி'** - புறம்: **209:56**

- என்ற புறப்பாடலும்,

**'உறங்கு மாயினும் மன்னவன் தன்னொளி**
**கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால்'** - சீவக: **248.**

- என்னும் 'சீவக சிந்தாமணி' பாடலும் அடிப்படையாதல் வேண்டும். அச்சிந்தாமணிப் பாடலுக்கும் அப் புறப்பாடலே கருத்து முதலாகவும் இருத்தல் வேண்டும்.

- இனி, ஒளி என்னும் சொல்லுக்கு நூலாசிரியரும்,

'மெய்யுணர்வு'(267) என்றும், 'புகழ்'(870,921,939,979) என்றும் 'சிறந்த அறிவு'(698) என்றுமே பொருள் கொள்வர்.

'தலைமகன் தன்னொளி நூறாயி ரவர்க்கு நேர்' - பழமொழி:214:3-4

- என்னும் பாடலடியினும் 'ஒளி' 'புகழ்' என்றே பொருள் பெறுகிறது.

- இவ் வெடுத்துக் காட்டுகளால் 'ஒளி' என்னும் சொல், 'புகழ்' என்று பொதுவாகவும், 'மெய்யுணர்வு கூர்ந்த சமயச் சான்றோர்தம் புகழ்' என்று சிறப்பாகவும் பொருள் பெறுவதாகக் கொள்ளலே ஏற்புடையது என்று கருதலாம்.

- இனி, 'புகழ்' எனும் பொருள் தரும், விளம்பரம், பெயர், சீர், சீர்த்தி, கீர்த்தி, இசை, புகழ், ஒளி எனும் எட்டுச் சொற்களுக்கும், இவ்வுரையாசிரியன் எழுதிய எட்டு நூற்பாக்களும், அவற்றின் அளவீடுகளை நன்கு உணர்வதற்குரிய அளவைப் பொருள்களாகக் குடிநீர்க் கொள்ளளவு காட்டுகின்ற சங்கெடை, கெண்டி, குவளை, செம்பு, தவலை, குடம், அண்டா, கொப்பரை முதலிய அளவீட்டு

ஏனங்களை உள்ளடக்கிய அடிகளும், ஒரு விளக்கத்திற்காகக் கீழே கூறப்பெறுகின்றன.

1. விளம்பரம்:

'விளம்பரம்' என்பது விளம்பப் பெறுவது.

விளம்புதல் தன்னை விதந்து கூறுதல்.

விதந்து கூறுதல் மிகைப்படக் கூறுதல்.

'சங்கெடை' அளவெனச் சாற்றலாம் இதனை.

2. பெயர்:

'பெயர்' எனப் பெறுவது பெயர்சொலப் பெறுவது.

பெயர் சொலப் பெறுவது பேராளன் பெயர்

இயவுறும் செயலோ எடுத்துக் கூறுதல்.

'கெண்டி' அளவெனக் கிளத்தலாம் இதனை.

3. சீர் :

'சீர்' எனப் பெறுவது செயற்கருஞ்செயலை

ஆர்வுறப் பிறர்பிறர் அமையக் கூறுதல்.

'குவளை' அளவெனக் கூறலாம் இதனை.

4. சீர்த்தி:

'சீர்த்தி' என்பது சிறந்தான் செயல்திறம்

ஆர்த்தெழு வரலாறு) அளாவிக் கூறுதல்.

'செம்பின்'அளவெனச் செப்பலாம் இதனை.

5. கீர்த்தி:

'கீர்த்தி' என்பது கிளர்ந்தோன்

பெருஞ்செயல்

பேர்த்திசை செயலொடும் பிறப்பொடும் கூறுதல்.

'தவலை' அளவெனத் தருக்கலாம் இதனை.

6. இசை:

'இசை'யெனப் பெறுவது வசையில் வான்புகழ்

நசையுறு பண்ணொடு நவிலக் கூறுதல்.

'குடத்'தின் அளவெனக் கொள்ளலாம் இதனை.

7. புகழ்:

'புகழ்' எனப் பெறுவது பொன்றாக் கீர்த்தி.

அகலமும் ஆழமும் அளப்பறக் கூறுதல்.

'அண்டா' அளவென அறையலாம் இதனை.

8. ஒளி:

'ஒளி'யெனப் பெறுவது உலகுநலம் உயிர்த்தோன்

வளியென மன்பதை வாழ்த்தி வணங்குதல்.

'கொப்பரை' அளவெனக் குறிக்கலாம் இதனை.

- இவ்வரிசையுள் காணப்பெறும் புகழ்ப் பெயர்களும் அளவுகளும் ஒன்றினின்று ஒன்று சிறந்ததும் பெரிதுமாகும் என்க. இவை முரணின்றியும் தாறுமாறின்றியும் வழங்கப் பெறும் நோக்கத்தான் ஆய்வின் அடிப்படையில் அளவிடப் பெற்றன என்க. இது வேறெங்கும் எதனினும் கூறப் பெறாதது.

- இனி, உலக வரலாறுகளை ஊன்றி நோக்கின், உலகப் புகழ் பெற்றவர்களுள் பெரும்பாலார், மக்கள் நலத்துக்கு ஏதே ஒருவகையில் தொண்டு செய்தவர்களும், பெருங்கொடையாளர்களுமே மிகுபுகழ் பெற்ற பேராளர்களாக இருப்பதை உணரலாகும். இதனை,

**'உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று**

**ஈவார்மேல் நிற்கும் புகழ்'** - 232

**'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**

**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை'** - 322

என்னும், நூலாசிரியர் கூற்றுகளானும்,

**'வீந்தவர் என்பவர் வீந்தவ ரேனும்**

**ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரே'** - கம்ப.வேள்வி.30

என்னும் கம்பரது கூற்றானும் உணர்தலாகும்.

- எனவே, இவ்வதிகாரம், 'ஈகை' அதிகாரத்தின் பின் வைக்கப் பெற்றது, என்க.

- இனி, ஈகை என்பது ஈதல், கொடுத்தல் என்பது முன்னர்க் கூறப்பெற்றது.

- ஈதல், கொடுத்தல் பொருளோ; உணவோ, உடைகளோ மட்டுமன்று.

- தம்மிடம் உள்ளதை முடிந்த அளவில் பிறர்க்கும் ஈந்து உதவுதல்.

- அவ்வாறெனில், அவை கல்வி, உழைப்பு, செயலுதவி போன்று, எல்லார்க்கும் பயன்படும் பொருளாகவோ, செயல்களாகவோ கூட இருக்கலாம்.

- கல்வியிலார்க்குக் கல்விதரலும், தொழிலில்லார்க்குத் தொழில்தரலும், ஊக்கம் இழந்தாரை ஊக்கலும், ஆக்கம் இழந்தாரை ஆதரித்துப் போற்றலும், ஈகையறத்தின் பாற் பட்டவையே.

- தம்மிடத்தது எது மிகுதியாக உள்ளதோ, அதனை அஃதில்லார்க்குத் தந்துதவுதல் அனைத்தும் கொடையே!

- அதில், பொதுமைப் பண்பு வளர்கிறது; வேறுபாடு தகர்கிறது; பொதுவுடைமை பூக்கிறது; புதுமை உலகமே உருவாகிற தன்றோ?

**'தம்மின் மிகவுடையார் தாமதனை மற்றவர்க்கும்**
**வம்மின் எனக்கொடுத்து வாழ்தலன்றோ - நம்முயிர்க்கும்**
**ஏற்ற அறக்கடமை இவ்வுலக மாந்தருக்கும்**
**போற்றும் பொதுமையறப் பூண்'** **- உரையாசிரியன்.**

**உ ௩ க. ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு. - 231**

**பொருள்கோள் முறை: இயல்பு**

**பொழிப்புரை:** இல்லாதவர்கக்கு உதவுதலும், அதனால் புகழ்பெற வாழ்தலும் தவிர, மாந்த உயிர்க்கு ஊதியம் என்பது வேறு இல்லை.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) உலகின் எந்த ஓர் இயக்கத்திற்கும் ஒரு விளைவு இருத்தல் வேண்டும் என்பது பொருளியல் நூலார் கருத்து. மெய்யறிவியல் உண்மையும் அது.

எனவே, உயிர் வாழ்தலிலும் ஒரு நோக்கம், பயன், விளைவு ஒன்று இருத்தல் வேண்டும். அதுதான் வாழ்வின் பயனாக இருத்தல் முடியும். அஃது என்னவாக இருத்தல் முடியும் என்று சிந்தித்தால், அஃது உயிர் மகிழ்வுறுதல்.

உயிர்மகிழ்ச்சி மூன்று நிகழ்வுகளை உள்ளடக்கியது. அவை, உள்ளத்தினது மகிழ்ச்சி; அறிவினது மகிழ்ச்சி; உயிர் வந்து இயங்குவதற்குக் காரணமான உடலினது மகிழ்ச்சி. மகிழ்ச்சி என்பது கூர்தல். அஃதாவது

உணர்வு கூர்தல். கூர்தல், உச்ச நிலை பெறுதல்.

உள்ளம் மேம்பட்டு நிற்கையில் அது மகிழ்வடைகிறது; அதே போல் அறிவு மேம்பட்டுக் கூர்தல் அடைந்து நிற்கையில், அதுவும் மகிழ்ச்சியுறுகிறது; உடலும் மேலான உணர்வில் திளைக்கையில் அதுவும் மகிழ்வடைகிறது.

இம்மூன்று உணர்வுகளையும் உடற் புலன்கள் வழியாகவே அவை பெறுகின்றன. அவை மூன்றும் ஒரேநிலையில் உணர்வுகூர்ந்து நிற்கையில் ஏற்படும் மகிழ்வே, உயிர்க்குக் கிடைக்கும் அனைத்தினும் மேலான மகிழ்வாகும்.

இம்மூன்று உணர்வு நிலைகளையும் உயிர் நுகர்ச்சி பெற்று, அதனால் மகிழ்வுற்று அதுவும் கூர்தல் உறுகிறது. உயிர் கூர்தல் உறுவது என்பது மேம்பட்டு விளங்குவது. உயிர் மேம்பாடு என்பது உயிர் ஒளி பெறுதலாகும். உயிர் ஒளி பெறப்பெற அஃது இயற்கையோடு இயைபுற்று மிகுந்த ஆற்றலைப் பெறுகிறது. அக்கால், அஃது அறியப் பெறும், உணரப்பெறும் பரப்பு விரிவடைகிறது. அப்பரப்பு விரிவடையும் பொழுது, அதன் நுகர்ச்சிப் பரப்பும், பயன்பரப்பும் விரிவடைந்து கொண்டே போகிறது.

இந்நிகழ்வுகளெல்லாம் உயிர் தனித்து நின்று இயங்குவதால் ஏற்படுவதில்லை. ஓர் உயிர் தனக்குகந்த இன்னோர் உயிருடன் இணைந்து, கலந்து இயங்கும் பொழுதே, அது நுகர்ச்சி பெறவும், அதன் வழிதான் மகிழ்ச்சியுறவும் அதன்வழித் தன்னை மேம்படுத்திக் கொள்ளவும் வாய்ப்புகள் ஏற்படுகின்றன. நேர்ச்சிகள் உண்டாகின்றன.

- எனவேதான் உயிர்கள் தனித்து வாழவிரும்புவதில்லை. கூடிவாழவும், மற்ற உயிர்களோடு அன்புத் தொடர்பு கொள்ளவும், ஒன்றுக்கொன்று கொடுத்தும் கொண்டும், இன்பங்களிலும், துன்பங்களிலும் பங்குகொள்ளவும், அவற்றைப் பகிர்ந்து கொள்ளவும், அவ்வகையால் தானும் பிறரும் நிறைவு பெறவும் விரும்புகின்றன.

- தனக்கு வேண்டிய ஒன்றை, மற்றவரிடமிருந்து பெறும்போது எவ்வளவு மகிழ்வடைகின்றோமோ, அந்த அளவில் பிறர் விரும்பும் ஒன்றைத் தான் பிறர்க்குக் கொடுப்பதிலும் மகிழ்வடைகின்றோம்.

- இன்னும் சொன்னால், பெறுவதில் ஒரு தாழ்வு உணர்வைப் பெறும் நாம், கொடுப்பதில் ஒரு தலைநிமிர்வு பெறுகிறோம். இதனால் பெறுவதைவிடக் கொடுப்பதில்தான் நாம் இரட்டை மகிழ்வு கொள்கிறோம். இதில் உள்ள மகிழ்வு தன்னால் பிறர் நிறைவும் மகிழ்வும் பெறுகிறார்களே என்பதுதான்.

- இதனால்தான் 'ஈகை இன்பம்'(228) என்கிறார், நூலாசிரியர். ஈவோனின் கை மேலோங்கி இருப்பதைப்போலவே மனமும் மேலோங்கி இருப்பதையும், வாங்குவோனின் கை தாழ்ந்திருப்பதைப் போலவே மனமும் தாழ்ந்து போவதையும் நாம் உணர்தல் வேண்டும்.

- பிறர்க்கு ஒன்றைக் கொடுப்பதால் நமக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது; வாங்குவதால் இகழ்ச்சி ஏற்படுகிறது. அதுபோலவே, கொடுப்பவனுக்குப் புகழ் உண்டாகிறது; வாங்குபவனுக்கு இகழ் உண்டாகிறது. அதனால்தான் 'ஏற்பது இகழ்ச்சி'(ஆ.சூ:8) என்றனர்.

2) இந்தக் குறளில், ஆசிரியர் ஓர் உலகியல் உண்மையையும், ஒரு மெய்ப்பொருள் உண்மையையும் ஒருங்கே சுட்டுகிறார்.

- உலகியல் உண்மையாவது, 'உலகில் வறியவர்க்கு ஈவதும், அதனால் மாந்தன் புகழ்பெற வாழ்வதும்தாம் வாழ்வியல் நோக்கமும், பயனும் ஆகும்' என்பது.

- மெய்ப்பொருள் உண்மையாவது, 'உயிர் என்பது வாணிகன் ஒருவனைப் போன்றது. அவ்வாணிகன் வாழ்க்கை என்னும் வாணிகத்தைச் செய்ய விரும்பி, இவ்வுலகத்திற்கு வருகிறான். அவ்வாணிகத்திற்கு முதல்(Capital) வேண்டுமன்றோ?' அவன், இந்த ஐம்பூதப் பொருளாகிய 'உலகம்' என்னும் செல்வனிடம் இந்த 'உடல்' என்னும் முதலைக் கடனாகப் பெறுகிறான். அதை வைத்துக் கொண்டு வாழ்க்கை என்னும் வாணிகத்தைச் செய்கிறான். அவன் செய்யும் வாழ்க்கை வாணிகத்தில் வரவுக்கும் செலவுக்கும் சரியாகப் போய் விடுகிறது. ஆனால், அவன் சில நேரங்களில் இல்லாத வறியவர்க்கும், தேவையான பிறர்க்கும் தன் உடைமைகளிலிருந்து அன்புடன் ஈகை செய்தானே அஃதாவது, கொடுத்து உதவினானே அதனால் கிடைத்த புகழ் மட்டுமே அவனுக்கு ஊதியமாக (இலாபம், (Profit) )ஆக வருகிறது. இறுதியில், அந்த 'உயிர்' என்னும் வாணிகன், 'உடல்' என்னும் முதலைத் தான் கடனாகப் பெற்ற இவ்வுலகச் செல்வனிடம் திருப்பிச் செலுத்திவிட்டுத் தனக்கு ஈகையால் கிடைத்த 'புகழை மட்டும் ஊதியமாக எடுத்துக் கொண்டு, போய் விடுகிறான்' - என்பது.

- இந்த மெய்ப்பொருள் உண்மை இக்குறளின்கண் உள்ள 'ஊதியம்(இலாபம்) என்னும் சொல்லால் நமக்குத் தெரிய வருகிறது என்க. ஊதுதல் (பெருகுதல்) ஊதியம். அஃதாவது முதலுக்கு மேல் பெருகுவது.'

3) **ஈதல், இசைபட வாழ்தல் அது வல்லது** : இல்லாதவர்க்கு உதவுதலும் அதனால் புகழ்பெற வாழ்தலும் தவிர.

ஈதல் - ஈகை செய்தல்; உதவுதல். 'வறியார்க்கொன் றீவதே ஈகை' - (221) என்றார் ஆகலான், 'இல்லாதவர்க்கு' என்பது வருவிக்கப் பெற்றது.

**இசைபெற வாழ்தல்: புகழ்பெற வாழ்தல்.**

**அதுவல்லது: அது தவிர.**

- பிற வேறு செயல்களாலும் இசையென்னும் புகழ் கிடைத்தாலும், ஈகையால் கிடைக்கும் புகழே சிறப்பென்றார் என்க.

**'ஈத்துண்பான் என்பான் இசை நடுவான்' - நான்மணி:59:1**

**'வாணன் வைத்த விழுநிதி பெறினும்**
**பழிநமக் கெழுக வென்னாய் விழுநிதி**
**ஈதல் உள்ளமொடு இசைவேட் குவையே' -மதுரைக்:203:205**

**'மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும் . . . .**
**சாவா உடம்பெய்தி னார்' - திரி:16**

**'கடிப்பிரு கண்முரசம் காத்ததோர் கேட்பர்;**
**இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்;**
**அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்றோர்**
**கொடுத்தார் எனப்படும் சொல்' -நாலடி:100**

**'மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறிஇத் தாமாய்ந் தனரே**
**துன்னருஞ் சிறப்பின் உயர்ந்த செல்வர்**
**இன்மையின் இரப்போர்க்கு ஈஇ யாமையின்**
**தொன்மை மாக்களின் தொடர்புஅறி யலரே' - புறம்:165: 1-5**

**'ஈயா மன்னர் நாண**
**வீயாது பரந்தநின் வசையில்வான் புகழே!' - புறம்:168:21-22**

**'செல்வத்துப் பயனே ஈதல்**
**துய்ப்போம் எனினே தப்புந பலவே' - புறம்:189:7-8**

**'ஒருதா மாகிய பெருமை யோரும்**
**தம்புகழ் நிறீஇச் சென்றுமாய்ந் தனரே' - புறம்:266:4-5**

- என்றார், பிறரும்.

- இத்தொடரில் வரும் 'ஈதல்' 'வாழ்தல்' என்னும் இருசொற்களையும் வியங்கோள் வினைமுற்றுகளாகக் கொள்வதிலும், தொழிற்பெயர்களாகக் கொள்வதே பொருத்தமென்க.

4) **ஊதிய மில்லை உயிர்க்கு :** மாந்த உயிர்க்கு ஊதியம் என்பது வேறில்லை.

- ஊதியம்: கூடுதல், (இலாபம்).

- முதலுக்கு மேல் கூடுவது.

உயிர்க்கு: மாந்த உயிர்க்கு.

அது முழுமை பெற்றதால் என்க.

5) இது, புகழ்க்கு அடிப்படைச் சிறப்பே ஈதல் என்று அதிகாரத்துக்குக் கட்டியங் கூறுதலால் முதற்குறளாக இடம் பெற்றதென்க.

**உ ௩ உ. உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று**
**ஈவார்மேல் நிற்கும் புகழ். - 232**

பொருள்கோள் முறை: இயல்பு

பொழிப்புரை: இவ்வுலகத்துப் பேச்சாலும், எழுத்தாலும், பிற இயல், இசை, நாடகக் கலை, இலக்கியங்களாலும், பொதுமக்களும் புலமக்களும் உரைக்கின்ற உரைகள் எல்லாவற்றுள்ளும் கருப்பொருளாக இருப்பது, இல்லாதவர்க்கு இருந்தவர்கள் கொடுத்துதவிய புகழ்ச்சி நிலையே ஆகும்.

சில விளக்கக் குறிப்புகள்:

1) **உரைப்பார் உரைப்பவை எல்லாம் :** இவ்வுலகத்துப் பேச்சாலும், எழுத்தாலும், பிற இயல், இசை, நாடகக் கலை, இலக்கியங்களாலும், பொதுமக்களும், புலமக்களும் உரைக்கின்ற உரைகள் எல்லாவற்றுள்ளும் கருப்பொருளாக இருப்பது.

'எல்லாம்' என்னும் சொல்லால், அவ்வுரைக்கெல்லாம் கருதப்படும் பொருளாக - கருப்பொருளாக இருப்பது என்பது விளங்கிக் கொள்ளப் பெற்றது.

- தனக்கு ஒன்று உதவியவரைப் பற்றி உதவி பெற்றவரும், அவர்குடும்பத்தாரும், அவர் வழியினரும் தொடர்ந்து புகழ்ந்து பேசுவது, உலகியல்பு.

**'எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்**
**விழுமம் துடைத்தவர் நட்பு' - 107**

- என்றார், ஆசிரியரும்.

- அவ்வாறே தாளாண்மை மிக்க ஒருவரையும் உலகத்தவர் தொடர்ந்து பல வகையானும் புகழ்ந்து கொண்டிருப்பதும் உலக இயல்பே.

'ஞாலம் நின்வழி ஒழுக, பாடல்சான்றூ
நாடுடன் விளங்கும் நாடா நல்லிசை' - பதிற்:14:9-10

'வரைபுரை களிற்றொடு நன்கலம் ஈயும்
உரைசால் வண்புகழ்ப் பாரி' -அகம்:303:9-10

'இரவலர் மெலியாது ஏறும் பொறையன்
உரைசால் உயர்வரைக் கொல்லி' - நற்:185:6-7

'கெழீஇக் கேளிர்சுற்ற, நின்னை
எழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே' - பரி:14:23-24

'வீற்றிருந் தோரை எண்ணுங் காலை
உரையும் பாட்டும் உடையோர் சிலரே
மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே' - புறம்:27:5-7

'புகழ்தல் உற்றோர்க்கு மாயோன் அன்ன
உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற' - புறம்:57:2-3

'வள்ளியை யாதலின் . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . .
நுணங்கு செந்நா வணங்க ஏத்திப்
பாடப் பாடப் பாடுபுகழ் கொண்டநின்
ஆடுகொள் வியன்மார்பு' - புறம்:112:8,13-16

'உரைசால் சிறப்பின் உரவோர் மருக
. . . . . . . . . . . . . . . . . . . .
தண்புனல் படப்பை எம்மூர் ஆங்கண்
உண்டும் தின்றும் ஊர்ந்தும் பாடுகம்' - புறம்:166:9,29-30

'அரைசுபடக் கடக்கும் உரைசால் தோன்றல்நின்
உள்ளிவந்த ஓங்குநிலைப் பரிசில்' - புறம்:211:6-7

'புரவலர் புன்கண் நோக்காது இரவலர்க்கு
அருகாது ஈயும் வண்மை
உரைசால் நெடுந்தகை ஓம்பும் ஊரே' - புறம்:229:7-9

'யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
நிரைசால் நன்கலம் நல்கி
உரைசெலச் சிறக்க அவன் பாடல்சால் வளனே' - புறம்:296:29-31

'வேந்தரும் விழுக்கூழ் பரிசிலர்க் கென்றும்

**அருகா தீயும் வண்மை**
**உரைசால் நெடுந்தகை ஓம்பும் ஊரே'** - புறம்:320:16-18
**'இரைமுரசு ஆர்க்கும் உரைசால் பாசறை**
**வில்லேர் உழவரின் நல்லிசை உள்ளி'** - புறம்:371:12-13

என்றார் பிறரும்.

2) **இரப்பார்க்கு ஒன்று ஈவார் மேல் நிற்கும் புகழ் :**

இல்லாதவர்க்கு இருந்தவர்கள் கொடுத்துதவிய புகழ்ச்சி நிலையே ஆகும்.

இரப்பார்க்கு: இல்லை என்று தன்னிடம் வந்து இரந்தவர்க்கு அஃதாவது இல்லாதவர்க்கு.

ஒன்று ஈவார்மேல் நிற்கும் புகழ்: ஒன்று கொடுத்தவர்கள் பாங்கில் இருக்கும் புகழ்ச்சி நிலையே ஆகும்.

- ஒன்று ஈவார்: அவர்கள் புகழ் பெறுமாறு தக்க ஓர் உதவிசெய்தவர்.
- மேல் நிற்கும் புகழ்: அவர் பாங்கில் உள்ள புகழ்ச்சி நிலையே ஆகும்.
- முன்னைய குறளில் 'ஈதல் இசைபட வாழ்தல்' என்றாராகலின், இரப்பார்க்கு ஒன்று ஈந்ததன் மேல் நிற்கும் புகழ்' என்றார்.
- அஃதாவது, உலகில் பலவகையாகப் பேசும் பெறும் புகழ்நிலைகள் எல்லாம், இரப்பார்க்கு - இல்லாதவர்க்கு - இருந்தவர்கள் கொடுத்துதவிய புகழ்ச்சி நிலையே ஆம் என்றார், என்க.

3) முன்னைய குறளில் வாழ்வின் பயன் ஈதலும் அதனால் புகழ் பெறுதலும் என்றவர், இதில், அக்கருத்தை இன்னும் சற்று ஆழமாக, அக்கருத்தை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன், இவ்வுலகத்துப் பாராட்டப் பெறும் புகழ் எல்லாம், இரந்தார்க்கு ஒன்று ஈந்ததால் வந்த பெருமையே ஆகும் என்று கூறலால், அதனையடுத்து இதனை வைத்தார், என்க.

**உ௩௩. ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ்அல்லால்**
**பொன்றாது நிற்பதுஒன்(று) இல். - 233**

பொருள்கோள் முறை:

**ஒன்றா உலகத்துப் பொன்றாது நிற்பது,**
**உயர்ந்த புகழ் அல்லால், ஒன்று இல்.**

**பொழிப்புரை:** எதுவும் பொருந்தி நிலையாக நில்லாத இவ்வுலகத்தில் அழியாது நிற்பது, உயர்ந்த புகழ் அல்லாது வேறொன்றும் இல்லை.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **ஒன்றா உலகத்து :** எதுவும் பொருந்தி நிலையாக நில்லாத இவ்வுலகத்தில்.

- இவ்வுலகத்தில் எந்தப் பொருளும் பொருந்தி நிலையாக நில்லாதது என்பதால் 'ஒன்றா உலகம்' என்றார்.
- இதில், பொருள்கள் மட்டன்றி உலகமும் நிலையாதது என்று சுட்டப்பெற்றது.

**'நில்லாத வற்றை நிலையின என்றுணரும்**
**புல்லறி வாண்மை கடை'** - **331**
**'அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்**
**அற்குப ஆங்கே செயல்'** - **333**

- என்பார், ஆகலின்.
- நிலைபெறும் புகழைச் சுட்ட வந்தவர் உலகின் உலகப் பொருள்களின் நிலைமையைச் சுட்டினார், என்க.

இக்குறளில் வரும் 'ஒன்றா' என்னும் சொல்லை, உலகத்தின்மேல் ஏற்றிச் சொல்லாமல், புகழின்மேல் ஏற்றி, 'இணையில்லாத ஓங்கிய புகழ்' என்று பொருள் தருவர் மணக்குடவர், பரிமேலழகர், பாவாணர் முதலிய உரையாசிரியர்; அது பொருந்தாது.

- 'ஒன்றா' என்பதற்குப் பொருந்தாத, நிலையில்லாத என்பதும், அஃது உலகத்தின்மேல் ஏற்றிச் சொல்லப் படுவதுமே பொருந்தும் என்க. பரிதியாரும், காலிங்கரும் அவ்வாறே பொருள்கொண்டனர்.

2) **பொன்றாது நிற்பது :** அழியாது நிலைத்திருப்பது.

- பொன்றுதல் - அழிதல்
- பொன்றாது - அழியாது. (36, 886)
- எதுவும் நிலையாக நில்லாத உலகத்தில் அழியாமல் நிலையாக நிற்பது.

3) **உயர்ந்த புகழ் அல்லால் ஒன்றுஇல் :** உயர்ந்த புகழ் அல்லாது வேறொன்றும் இல்லை.

- உயர்ந்த புகழ் - என்றது ஈகையால் வந்தது.
- ஒன்று இல்: வேறொன்றும் இல்லை.

- அழிகின்ற, நிலையில்லாத உலகத்தில் அழியாமல், நிலைத்து நிற்பது உயர்ந்த புகழ் ஒன்று மட்டுமே என்பது அறிவியலாலும் மெய்யறிவியலாலும் ஏற்றுக் கொள்ளப்பெறும் ஒரு கொள்கை என்க.

- உலகின் நில அமைப்பும், நீராகிய கடல் அமைப்புகளும், மலைகள், கண்டங்கள், உயிரினங்கள், இயற்கையமைப்புகள் முதலிய அனைத்துமே நிலையில்லாத மாறுதல்களுக்கும் அழிவுகளுக்கும் உட்பட்டன என்பது அறிவியல் அடிப்படையில் நாம் அறிந்த கொள்கையே. அறிவியல் சிந்தனை வளர்ச்சி பெறாத காலத்திலேயே ஆசிரியர், மெய்யறிவுக் கோட்பாட்டின் படி இவ்வாறு கூறியது மிகவும் வியக்கத் தக்கதாம் என்க.

- இக்கொள்கை அற்றைச் சான்றோர் பலராலும் அறியப் பெற்ற கொள்கையாக உள்ளதும் சிந்திக்கத் தக்கது, என்க. என்னை?

**‘கடலக வரைப்பிலிப் பொழில்முழு தாண்டநின்**
**முன்திணை முதல்வர் போல, நின்றுநீ**
**கெடாஅ நல்லிசை நிலைஇத்**
**தவாஅலி யரே,இவ் வுலகமோ டுடனே’ - பதிற்:14:19-22**
**‘வெண்திரை முந்நீர் வளைஇய உலகத்து**
**வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து**
**வண்டன் அனையைமன் நீயே’ - பதிற்:31:21-23**
**‘நல்லிசை நிலைஇய நனந்தலை உலகத்து**
**இல்லோர் புன்கண் தீர நல்கும்**
**நாடல் சான்ற நயனுடைய நெஞ்சின்**
**பாடுநர் புரவலன்’ - பதிற்:86:5-8**
**‘இன்னது செய்தாள் இவளென**
**மன்னா உலகத்து மன்னுதல் புரைமே’ - கலி:54:19-20**
**‘மண்ணியல் ஞாலத்து மன்னுபுகழ் வேண்டிப்**
**பெண்ணியல் நல்லாய் பிரிந்தார்’ - கார்:40**
**‘நில்லா வுலகத்து நிலைமை தூக்கி**
**அந்நிலை யணுகல் வேண்டி’ - பெரும்பாண்:466-467**
**‘தொலையா நல்லிசை உலகமொடு நிற்ப’ - மலைபடு:70**
**‘பொன்றும் இவ்வுட லின்பொருட்(டு)**
**என்றும் நிற்கும் இரும்புகழ்’ - சூளா.அரசியல்:226**

'மன்னா வுலகத்து மன்னியசீர்த் தஞ்சைவாணன்' - தஞ்சை:21

'ஆடுநர் கழியுமிவ் வுலகத்துக் கூடிய
நகைப்புற னாகநின் சுற்றம்
இசைப்புற னாகநீ ஓம்பிய பொருளே' - புறம்:29:24-26

' இவ்வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயின்
இமயத் தீண்டி இன்குரல் பயிற்றிக்
கொண்டன் மாமழை பொழிந்த
நுண்பஃ றுளியினும் வாழிய பலவே' - புறம்:34:19-23

'அரும்பெறல் உலகம் நிறைய
விருந்துபெற் றனரால் பொலிகநும் புகழே' - புறம்:62:18-19

'சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்ககப் படேஎன் ஆயின் . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . .
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் நிலவரை
புரப்போர் புன்கண்கூர
இரப்போர்க் கீயா இன்மையான் உறவே' - புறம்:72:7-9,15-18

'மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே
தின்னருஞ் சிறப்பின உயர்ந்த செல்வர்
இன்மையின் இரப்போர்க்கு ஈயாமையில்
தொன்மை மாக்களின் தொடர்பறி யலரே' - புறம்:165:1-5

'இன்று செலினும் தருமே சிறுவரை
நின்று செலினும் தருமே பின்னும்
முன்னே தந்தனென் என்னாது துன்னி
வைகலும் செலினும் பொய்யல னாகி
யாம்வேண்டி யாங்குஎம் வறுங்கலம் நிறைப்போன்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .

*ஈவோர் அரியஇவ் வுலகத்து*

*வாழ்வோர் வாழஅவன் தாள்வா ழியவே'* - **புறம்:171:1-4,14-15.**

4) சென்ற குறளில் கூறிய ஈவார் மேல் நிற்கும் புகழ்ச் சிறப்புக் கூறியவர், இதில் நிலையா உலகத்துப் பொன்றாது நிற்பது புகழ் ஒன்றே என மேலும் சிறப்புக் கூறியதால், அதன் பின் இது வைக்கப் பெற்றது.

## உ௩௪. நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
## போற்றாது புத்தேள் உலகு. - 234

**பொருள்கோள் முறை:**

*நிலவரை நீள்புகழ் ஆற்றில் புலவரைப்*

*புத்தேள் உலகு போற்றாது.*

**பொழிப்புரை:** இவ்வுலக எல்லையின் அளவு நீண்ட புகழைச் செய்யாத, அறிஞர்களைத் தேவர் உலகம் என்று சொல்லப் பெறுவதும் போற்றிக் கொள்ளாது.

**சில விளக்கக் குறிப்புகள்:**

இந்தக் குறளிலும் மணக்குடவர், பரிமேலழகர், பாவாணர் முதலிய உரையாசிரியர்கள் கருத்து வேறுபடுவர். 'நிலவரை நீள் புகழ் ஆற்றின்' என்பதற்கு, 'ஒருவன் நில எல்லைக் கண்ணே பொன்றாது நிற்கும் புகழைச் செய்யுமாயின்' என்று பொருள் தருவர். அவ்வாறு தந்து, 'நீள் புகழை' ஈகையால் வரும் 'புகழ்' என்று பொருள் கொண்டு, அப்புகழ் கொண்டவனை யல்லாது, 'புத்தேள் உலகம் ஞானிகளையும் பேணாது' என்று முடிவு கொள்ளுவர். இது சரியான பொருளன்று.

இவ்விடர்ப் பாட்டிற்குக் காரணம், 'நீள்புகழ்' என்பதற்கு 'ஈகையால் வரும் புகழ்' என்று பொருள் கொண்டதும், 'ஆற்றின்' என்பதற்குச் 'செய்யுமாயின்' என்றுபொருள் கொண்டதுமே என்க. இவ்விரண்டு பொருள்களுக்குமே செய்யுளில் இடமில்லை.

'நீள்புகழ்' என்பதை, 'ஈகையால் வரும் நீண்ட புகழ்' என்று மட்டுமே பொருள் கொள்ளத் தேவையில்லை. பொதுவாகவே 'நீண்ட புகழ்' என்பதே சாலும். ஏனெனில், ஈகையால் மட்டுமே புகழ் வருவதில்லை. பிற, கல்வி, தொண்டு, அரசியல், வீரம் முதலியவற்றாலும் வருகின்ற புகழ்ப்பெருமையும் ஈண்டு உண்டு. நூலாசிரியர் இவ்வாறான புகழையும் உள்ளடக்கியே கூறினாராதல் வேண்டும்.

'ஈகை'யதிகாரத்தை யடுத்துப் 'புகழ்' அதிகாரம் வருவதால், ஈகையால் மட்டுமே புகழ் என்று கொண்டுவிடக்கூடாது. 'புகழ்' என்பது பொதுவாகவே இங்குச் சுட்டப்பெறுகிறது. அதிகார முதற்குறள், ஈகையைக் கூறுவது, ஈகைக்குக் கொடுத்த சிறப்பேயன்றி வேறில்லை, என்க.

'ஈகையால் புகழ்', என்று கொண்டு, 'ஆற்றின்' என்பதற்குச் 'செய்யின்' என்று பொருள் கொண்டால் மட்டுமே, 'ஈகை புகழ்' 'அறிவுப் புகழின்' மேம்பட்டதென்று கொள்ளலும், அவ்வறிவுப் புகழை அஃதாவது 'புலவரைப் புத்தேள் உலகம் போற்றாது' என்று கூறலும் பொருந்தும். ஆனால் நூலாசிரியர் கருத்து அதுவாகக் கூறுவதில் சிறப்பில்லை.

'ஈகைப் புகழ்' அனைத்துப் புகழினும் சிறப்புடையதாகக் கொள்ளலாம். ஆனால், அதன் பொருட்டு, அறிவுப் புகழ்க்கு உரியவரான புலவரைக் குறைத்து மதிப்பிட்டு, அவரைப் புத்தேள் உலகம் போற்றிக் கொள்ளாது என்று தாழ்த்துவது, சரியில்லாததும், பொருந்தாதுமாகும். மேலும் நூலாசிரியர்க்குமே இழுக்குத் தருவதாம் என்க.

அறிவுடைமையில் மெய்யுணர்வும் - மெய்யறிவும் - அடங்குவதாகும். உலக நடவடிக்கைகள் அத்தனைக்கும் அறிவே காரணமாக நிற்பது. என்னை?

**'அறிவு அற்றம் காக்கும் கருவி'** - **421**
**'அறிவுடையார் ஆவது அறிவார்'** - **427**
**'அறிவுடையார் எல்லாம் உடையார்'** - **430**
**'அரும்பயன் ஆயும் அறிவினார்'** - **198**
**'மருள் தீர்ந்த மாசறு காட்சியவர்'** - **199**
**'மெய்ப்பொருள் காண்பது அறிவு'** - **355**
**'செம்பொருள் காண்பது அறிவு'** - **358**
**'ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்**
**வானம் நணிய துடைத்து'** - **353**
**'அறனறிந்து மூத்த அறிவுடையார்'** - **441**

- என்று பலவாறுரைப்பார் ஆகலான்.

எனவே, அறிவுடையார், நீள் புகழ் பெறுவதே அவர்க்குற்ற பெருந்தகுதி என்னும் ஓர் உண்மையினையே ஆசிரியர், இக்குறட்பாவின் கண் வலியுறுத்த வந்தார் என்க. புலவரும் புகழ் பெறாவிடின் புத்தேள் உலகம் அவரைப் போற்றிக் கொள்ளாது என்பதே ஆசிரியர் கருத்தாதல் வேண்டும். அதற்குப் 'புகழ் பெறாத' என்னும் பொருள் 'ஆற்றின்'

என்னும் சொல்லிலிருந்து பெறப்படுதல் வேண்டும்.

அவ்வாறாயின் அச்சொல், 'ஆற்றில்' என்றிருத்தல் வேண்டும். 'ஆற்றில்' - ஆற்றாா, ஆற்றவியலாத. 'ல்' 'ன்' போலி.

புலமை பெறுதலோடு அமையாது, அப்புலமையால் புகழ்பெறும் செயல்களைப் புலவர்கள் செய்தல் வேண்டும். புலமை வேறு, புலமை புகழ்பெறும் செயல்களைச் செய்தல் என்பது வேறு. வெறும் புலமையே புகழ்பெறுதலுக்குக் காரணமாகி விடாது என்க. புலமை புகழ் பெறுதல், அதுகொண்டு செயற்கரிய செய்தல். நூலாசிரியரின் புலமையே இதற்குத் தக்க சான்றாம் என்று கருதி மகிழ்க.

2) **நிலவரை நீள்புகழ் ஆற்றில் புலவரை:** இவ்வுலக எல்லையின் அளவு, நீண்ட புகழைச் செய்யாத அறிஞர்களை.

நிலவரை நீள்புகழ்: இவ்வுலக எல்லையின் அளவு நீண்ட புகழைச் செய்யாத அறிஞர்களை.

ஆற்றில் புலவரை : ஆற்றிலாத அறிஞர்களை; செய்யாத அறிஞர்களை.

- புகழ் பெறாத புலவர்களைப் புத்தேள் நாடு, போற்றிக் கொள்ளாது என்பதால், அறிஞர்களும் ஏதோ ஒருவகையில் புகழ்பெறுதல் வேண்டும்.

3) **புத்தேள் உலகு போற்றாது :** தேவர் உலகம் என்று செல்லப் பெறுவது போற்றிக் கொள்ளாது.

- புத்தேள் உலகு: தேவருலகம் என்று சொல்லப்பெறும் ஒரு கற்பனை நாடு. (இது பற்றிய விளக்கத்தைக் குறள் எண்.58 -இன் விளக்கவுரையில் காண்க.)

- புகழ் பெறாத எவரையும் புத்தேள் உலகம் ஏற்றுக் கொள்ளாது என்பதால் புகழ்த் தகுதி பெறப்பட்டது.

4) புகழினது பெருமைச் சிறப்பு இதிலும் கூறப் பெற்றதால், இது முன்னதைத் தொடர்ந்தது.

**உ௩ ரு. நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்**
**வித்தகர்க்(கு) அல்லால் அரிது. - 235**

**பொருள்கோள் முறை: இயல்பு.**

**பொழிப்புரை:** புகழ் ஆக்கம், அல்லது வளர்தல் போலவே, உருவாகி வளர்ந்து வரும் பல்வகைக் கேடும், அப் புகழ் முதிர்வடைந்து நிலை பெறுவது போலவே, உடல் முதுமையுற வருவதாகும் இறப்பும், மிகச் சிறந்த அறிவுத்திறப்பாடு உடையவர்க் கல்லால் தாங்கிக் கொள்ளுதல் அரிதாகும்.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) இப்பாடலின்கண் ஆசிரியர் உலகியல் சார்ந்த சில அறிவியல் உண்மைகளை மிகச்சிறப்பாக எடுத்துக் கூறுவர்.

மிகச் சில சொற்களால் நிறைந்த பேருண்மைகளை விளக்குவதால், பலருக்கும் பொருள் மயக்கம் ஏற்பட்டு உளது கவனிக்கத் தக்கது. இதில் தவிர்க்க வியலாதவாறு வடசொல் ஒன்று (வித்தகர்) ஊடுருவி நின்றுள்ளது.

இதில் உள்ள கருத்துக்கு எழுவாய் மூலமாகிய புகழ் என்னும் சொல் இக்குறளின்கண் பயன்படுத்தப் பெற இயலவில்லை. எனவே அச்சொல்லை அதிகாரத்தால் வருவித்துச் சொல்ல வேண்டியுள்ளது.

இதனுள் கூறப்பெறும் நுட்பமான கருத்துகள் மூன்று:

1) ஒருவர்க்குப் புகழ் ஏற்பட வேண்டுமெனில், அவரின் புகழ் முயற்சிக் கிடையில் பலவகையான கேடுகள், துன்பங்கள் அவர்க்கு வரும்.

2) அவ்வாறு அவர் இறுதிவரை உழைத்தால்தான் அப்புகழ்ப் பெருமை நிறைவு பெறும்; நிலைபெறும்.

3) இவ்வளவையும் தாங்கிக் கொண்டு செய்வதற்கு மிகச் சிறந்த அறிவுத் திறப்பாடு(அறிவும், செயல்திறனும்) அவர்க்கிருத்தல் வேண்டும்.

இம் மூன்று கருத்துகளையும் ஒன்பது சொற்களால் ஆசிரியர் விளக்கியுள்ளது, ஆசிரியரின் கூர்த்த அறிவையும், சிறந்த சொல்லாற்றலையும் காட்டுகிறது.

புகழ் என்பது, ஈகை, கல்வி, அறிவு, தொண்டு, ஆட்சி, வீரம், கண்டுபிடிப்பு முதலிய பல்வேறு திறப்பாடுகளால் ஒருவர்க்கு ஏற்படுவதே பெருமை - சிறப்பு - ஆகும்.

**'செயற்கரிய செய்வர் பெரியர் சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார்'** **- 26**

**'பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்**
**அருமை உடைய செயல்'** **- 975**

என்பார் ஆசிரியறாம்.

இவ்வாறான அருஞ்செயல் செய் முயல்வோருள் பலர் அச் செயலருமை கருதி, இடையிலேயே நெகிழ்ச்சி கொள்ளுதல் உலகியல்பாக உள்ளது. ஆனால் அவ்வாறு இறுதிவரை தம் நோக்கத்துள் உறுதியுடையவராயிருத்தல் அருமையிலும் அருமையாம்.

இதனை ஆசிரியர் பலவாறு உணர்த்துவார்.

**'கடைகொட்கச் செய்தக்க தாண்மை இடைகொட்கின்**
**எற்றா விழுமம் தரும்'** - ***663***

**'கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது**
**தூக்கம் கடிந்து செயல்'** - ***668***

**'துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி**
**இன்பம் பயக்கும் வினை'** - ***669***

**'எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்**
**வேண்டாரை வேண்டாது உலகு'** - ***670***

என்னும் குறட்பாக்களுள் செயலருமையும், அதனின் மேற்சென்று செய்தலும் உணர்த்தப் பெற்றது. இவ்வகையில் பொதுத்தொண்டு செய்வார்க்கு இடுக்கண்களும், உடல் நலம் கெடுதலும்கூட உய்த்து உணர்த்தப் பெறுகின்றன.

**'அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்**
**ஆற்றுவார் மேற்றே பொறை'** ***-1027***

**'இடும்பைக்கே கொள்கலன் கொல்லோ குடும்பத்தைக்**
**குற்றம் மறைப்பான் உடம்பு'** ***-1029***

என்பன அவை.

இதில் கூறப்பெறும் முதற்கருத்து இதையொட்டியதுதான். புகழ்தரும் அருஞ்செயலைச் செய்ய முனைபவர்க்குப் பலவகையான கேடுகள் - கெடுதிகள் - துன்பங்கள் வரும். அவர்க்கு அவற்றைத் தாங்கும் மனவன்மையும் உறுதியும் வேண்டும்.

இத்தகைய கேடுகள், அவர் புகழ் வளர வளர வருபவை, என்பார், ஆசிரியர்.

2) **நத்தம் போல் கேடும் :** புகழ் ஆக்கம் அல்லது வளர்தல் போலவே உருவாகி வளர்ந்து வரும் பல்வகைக் கேடுகளும்.

நத்தம் : ஆக்கம்; வளர்ச்சி.

நந்துதல் - ஆகுதல், வளர்தல்.

நந்தல் - என்பது வலிந்து, மகரவீறு பெற்றது.

நத்தம்போல் - ஆக்கம்போல்.

'புகழ்' என்னும் அதிகாரக் கருத்தைத் தழுவி, 'புகழ்ஆக்கம் அல்லது வளர்ச்சி போலவே' என்று பொருள் பட்டது.

- ஒரு செயலால் ஒருவர்க்குப் புகழ் வளர வளர, அவர்க்குத் துன்பங்களும் அடுத்தடுத்து ஆகி வரும் என்றார்.

- ஒருவர் ஓர் அரிய செயலைச் செய்யத் தொடங்குகையில் துணையாக நின்ற பலர், அச்செயலால் அவர்க்குப் புகழ் வரவர, இவர்க்ள் அவர் மேல் பெறாமை கொண்டு அவரை விட்டு விலகிப் போவது மட்டுமின்றி, அவர்க்கு எதிராகவும் நின்று தொல்லை தருவர்.

- இவர் அக்கால் தனித்து நின்று இயங்குதலாலும், அவர்கள் மறைமுகமாகக் கொடுக்கும் இடையூறுகளாலும் பெரிதும் துன்பப்பட வேண்டியிருக்கும்.

- அவர்கள் பொறாமையால் விலகுவது ஒருபுறமிருக்க இன்னுஞ் சிலர் இவர் தொடங்கிய அருஞ்செயலின் சுமைதாங்காமலும், இடையில் இவரைத் தனியே விட்டு விட்டு விலகுவர். இதனால் செயலைத் தொடங்கியவர் தனித்து இயங்கவேண்டி வரும்.

இது பற்றிய ஆசிரியர் கருத்து ஒன்றை மேலே கண்டோம்.

**'அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்**
**ஆற்றுவார் மேற்றே பொறை'** *-1027*

- அஃதாவது, போர்க்களத்துக்குப் போய் போர் முனையில் நின்று பொருதும் வீரனுக்கு, உயிரையிழக்கும் அளவுக்கு எத்துணைத் துன்பம் இருக்குமோ, அத்துணைச் சுமையிருக்கும் தனித்து நின்று புகழ்தரும் ஒருசெயலில் இறங்கினார்க்கு - என்பார்.

- அத்துடன், துணை நின்றவர் பணிச்சுமை கண்டு, இவரைத் தனியே விட்டுவிட்டு இடையில் போய்விடுவர். அத்தகையாரைத் துணையாகக் கொள்வதைவிடத் தனித்து இயங்குவது மேல் என்பார். இதில் இடையில் விட்டு விலகுவாரைப் பயிற்சியில்லாத குதிரை என்பார் ஆசிரியர்.

**'அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமை அன்னார்**
**தமரின் தனிமை தலை'** *- 814*

(அமரகம் - போர்க்களம்; ஆற்றறுத்தல் - வழியில் வீழ்த்தி விட்டுத் திரும்பிவிடுதல்; கல்லாமா - பறிற்சியில்லாத குதிரை. தமர் - துணையாளர். தனிமை தலை - தனித்தே போராடுவது சிறந்தது.)

- இவ்வாறு, துணையிழப்பு, தனிமை, பொருள் முட்டுப்பாடு, வறுமை, குடும்பச்சுமை, எதிரிகள் துன்பம், இழிவு, எள்ளல், தூற்றுதல் முதலியவை தாங்கல் ஆகிய இவையெல்லாம், புகழ்க்குக் காரணமான ஓர் அருஞ்செயலைச் செய்கையில் இடையில் வரக்கூடிய கேடுகள் என்க.

- புகழ் ஆக்கம் பெறப்பெற இக்கேடுகளும் மேலும் மேலும் மிகுந்தும், அழுத்தமாகவும் வரும் என்றார், என்க.

3) **உளதாகும் சாக்காடும் :** அப்புகழ் முதிர்வடைந்து நிலைபெறுவது போலவே, உடல்முதுமையுற வருவதாகும் இறப்பும்.

உளதாவது : புகழ்நிலை பெறுவது.

சாக்காடு : இறப்பு.

- புகழ் வளர்ந்து முதிர்வடைய முதிர்வடைய, உடலும் முதுமையுற்று வரும். அது நிலைபெறும்பொழுது, உடலும் இயக்கமின்றி நிலைபெற்று விடும். அஃதாவது இறப்பைத் தழுவும்.

- இஃது, ஏதோ கற்பனையாகச் சொல்லப்படுவதுபோல் தோன்றினும், இஃது உலகியல் உண்மையாகவும், மெய்யறிவியல் உண்மையாகவும் இருக்கின்றதை அறிவினார் உணர்ந்து தெளிதல் வேண்டும்.

- உலகியலில் இதுவரை மிகுபுகழ் பெற்றவர்தம் வரலாறாகவே இஃது இருக்கிறது. எண்ணிப் பார்க்க.

- பாவாணர் இங்கு ஓர் அழகியல் வடிவத்தைக் காட்டுவார். அஃது இது:

'பொதுவாக, ஒருவன் வாழ்க்கைப் பொறுப்பேற்ற பின்பே, புகழுக் கேற்ற ஈகை வினைகளையும் தொண்டுகளையும் செய்யமுடியும். அதற்குள் அவன் உடம்பு முழுவளர்ச்சி யடைந்திருக்கும். புகழ்த் தொண்டில் ஈடுபட்டுக் காலம் செல்லச் செல்ல, மூப்பினால் உடம்பு தளர்ந்து வருகின்றது. இறுதியில் சாக்காடு நேர்கின்றது. அதுவரை பொது நலத்தொண்டைத் தொடர்ந்து செய்து வந்ததினால், புகழும் படிப்படியாக வளர்ந்து, அவன் சாக்காட்டு பூதவுடம்பு மறைந்தபின் தானே விளங்கித் தோன்றுகிறது.'

4) **வித்தகர்க் கல்லால் அரிது :** மிகச் சிறந்த அறிவுத்திறப்பாடு உடையவர்க் கல்லால், தாங்கிக் கொள்ளுதல் அரிதாகும்.

வித்தகர்க்கு: மிகச் சிறந்த அறிவுத் திறப்பாடு உடையவர்க்கு.

வித்தகர் - வடசொல் வடிவம்.

- பாவாணர் இதைத் தமிழ்த்திரிசொல் என்பார். அதற்கு 'விழி' என்னும் சொல்லை மூலமாகக் காட்டுவார். அவர் காட்டும் விளக்கம் இது:

*'விழித்தல் - கண் திறத்தல், பார்த்தல், காணுதல், அறிதல்.'*

*'விழி - பார்வை, கண், அறிவு, ஓதி(ஞானம்).'*

*விழி - விடி(இலத்) - வித்(வ) - வித்தகன் - வித்தகம் - வித்தகர்.*

- இச்சொல் தமிழ் வேர்ச்சொல் கொண்டதேனும், வடமொழியினர் உருவாக்கிக் கொண்ட சொல்லே ஆகலின் வடசொல்லே.

- *திருவள்ளுவர்க்கு(கி.மு.300) முன்பே, தொல்காப்பியர் காலத்திற்கு(கி.மு.700) முன்பே தமிழகத்தில் ஆரிய வழக்கு வேரூன்றி விட்டது. அவரின் தென்னாட்டு வருகை, கி.மு.1000 -1500 போல் என்பார் பாவாணர். அவரின் ('வடமொழி வரலாறு') வடநாட்டில் அவர்களின் சமற்கிருத ஆக்கம் கி.மு.2000-2500 போல். (மேற்படி நூல்).*

- எனவே, கழகக் காலச் செய்யுள்களில், தொல்காப்பியத்துள்ளும் வடசொற்கள் அஃதாவது சமற்கிருதம், பிராகிருதம், பாலி முதலிய சொற்கள் தமிழ்மொழியின்கண் வந்து வழங்கின. பரவலாக இல்லையேனும் ஆங்காங்கே இடம் பெற்றன.

- *சான்றுக்குச் சில:*

**அஷ்டமி** - *அட்டமி (சிலப்: 23-134)*

**அத்திரி** - குதிரை, கழுதை, கோவேறு கழுதை.

*(நற்:278:7; பரி:10:6; அகம்: 120:10; 350:6; சிலப்:6:119)*

**அபகாரம்** - பொல்லாங்கு, தீமை, நன்றியின்மை. *(நாலடி:69:2)*

**(அநேகம், அநித்தியம், அப்பிரசித்தம், அபஞ்சிகம்** - முதலிய நூற்றுக்கணக்கான சொற்கள். மணிமேகலை, சிலப்பதிகாரம் முதலியவற்றுள் வந்துள்ளன.)

**இந்திரியம்** - *(மணி)*

**உத்திரியம்** - மேலாடை. *(கலி:96:13)*

**ஊனம்** - உறுப்புக்குறை *(மணி; இனி.நா; ஏலாதி, ஐந்.எழு)*

**கந்தம்** - மணம். *(பரி:4:22; அகம்:307:12; புறம்:52:12; மணி)*

**சம்பந்தம்** - *(மணி.29:153, 186)*

**சயனம்** - படுக்கை *(மணி)*

**சரணம்** - *(மணி) (சிலப்) (பழமொழி)*

**சரவணம்** - *(மணி)*

**சனங்கள்** - *(பழமொழி:230)*

**சனம்** - *(பரி. 10-9, 59)*

**சாத்தியம்** *(மணி)*

***சாரூபம்*** *(சிலப்)*

***சாதனம்*** *(மணி)*

***சாதித்தல்*** *(மணி)*

***சாந்தி*** *: (பதிற்; சிலப்; மணி)*

***சாமானியம்*** *(மணி)*

***சிங்கம்*** *(சிலப்; மணி)*

*- முதலியன. விரிவாக நூல்களுள் கண்டுகொள்க.*

*- இத்தொடர்க்கு உரையாசிரியர் 'இத்தகு நிலை அறிஞர்க்கு அல்லாமல் பிறர்க்கு வாய்த்தல் இல்லை' என்று பொருள் படுமாறே பொருள் கூறியுள்ளனர்.*

*- பரிமேலழகர், 'சதுரப்பாடு உடையார்க்கல்லது இல்லை என்றவாறு' என்றும்,*

*- மணக்குடவர், 'வல்லவற்கல்லது அரிது', 'மக்களெல்லார்க்கும் அரிது' என்றும்,*

*- பாவாணர் 'திறப்பாடுடையவர்க்கன்றி ஆகாவாம்' என்றும் பொருள்தருவர்.*

*இவற்றின் வழி, 'வித்தகர்க்கல்லால் அமையாது' என்றே பொருள் கொள்வது போலாகும்.*

*- இஃது, அத்துணைச் சரியன்று. 'இந்நிலை பிறர்க்கு வாயாது, அமையாது' - என்பது, இஃது ஏதோ ஒரு நல்வாய்ப்புப் போல் பொருள் கொள்ள ஏதுவாகிறது.*

*- அஃது அற்றன்று, 'அந்நிலைகள் அறிவுத்திறன் உள்ளவர்கள் அல்லாமல் பிறர் தாங்கற்கரிது' என்பதே சரியான பொருளாகும் என்று அறிக.*

- மேலும், 'நத்தம்' என்பதற்குப் பரிதியாரும், காலிங்கரும், இக்கால உரையாசிரியர் சிலரும் 'சங்கு' என்று பொருள் கொண்டு, 'அதுபோல் வித்தகர் துன்புறினும் மேலும் தாம் பெருமை குன்றார்' என்றும், 'சங்கைச் சுடச்சுட வெண்மை பளிச்சிடல் போல் புகழ் வளர வரும் வறுமை' என்றும் பொருள் காண்பர்.

- 'புகழ் ஆகி வருவதுபோல் கேடு வரும்' என்றற்கு, 'சங்கு' வெண்மையுறுவது போல், என்பது, சுற்றிவளைத்துப் பொருள் கொள்வதாகும். மேலும் 'நத்தம்' என்பதற்குச் 'சங்கு' என்று பொருள் கொண்டு விட்டால், 'ஆக்கம், வளர்ச்சி' என்பதற்கு சொல் விளக்கம் இல்லாது போதலும் உணர்தல் வேண்டும்.

5) இது, நிலவரை நீள்புகழ், ஆற்றிலாப் புலவரை முன் பாடலில் கூறியவர், இதில், அத்தகு அறிவு வல்லவர், புகழ்பெறுதல் எத்துணை அரிது என்று கூறியதால், அதன் பின் இது வைக்கப் பெற்றது, என்க.

**உ௩௬. தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று. - 236**

பொருள்கோள் முறை: இயல்பு.

பொழிப்புரை: *ஒருவர் உலக மக்களிடத்துத் தாம் விளங்கித் தோன்ற விரும்பினால், தம்மை அவர்கள் புகழ்கின்ற வகையில் விளங்கித் தோன்றுக. அவ்வாறு இல்லாதவர்கள் (தம்மை அவர்கள் இகழ்கின்ற வகையில் அறிமுகம் ஆவதை விட) அவ்வாறு தோன்றாமல் இருப்பதே நல்லது.*

சில விளக்கக் குறிப்புகள்:

1) **தோன்றின் :** *ஒருவர் உலக மக்களிடத்துத் தாம் விளங்கித் தோன்ற விரும்பின்.*

*தோன்றுதல்: விளங்கித் தோன்றுதல்.*

*தோன்றுதல் பிறத்தலையும் குறிக்கும்மேனும், இங்கு அதைக் குறியாது. பிறரிடத்து விளங்கித் தோன்றுதலையே இங்குக் குறித்தது. என்னை?*

*தோன்றின் - தோன்றுதல், காணப்படுதல்.*

**'உட்பகை தோன்றின்'** - ***(884) (885)***
**'நலத்தின்கண் நாரின்மை தோன்றின்'** - ***(958)***
**'தோன்றிவிடும்'** - ***(1253)***

2) **புகழொடு தோன்றுக :** *தம்மை இவ்வுலக மக்கள் புகழ்கின்ற வகையில் விளங்கித் தோன்றுக.*

- *புகழொடு: இவ்வுலக மக்கள் புகழ்கின்ற தன்மையோடு.*
- *தோன்றுக: அவர்களின் முன் விளங்கித் தோன்றுக.*
- *ஏதோ ஒருவகையில் பிறர் மதிக்கத்தக்க, பெருமையாக நினைக்கத் தக்க வகையில் புகழ்பெற்று விளங்குக.*
- *உலகில் பிறந்து, தம் அரிய செயலாலும், அறிவாலும், ஈகையாலும் பிறவற்றாலும் முயன்றுதான் புகழ்பெற முடியுமே தவிர, புகழ்பெறுவதற்கென்றே பிறத்தல் இயலாது. பிறவி, இயற்கையின்*

கோட்பாட்டை உள்ளடக்கியது. அது நம் விருப்பப்படி அமைவதன்று. எனவே அவ்வாறு பொருள் கொள்வது, இயற்கையியலுக்கும், அறிவியலுக்கும் மாறுபட்டது; பொருந்தாதது.

- எனவே, பரிமேலழகர், ‘மக்களாய்ப் பிறக்கின் புகழுக்கு ஏதுவாய குணத்தொடு பிறக்க’ என்றது, தவறு. வேத மதக் கொள்கைக்கும் அது பொருந்தாது. தெய்வங்கள் மாந்தராய்ப் பிறப்பெடுக்கும் திருவிறக்க (அவதார)க் கதைகளிலேயே அவ்வாறு நடப்பதாக ஆரியமதக் கற்பனைக் கூற்றும்கூட அதற்குப் பொருந்திவராது.

3) **அஃதிலார் தோன்றலில் தோன்றாமை நன்று :** அவ்வாறு இல்லாதவர்கள் (தம்மை அவர்கள் இகழ்கின்ற வகையில் அறிமுகம் ஆவதைவிட) அவ்வாறு தோன்றாமல் இருப்பதே நல்லது.

- உலகமக்கள் தம்மைப் புகழ்கின்ற வகையில் விளங்கித் தோன்ற இயலாதவர்கள், அவர்கள் இகழ்கின்ற வகையில் அறிமுகம் ஆகக் கூடாது. அவ்வாறு தோன்றுவதைவிட, அவர்கள் தோன்றாமல் இருப்பதே நல்லது - என்றார், என்க.

- இந்திய வரலாற்றில், காந்தியடிகள் புகழ் பெற்றவர். அவரை, அவர் இந்து - முசுலீம் கொள்கையைப் பிடிக்காத ‘கோட்சே’ என்னும் கொடியவன் ஒருவன் சுட்டுக் கொன்றான்.

- ‘கோட்சே’ மக்களுக்குத் தெரியாதவனாக இருந்து, காந்தியடிகளைக் கொன்றதால், உலக மக்கள் அனைவர்க்கும் தெரிந்தவனாக ஆகிவிட்டான்.

- மக்களிடம் விளங்கித் தோன்றின் காந்தியடிகளைப் போல் தோன்றுக. அவ்வாறில்லாதவர்கள் கோட்சே போல் மக்கள் இகழ்கின்ற வகையில் தோன்றுவதைவிட, தோன்றாமல் இருப்பது நல்லது - என்னும் வகையில் பொருள்படுவது, இக் குறள் கருத்து. மற்று, தோன்றுக என்பதற்கும், தோன்றாமை என்பதற்கும் பிறப்பை இணைத்துப் பொருள்கூறல் தவறு.

- பாவாணரும், இத்தொடர்களுக்குப் பொருள் கூறுகையில்,

‘ஒருவர் இவ்வுலகத்தில் பிறக்கின் புகழ்க்கு ஏதுவான குணத்தொடு பிறக்க; அக்குணமில்லாதார் பிறத்தலை விடப் பிறவாதிருத்தலே நல்லது’ - என்று கூறிவிட்டு, விளக்கத்தில்,

‘பிறத்தலும் பிறவாமையும் இறைவன் ஏற்பாட்டின் படி அல்லது ஊழின் அமைப்புப் படியே நிகழ்வதால், அவை பிறப்பவரின் உணர்ச்சியொடு கூடியனவும் விருப்பிற்கு அடங்கியனவுமல்ல’.

ஆதலால், இங்குத் ‘தோன்றுக’, ‘தோன்றற்க’ என்று கூறியதெல்லாம், புகழுக் கேற்ற நல்வினை செய்வானைப் பாராட்டியதும், அது செய்யாதானைப்

பழித்ததுமே யன்றி வேறல்ல என அறிக - என்று கூறி அமைவு செய்வார்.

- இக்குழப்பம், 'தோன்றுதல்' 'தோன்றாமை' என்னும் சொற்களுக்குப் 'பிறத்தல்' 'பிறவாதிருத்தல்' என்று பொருந்தாத பொருள்களைக் கண்டதால் வந்த இடர்ப்பாடே என்க.

'தோன்றல்', 'தோன்றாமை' இரண்டிற்கும் விளங்கித் தோன்றுதலும், தோன்றாமையும் என்னும் பொருளில், பிறரும் ஆண்டுள்ளது காண்க.

**'ஈண்டுநின் றோர்க்கும் தோன்றும்; சிறுவரை**
**சென்றுநின் றோர்க்கும் தோன்றும்'** - புறம்:114:1,2

**'வான்தோய் சிமையம் தோன்ற லானே'** - அகம்:378:24

**'முள்நுனை தோன்றாமை முறுவல்கொண் டடக்கி'** - கலி:142:7

**'துய்க்கும் இடத்தச்சம்; தோன்றாமைக் காப்பச்சம்'** - நாலடி:83:2

4) முன்னவற்றுள் புகழ்ச் சிறப்புக் கூறியவர், இதனுள் புகழ்பெறுவார் சிறப்பும் சிறப்பின்மையும் கூறியதால் அவற்றின் பின் இஃது இடங்கொண்டது.

## உ௩எ. புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை இகழ்வாரை நோவது எவன். - 237

**பொருள்கோள் முறை:** இயல்பு.

**பொழிப்புரை:** நற்செயல்கள் செய்து, பிறர் தம்மைப் புகழ்ந்துரைக்குமாறு வாழ இயலாதவர், அவ்வாறு இயலாமைக்குத் தம்மை நொந்து கொள்ளாமல், பிறர், தம்மை இகழ்வதற்காக, அவர்களை நொந்து கொள்வது எதனால்?

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) **புகழ்பட வாழாதார் தம்நோவார்:** நற்செயல்கள் செய்து பிறர் தம்மைப் புகழ்ந்துரைக்குமாறு வாழ இயலாதவர், அவ்வாறு இயலாமைக்குத் தம்மை நொந்து கொள்ளாமல்.

- புகழ்பட வாழ்தல், தம் தம் அருஞ்செயல்களால் ஆவதேயன்றித் தாமே நிகழ்வதன்று. எனவே, எந்த நற்செயலும் செய்யாமல் புகழ் பெறுதல் இயலாது. எனவே புகழ்பெறும்படி நற்செயல் ஏதும் செய்யாமைக்குத் தாமே காரணம் என்று தம்மை நொந்து கொள்வதே தக்கது.

- *ஆனால், பிறர்தாம் தம் நிலை அல்லது தகுதி கண்டு தம்மைப் பாராட்டவில்லை என்று இவர் நினைத்துக் கொள்வது பொருந்தாது என இத்தகையவர்கள் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.*

- *தகுதி இருப்பினும், செயலின்றிப் புகழில்லை என்பது உணர்த்தினார், என்க.*

*2) தம்மை இகழ்வாரை நோவது எவன்?: பிறர், தம்மை இகழ்வதற்காக அவர்களை நொந்து கொள்வது, எதனால்?*

- *பிறர்தம்மை இகழ்வது, பிறர்க்கு நன்மை செய்யத் தம்மால் இயல்வதாக இருந்தும், ஒன்றும் செய்யாமல் இருப்பதால் என்க. என்னை?*

**'செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க**
**செய்யாமை யானும் கெடும்' - 466**
**'ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்**
**தோற்றம் நிலக்கும் பொறை' -1003**
**'நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்**
**பண்புபா ராட்டும் உலகு' - 994**
**'பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்**
**அருமை உடைய செயல்' - 973**

- *என்றார், ஆகலின்.*

**'உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்**
**துன்னருங் கேளிர் துயர்களையான் - கொன்னே**
**வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ**
**இழந்தான்என்று எள்ளப் படும்' - நாலடி:9**

- *என்றார் பிறரும்.*

*3) முன்குறளில், புகழொடு தோன்றுக என்றவர், இதில் புகழ்பட வாழாதார் குறைசுட்டியதால், அதன்பின்னர் இது வைக்கப் பெற்றது.*

**உ௩அ. வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்**
**எச்சம் பெறாஅ விடின். - 238**

**பொருள்கோள் முறை:**

**இசைஎன்னும் எச்சம் பெறாஅ விடின்**
**வையத்தார்க்கு எல்லாம் வசை என்ப.**

**பொழிப்புரை:** *அவரவர் வாழ்க்கைக்குப் பின்னர் எஞ்சி நிற்கின்ற புகழைப் பெறாவிட்டால், இவ்வுலகில் வந்து மக்களாய்ப் பிறந்து வாழ்ந்து மறைந்தார்க்கும், வாழ்ந்துகொண்டிருப்பார்க்கும் - எல்லாம் இகழ்ச்சியே ஆகும் என்பர் சான்றோர்.*

**சில விளக்கக் குறிப்புகள்:**

*1)* ***இசை என்னும் எச்சம் பெறாவிடின்:*** *அவரவர் வாழ்க்கைக்குப் பின்னர் எஞ்சி நிற்கின்ற புகழைப் பெறாவிட்டால்.*

*இசையென்னும் எச்சம்: மிகுந்தபுகழ் என்னும் வாழ்க்கையின் எச்சம்.*

*எச்சம் - எஞ்சியிருப்பது.*

*ஒருவன் வாழ்க்கைக்குப் பின் எஞ்சியிருப்பது, அவன் பிள்ளைகள், அறிவு, செல்வம், புகழ், பழி என்பவை எல்லாமும் எச்சமே.*

- *இருப்பினும் பிற எச்சங்கள் அவ்வவ் வளவில் நின்று, காலப்போக்கில் இல்லாமற் போவன.*

- *ஆனால், புகழ் எச்சம் மட்டும் இவ்வுலகம் உள்ளவும், மக்கள் மாட்டுநின்று அவர் சிறப்பைப் பிறர்க்கு உணர்த்திக் கொண்டிருக்கும். ஆகையால், புகழ் எச்சமே பிற அனைத்திலும் சிறப்பு வாய்ந்ததாகும்.*

- *எனவேதான் இசை என்னும் எச்சம் என்றார்.*

- *அவ் வெச்சம் என்னும் புகழ் ஈகையால், அறிவால், வீரத்தால், பிற சிறப்புச் செயல்களால் வருவது.*

- *பெறாவிடின்: முயன்று பெறாவிட்டால்.*

- *பிள்ளைகள், அறிவு, செல்வம், வீரம் முதலிய அனைத்தும் பெறுவனவே எனினும், ஒருவன் புகழைப் பெறும் அளவிற்கு நற்செயலைச் செய்தல்வேண்டும் என்றார்.*

- *பெறாஅ என்பது இசைநிறை (சீர்நிறை)அளபெடை.*

*2)* ***வையத்தார்க் கெல்லாம் :*** *இவ்வையத்தின்கண் மக்களாய்ப் பிறந்து வாழ்ந்து மறைந்தார்க்கும், வாழ்ந்துகொண்டிருப்பவர்க்கும் எல்லாம்.*

- *இவ்வுலகின்கண் பிறவுயிர்கள் அனைத்தும் பிறந்து வாழ்ந்து மறைகின்றன. ஆனால், அவற்றுக்கெல்லாம் வாழ்வுச் சிறப்பு ஏதுமில்லை. ஒன்றுபோல்வதே அனைத்தும்.*

- *உயிரினங்களுள் மக்கள் வாழ்க்கைக்கே அனைத்துச் சிறப்புகளும் வரலாறும் உண்டு. ஆனால், அவ்வனைத்துச் சிறப்புகளும் ஒருவர்க்குப்*

போலவே அனைவர்க்கும் இருப்பின் அதுவும் சிறப்பின்றாம்.

- எனவே, ஒருவர் சிறப்புப் பிறரினின்று வேறுபட்டுத்தனிச் சிறப்பாக இருப்பின் அதுவே பெருமைக்குரியது.

- அத்தகைய வாழ்க்கைச் சிறப்பு உடையவரே 'வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த' (50) புகழ்ச்சிக்கு உரியவர். பிறர் அனைவரும் இகழ்ச்சிக்கு உரியவரே ஆவர், என்பது ஆசிரியர் கருத்து.

3) **வசை என்ப:** இகழ்ச்சியே ஆகும் என்பர் சான்றோர்.

வசை: தாழ்ச்சி, இகழ்வு, பழிப்பு, குற்றம் - முதலிய பொருள்களைக் குறிக்கும்.

- இகழ்ச்சி - இகழ்தற்குரியது.

- செய்தற்கரிய அனைத்து வாய்ப்புகளைப் பெற்றிருக்கும் மக்கள் பிறவி உற்றும், பெருமைக்குரிய ஓர் அருஞ்செயலையும் செய்யாது வீணே உண்டு, உடுத்து, உயிர்த்து களித்து மறைந்து போதல் இழிவும் இகழ்ச்சிக் குரியதுமாகும் என்றார். என்னை?

**'செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார்' - 26**

**'அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்**
**புறத்த புகழும் இல' - 39**

**'நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை**
**மேற்சென்று செய்யப் படும்' - 335**

**'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்**
**கருமமே கட்டளைக் கல்' - 505**

**'அறிவறிந்து ஆள்வினை இன்மை பழி' - 618**

**'என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு**
**நன்றி பயவா வினை' - 652**

**'ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு**
**அஃதிறந்து வாழ்தும் எனல்' - 971**

**'பெருமை உடையவர் ஆற்றுவர் ஆற்றின்**
**அருமை உடைய செயல்' - 975**

**'எச்சமென்று என்எண்ணும் கொல்லோ ஒருவரால்**
**நச்சப் படாஅ தவன்' -1004**

- என்பார் ஆசிரியர் ஆகலின்.

- இவ்விடத்து, மணக்குடவர் தரும் ஒருசிறு விளக்கம் கவனிக்கத்தக்கது. அது, 'மேல் (முன்குறளில்) 'புகழில்லாதாரை இகழ்ப' என்றார்; 'அவர் குற்றமில்லாராயின் இகழப்படுவரோ' என்றார்க்கு, 'வேறு குற்றம் வேண்டா புகழின்மை தானே அமையும்' என்பார், என்பது.

4) முன் பாடலில் கூறியவாறு, 'புகழில்லாதார் இகழப்படுவார்' என்ற விளக்கம் இதில் மேலும் விளக்கப் பெறுவதால் அதன்பின் இது வைக்கப் பெற்றது, என்க.

**உ௩௯. வசையிலா வண்பயன் குன்றும்; இசையிலா**
**யாக்கை பொறுத்த நிலம். - 239**

**பொருள்கோள் முறை:**

***இசையிலா யாக்கை பொறுத்த நிலம்***
***வசையிலா வண்பயன் குன்றும்.***

**பொழிப்புரை:** புகழ் விளைவிக்காத வெற்றுடம்பைச் சுமந்து நிற்கும் நிலமும், தாழ்வில்லாமல் வளமான பயனைத் தந்துகொண்டிருந்த நிலையில் குன்றி வெறுநிலமாய்ப் போய்விடும்.

**சில விளக்கக் குறிப்புகள்:**

1) ***இசைஇலா யாக்கை பொறுத்த நிலம் :*** புகழ் விளைவிக்காத வெற்றுடம்பைச் சுமந்து நிற்கும் நிலமும்.

இசைஇலா யாக்கை: புகழை விளைவிப்பதற்கு உரியதாகி மக்களது உடலைப் பெற்றிருப்பினும், அதை விளைவிக்காததால் வெறும் உடம்பாகப் போயினதைச் சுட்ட, யாக்கை என்றார்.

பொறுத்த நிலம்: அத்தகவில்லாத வெறும் உடம்பைச் சுமந்து கொண்டிருக்கும் நிலம்.

2) ***வசையிலா வண்பயன் குன்றும் :*** தாழ்வில்லாமல் வளமான பயனைத் தந்து கொண்டிருந்த நிலைகுன்றி - குறைந்து - வெறுநிலமாய்ப் போய்விடும்.

- வசையிலா வண்பயன் - தாழ்வில்லாதபடி வளமான பயனைத் தந்து கொண்டிருந்த நிலையில்.

- குன்றும் : குறைவுபட்டுப்போய் வெறுநிலமாய்ப் போய்விடும்.

- இசையாகிய உடலுக்குரிய விளைவு குறையவே, அது வெற்றுடலாயிற்று.

எனவே,

- அந்த வெறும் உடலைச் சுமந்த நிலமும், முன்னர் நல்ல வளமுடையதாக இருப்பினும், விளைவு குறைந்து வெறுநிலமாகப் போய்விடும், என்றார்.
- வெறுநிலமாகப் போய்விடுதல் வளத்தில் குன்றுதல்.
- வளமான விளைவைப் பெற்றவர்கள், தாமே உண்டு உண்டு விளைவைத் தீர்த்து, மேலும் விளைவு முயற்சியின்றி வாழ்க்கைக் களிப்பையே பெரிதாகக் கருதி விளைவெலாம் துய்த்து வந்ததால், மேலும் விளைவின்றி வெறுநிலமாய்ப் போனது என்றார், என்க.

**'இசைபட வாழ்பவர் செல்வம் போலக்**
**காண்தொறும் பொலியும்'** - நற்: 217:1-2

- புகழை உடலுக்கு விளைவாக்கியவர், புகழற்ற வெற்றுடலைச் சுமந்த நிலமும் வெறுநிலம் என்றார்.
- இதனால், புகழுக்குரிய வகையில் முயற்சியும், செயலும் இன்றிப் போவது, விளைவுக்குரிய நிலமும் விளைவில்லாமற் போவதுபோல் என்று விளக்கினார், என்க.
- ஒரு நிலம் விளைந்தால்தான் அது புகழ்பெறும். அதுபோல் ஓர் உடல் முயற்சியும் செயலும் கொண்டு உழைத்தால்தான் அது புகழ்பெறும், என்றார்.
- புகழ் விளைவது, பயிர் விளைவு போன்றது என்பதும், புகழற்ற உடல், விளைவற்ற நிலம் என்பதும் ஈண்டு உற்று நோக்கி மகிழத்தக்கன.

3) புகழில்லா யாக்கை, விளைவில்லா நிலம்போல், என்று கூறி, முன்னையதில் கூறிய 'வசையென்ப வையத்தார்க்கு' என்று உலகத்தொடு பொருந்தியதை இதில் இயைபு படுத்தியதால், அதன்பின் இது வைக்கப் பெற்றது.

**'இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்**
**நிலமென்னும் நல்லாள் நகும்'** -1040

**'நாடா கொன்றோ காடா கொன்றோ**
**அவலா கொன்றோ மிசையா கொன்றோ**
**எவ்வழி நல்லவர் ஆடவர்**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே'** - புறம்:187

- என்றார், பிறரும்.

## உ௪0. வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய வாழ்வாரே வாழா தவர். - 240

பொருள்கோள் முறை: இயல்பு.

**பொழிப்புரை:** *ஒருவர் வசையில்லாத புகழ்பெற்று வாழ்வதனால்தான் வாழ்பவர் என்னும் பெருமை பெறுவார். புகழ் இல்லாமல் வெற்று வாழ்க்கை நடத்துபவர் வாழ்ந்தும் வாழாதவரே.*

சில விளக்கக் குறிப்புகள்:

*1)* **வசைபொழிய வாழ்வாரே வாழ்வார் :** *ஒருவர் வசையில்லாத புகழ்பெற்று வாழ்வதனால் தான் வாழ்பவர் என்னும் பெருமை பெறுவார்.*

*- வசையொழிய: வசையில்லாத புகழ்நிலை.*

*- வாழ்வாரே வாழ்வார்: புகழ்பெற்று வாழ்வதனால்தான் வாழ்பவர் என்னும் பெருமை பெறுவார்.*

*- அவர்தாம் வாழ்வாங்கு வாழ்பவர் ஆவார். என்னை?*

**'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர்'** - **50**

**'அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரந்தளிர்த் தற்று'** - **78**

**'அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல**
**இல்லாகித் தோன்றாக் கெடும்'** - **479**

**'மருந்தோமற்று ஊன் ஒம்பும் வாழ்க்கை பெருந்தகைமை**
**பீடழிய வந்த விடத்து'** - **968**

*- என்றார் ஆகலின்.*

**'ஈவாரைக் கொண்டாடி ஏற்பாரைப் பார்த்துவக்கும்**
**. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .**
**வாழ்வாரே வாழ்வார் எனப்படுவார்.'** - **பரி. திரட்டு:12:1-3**

*- என்றார் பிறரும்.*

*2)* **இசையொழிய வாழ்வாரே வாழாதவர்:** *புகழ் இல்லாமல் வெற்று வாழ்க்கை நடத்துபவர் வாழாதவரே.*

*- இசை ஒழிய: புகழ் இல்லாமல்.*

*- புகழ்க்குரிய ஈகை, தொண்டு, அருஞ்செயல், கல்வி, வீரம் முதலியவற்றுள்*

ஒன்றையும் செய்யாமல், வெறுமனே உண்டல், உடுத்தல், உறங்கல், துய்த்தல் முதலிய அஃறிணை உயிரியக்க முறையில் வாழ்ந்து மறைபவர் எல்லாரும் வெற்று வாழ்க்கை நடத்துபவரே, என்றார். என்னை?

1. 'உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு' - 993

2. 'நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு' - 994

3. 'பெருமை உடையவர் ஆற்றுவர் ஆற்றின்
அருமை உடைய செயல்' - 975

4. 'கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடிஉண் டாயினும் இல்' -1005

5. 'ஊண்உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு' -1012

- என்றார், என்க.

1. 'திரையவித்து நீராடல் ஆகா; உரைப்பார்
உரையவித்து ஒன்றுஞ்சொல் இல்லை - அரைசராய்ச்
செய்தும் அறமெனினும் ஆகா(து) உளவரையால்
செய்தவற்கே ஆகும் திரு' - அறநெறிச். 29

2. 'உழந்துழந்து கொண்ட உடம்பினைக் கூற்றுண்ண
விழைந்திழைந்(து) எங்கணும் தோன்றிச் - சுழன்றுழன்ற
சுற்றத்தார் அல்லாதார் இல்லைகாண் நன்னெஞ்சே!
செற்றத்தால் செய்வ தெவன்' - அறநெறிச் :102

3. 'மக்களுடம்பு பெறற்கரிது; பெற்றபின்
மக்கள் அறியும் அறிவரிது - மக்கள்
அறிவறிந்தார் என்பார் அறத்தின் வழுவார்
நெறிதலை நின்றொழுகு வார்' - அறநெறிச்:212

4. 'உலவாமுன் ஒப்புரவு ஆற்றுமின் யாரும்
நிலவார் நிலமிசை மேல்' - நாலடி:22:3-4

5. 'யாக்கையை யாப்புடைத்தாய்ப் பெற்றவர் தாம்பெற்ற
யாக்கையால் ஆய பயன்கொள்க - யாக்கை
மலையாடு மஞ்சுபோல் தோன்றி மற்றாங்கே
நிலையாது நீத்து விடும்' - நாலடி: 28

6. 'புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை - இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேளறச்
சென்றான் எனப்படுத லால்' - நாலடி: 29

7. 'அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனும் ஆற்றவே கொள்க - கரும்பூர்ந்த
சாறுபோல் சாலவும் பின்னுதவி மற்றுஅதன்
கோதுபோல் போகும் உடம்பு' - நாலடி:34

8. 'தாம்செய் வினையல்லால் தம்மொடு செல்வதுமற்(று)
யாங்காணும் தேரிற் பிறிதில்லை - ஆக்குந்தாம்
போற்றிப் புனைந்த உடம்பும் பயனின்றே
கூற்றம்கொண் டோடும் பொழுது' - நாலடி: 120

9. 'கொலைஞர் உரையேற்றித் தீமடுப்ப ஆமை
நிலையறியா(து) அந்நீர் படிந்தாடி யற்றே
கொலைவல் பெருங்கூற்றம் கோள்பார்ப்ப ஈண்டை
வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு' - நாலடி:331

10. 'பெருங்கடல் ஆடிய சென்றார் ஒருங்குடன்
ஓசை அவிந்தபின் ஆடுதும் என்றற்றால்
இற்செய் குறைவினை நீக்கி அறவினை
மற்றறிவாம் என்றிருப்பார் மாண்பு' - நாலடி: 332

11. 'கற்றவும் கண்ணகன்ற சாயலும் இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும் - தாமுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்தில் தணியாத
பித்தனென்(று) எள்ளப் படும்' - நாலடி:340

12. 'நல்லவை நாள்தொறும் எய்தார்; அறஞ்செய்யார்;
இல்லாதார்க்(கு) யாதொன்றும் ஈகலார் - எல்லாம்
இனியார் தோள் சேரார்; இசைபட வாழார்;
முனியார்கொல் தாம்வாழும் நாள்' - நாலடி:338

13. 'தோற்றம் அரிதாய மக்கட் பிறப்பினால்
ஆற்றுந் துணையும் அறஞ்செய்க' - பழமொழி: 137

14. 'உயர்குடி நனிஉள் தோன்றல்
ஊனமில் யாக்கை யாதல்,

**மயர்வறு கல்வி கேள்வி**
**தன்மையால் வல்லார் ஆதல்,**
**பெரிதுணர் அறிவே ஆதல்,**
**பேரறங் கோடல் - என்றாங்(கு)**
**அரிதிவை பெறுதல் ஏடா**
**பெற்றவர் மக்கள் என்பார்!** - **வளையாபதி**

15. **'வித்திநல்லறம் விளைந்த அதன்பயன்**
**துய்ப்போர் தம்மனைத் துணிச்சிதர் உடுத்து**
**வயிறுகாய் பெரும்பசி அலைத்தற் கிரங்கி**
**வெயிலென முனியாது புயலென மடியாது**
**புறங்கடை நின்று புன்கண் கூர்ந்துமுன்**
**அறங்கடை நில்லாது அயர்வோர் பலரால்'** - மணிபாத்திர:108-113

16. **'பிறத்தலும் மூத்தலும் பிணிப்பட் டிரங்கலும்**
**இறத்தலும் உடையது இடும்பைக் கொள்கலம்**
**மக்கள் யாக்கை இதுவென வுணர்ந்து**
**மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன்' - மணி.உதய.:136-139**

- என்று பிறரும் வாழ்க்கைப் பயனை நன்கு எடுத்துரைத்தலைக் கொண்டு வாழ்க்கை வெறுமையாய்ப் புகழின்றிக் கழிதல் இழிவாம் என்றுணர்தல் வேண்டும்.

3) புகழ்பெற முயலாது வாழ்தல் வாழ்க்கையன்று, அத்தன்மையினர் வாழ்பவரும் அல்லர், என்று இவ்வதிகாரத்தை முடித்துக் கூறியதால், இக்குறள் இங்கு இடங்கொண்டது.

4) இனி, 'இல்வாழ்க்கை' தொடங்கி, 'புகழ்' ஈறாகவுள்ள 'இல்லறவியலின்' இருபது அதிகாரங்களும் இத்துடன் முற்றுப் பெறுவதீ 'இல்லறவியல்' முற்றுப் பெற்றது குறித்தது.

- முன்னர், 'தீவினையச்சம்' அதிகாரத்தின் முன்னுரையில் கூறியபடி, புறப்புறவியல், இப் 'புகழ்' அதிகாரத்துடன் முடிவடைகிறது. (மீண்டும் அம்முன்னுரையின் இறுதிப் பகுதியைப் பார்க்க).

- இக்கால், 'இல்லறவிய'லின், ஐந்துகூறுகளாக நாம் பகுத்துக்கொண்ட,

- அகஅகவியல் கூறில் உள்ள, இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு - ஆகிய மூன்று அதிகாரங்களும், இல்லறவியல் அமைப்பையும்,

- அகவியல், கூறில் உள்ள, அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந்நன்றியறிதல் - ஆகிய நான்கு அதிகாரங்களும்,

- அகப்புறவியல் கூறில் உள்ள நடுவுநிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையுடைமை ஆகிய ஐந்து அதிகாரங்களும்,

- புறவியல் கூறில் உள்ள, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினையச்சம் ஆகிய ஐந்து அதிகாரங்களும் சேர்ந்து மொத்தம் பதினாறு அதிகாரங்களும், இல்லறவியல் அறங்களையும்,

- புறப்புறவியல் கூறில் உள்ள ஒப்புரவறிதல், ஈகை ஆகிய முன்னிரண்டு அதிகாரங்களும், இல்லறவியல் நோக்கத்தையும்,

இறுதி ஓர் அதிகாரமாகிய புகழ் அதிகாரம் இல்லறவியல் பயனையும், கூறுவனவாகக் கொள்க.

- ஆக, இல்லறவியல், இல்வாழ்க்கையில் தொடங்கி இல்லலறவியலின் அறங்களில் நடந்து, இல்லறவியல் நோக்கத்தை நிறைவேற்றி, இல்லறவியலின் பயனாகிய புகழில் முடிவடைகிறது என்க.

- எனவே, இல்லறவியலின் மொத்தப் பயனே புகழ்தான். அதுதான் வாழ்க்கையின் பயனுமாகும் என்க.

- இவ்வகையில் இல்லறவியல் நிறைவுற்றதாம், என்க.

5) இல்லறத்தைப் பற்றி நூலாசிரியரின் முடிவான கொள்கை:

**'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை'** - **49**

**'அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்**
**போஒப் பெறுவது) எவன்'** - **46**

**'ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை**
**நோற்பாரின் நோன்மை உடைத்து'** - **48**

**'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப் படும்'** - **50**

**'வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய**
**வாழ்வாரே வாழா தவர்'.** - **240**

**19-07-93**
**இரவு 9.30**
**சென்னை நடுவண் சிறை.**



# பாவலரேறு பெருஞ்சித்திரனார் அவர்களின் நூல்கள்

| | |
|---|---|
| ● பாவியக்கொத்து | 22.00 |
| ● ஐயை | 30.00 |
| ● கழுதை அழுத கதை | 35.00 |
| ● கொய்யாக்கனி | 25.00 |
| ● கற்பனை ஊற்று | 40.00 |
| ● திருக்குறள் மெய்ப்பொருளுரை - தொகுதி 1 | 100.00 |
| ● திருக்குறள் மெய்ப்பொருளுரை - தொகுதி 2 | 120.00 |
| ● திருக்குறள் மெய்ப்பொருளுரை - தொகுதி 3 | 120.00 |
| ● திருக்குறள் மெய்ப்பொருளுரை - தொகுதி 4 | 100.00 |
| ● வேண்டும் விடுதலை | 120.00 |
| ● பெரியார் | 40.00 |
| ● கனிச்சாறு(பெருஞ்சித்திரனார் பாடல்கள்) | |
| - முதல் தொகுதி | 50.00 |
| - 2ஆம் தொகுதி | 90.00 |
| ● நூறாசிரியம் | 100.00 |
| ● தன்னுணர்வு | 5.00 |
| ● பாவேந்தர் பாரதிதாசன் | 25.00 |
| ● இலக்கியத் துறையில் தமிழ் வளர்ச்சிக்கான ஆக்கப்பணிகள் | 5.00 |
| ● ஆரியப் பார்ப்பனரின் அளவிறந்த கொட்டங்கள் | 100.00 |
| ● சாதி ஒழிப்பு | 40.00 |
| ● செயலும் செயல் திறனும் | 90.00 |
| ● ஓ!ஓ! தமிழர்களே! | 11.00 |
| ● தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் | 10.00 |
| ● நெருப்பாற்றில் எதிர் நீச்சல் | 6.00 |
| ● இளமை விடியல் | 50.00 |
| ● இட்ட சாவம் முட்டியது | 10.00 |
| ● மொழி ஞாயிறு பாவாணர் | 50.00 |
| ● எண் சுவை எண்பது | (அச்சில்) |
| ● மகபுகுவஞ்சி | (அச்சில்) |
| ● அறுபருவத் திருக்கூத்து | (அச்சில்) |
| ● கனிச்சாறு (பெருஞ்சித்திரனார் பாடல்கள்) | |
| - (தொகுதி 3 முதல் 8 வரை) | (அச்சில்) |
| ● பாவலரேறு பெருஞ்சித்திரனார் கட்டுரைகள் | (அச்சில்) |
| ● வாழ்வியல் முப்பது | (அச்சில்) |
| ● தமிழீழம் | (அச்சில்) |

*மற்றும்*

| | |
|---|---|
| ● பாவலரேறு நினைவேந்தல் மலர் (முதலமாண்டு) | 60.00 |
| ● பாவலரேறு வாழ்க்கைச் சுருக்கம் | 40.00 |
| ● மொழிஞாயிறு பாவாணர் மலர் | 100.00 |